# உலக மொழிகளில் தமிழ்ச் சொற்களும் இலக்கணக் கூறுகளும்

ப. சண்முகசுந்தரம்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# உலக மொழிகளில் தமிழ்ச் சொற்களும் இலக்கணக் கூறுகளும்

ப. சண்முகசுந்தரம்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை
மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை - 600 113

சி.மா. துரை அரசு அறக்கட்டளைச் சொற்பொழிவு
(அறக்கட்டளை நிறுவியோர் : திரு. சி.மா. துரை அரசு)

வரிசை எண். 1

## BIBLIOGRAPHICAL DATA



| | | |
|---|---|---|
| Title of the Book | : | Ulaka mol̲ikaḷil tamil̲c cor̲kaḷum ilakkaṇak kūr̲ukaḷum |
| Author | : | Mr. P. Shanmugasundaram, D E A (France)<br>Professor of French<br>France |
| General Editor | : | Dr. K.A. Gunasekaran<br>Director<br>International Institute of Tamil Studies<br>Tharamani, Chennai-600 113 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus<br>Chennai - 600 113<br>Ph: 22542992 |
| Publication No. | : | 718 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2011 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Point |
| No. of Pages | : | viii + 184 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs.85/- (Rupees Eighty Five Only) |
| Printed by | : | Sri Venkateswara Offset<br>New No.47 (Old No.20),<br>Rajanga Mathya Street<br>Vadapalani, Chennai-600 026 |
| Subject | : | Tamil terms and grammatical aspects in the world languages |

**பேரா. முனைவர் கரு. அழ. குணசேகரன்**
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113

## அணிந்துரை

> தொல்காப்பியம் கி.மு.1000 அளவில் தோன்றியிருக்கலாம். உயர்த்திக் கூறும் சொல்லாட்சியை 'வழக்கினாகிய உயர் சொற்கிளவி இலக்ககண மருங்கின் சொல்லாறல்ல' என்கிறார் தொல்காப்பியர். இவ்விதச் சொல்லாட்சி திராவிட மற்றும் வட இந்திய மொழிகளில் காணப்படாததால் இது ஐந்திர காலத்து சொல்லாட்சி அன்று என்று தெரிகிறது. ஆதலின் தொல்காப்பியத்தின் மேல் வரம்பு கி.மு. 1000க்கு மேல் போகாது.

எனுமாறு கால ஆராய்ச்சியைப் பல சான்றாதாரங்கள் காட்டி எழுதியுள்ளார்.

> எட்வர்டு கிளார்டு (Edward Claurd) என்பவர் தாம் எழுதிய யூதர் வரலாற்றில் மங்கோலியர், பின்னிசு என்னும் இனத்திற்கு மூல இனத்தினராக இருந்தவர்கள். ஈழ நாட்டிலிருந்து பாரசீக வளைகுடாவைச் சூழ்ந்து குடியேறி இருந்தார்கள் என்றும், சுமேரியர் என்னும் இனத்திற்கு முன்னும் எகிப்து நாட்டார் தலையெடுப்பதற்கு முன்னும் அவர்கள் நகரங்களையும் இராச்சியங்களையும் உண்டாக்கினார்கள் எனவும், இவ்விராய்ச்சி யங்களுக்கு ஊர் எனவும் பெயர்

என்கிறார் உரோமர்களிடையே அவர்களின் மூதாதையரான என்னிசு கிழக்கிலிருந்து கடல் வழியாக நீந்தி வந்தான் என்ற கதை இருக்கிறது. அறிஞர் கால்டுவெல் வடமொழிக்குத் தமிழ் முற்பட்டது என்றும் இத்தாலி தேசத்தில் பல நூற்றாண்டுகளுக்கு முன் தமிழர்களுடன் தொடர்புடைய இனத்தினர் இருந்தார்களெனவும் கூறுவார்.

- என்பன போன்ற உலகின் வரலாற்றுச் சுவடுகளிலிருந்தெல்லாம் அரிய சான்றுகளை எடுத்துக் காட்டி **உலக மொழிகளில் தமிழ்ச் சொற்களும் இலக்கணக்**

**கூறுகளும்** எனும் இந்த நூலைத் திரு. ப. சண்முகசுந்தரம் சிறப்புற எழுதியுள்ளார். இந்த அறிய எழுத்துருவைப் பிரான்சு நாட்டிற்கு 2011இல், புலம் பெயர் தமிழர் பொங்கல் விழாவுக்கு என்னை அழைத்திருந்த போது. அலென் ஆனந்த் எனும் நண்பர் எனக்கு இந்நூலாசிரியரை அறிமுகப்படுத்தியதன் விளைவாகப் பெற நேர்ந்தது.

இந்நூல் பலருக்கும் பல ஆய்வுச் சிந்தனைகளை உருவாக்கலாம். உருவாக்க வழி செய்யும் எனும் நம்பிக்கை உண்டு. இந்த ஆய்வு நிறுவனம் இந்த நூலை வெளியிடுவதில் பெருமை கொள்கிறது.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையைக் காட்டிவரும் **இந்து சமய அறநிலையம் மற்றும் தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் துறை அமைச்சர் மாண்புமிகு எஸ்.பி. சண்முகநாதன்** அவர்களுக்குத் தமிழுலகம் என்றும் நன்றிக் கடன்பட்டுள்ளது.

இந்நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் **தமிழக அரசின் தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும் செய்தித் துறைச் திரு. து. நா. இராமநாதன் இ.ஆ.ப.** அவர்களுக்கும் நன்றி.

இச்சொற்பொழிவினை மெய்ப்புத் திருத்தம் செய்த முனைவர் ஆ. தசரதன் அவர்களுக்கும், இச்சொற்பொழிவு மற்றும் நூல் வெளியீடு தொடர்பான அனைத்து ஏற்பாடுகளையும் செய்த நிறுவனப் பணியாளர் மற்றும் கணிப்பொறியாளர் திருமதி பா. கௌசல்யா ஆகியோருக்கும் என் நன்றிகள் என்றுமுண்டு. இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த ஸ்ரீ வெங்கடேஸ்வரா ஆப்செட் அச்சகத்தாருக்கு என் பாராட்டுகள்.

இயக்குநர்

## ஆசிரியரைப் பற்றி. . .



புதுச்சேரியைச் சேர்ந்த ப. சண்முகசுந்தரம் 1936 அக்டோபர் 19இல் பிறந்தவர். இவர் ஆரம்பப் பள்ளியிலிருந்து மேனிலைப் பள்ளி வரை புதுச்சேரியில் பிரஞ்சு அரசால் நடத்தப்பட்டு வரும் Lycée françaisஇல் பிரஞ்சு மொழியைப் படித்தவர். புதுச்சேரியில் ஏழு ஆண்டுகள் ஆசிரியராய் இருந்து விட்டு, கல்லூரிப் படிப்பைப் பிரான்சில் தொடர்ந்து D.E.A. (தமிழ்நாட்டு M.Phil) வரை படித்தவர். பிரான்சில் 1966 முதல் 1998 வரை பிரஞ்சுக் கல்வித் துறையில் ஆசிரியர், பேராசிரியர், புள்ளியல் தயாரிப்பாளர் போன்ற பதவிகளில் இருந்து விட்டு ஓய்வு பெற்றவர். இவர் பல ஆண்டுகள் போதனா முறை ஆய்வுக் குழுவில் பண்யாற்றியவர். 1982இல் பிரஞ்சு அரசு பிரஞ்சுக் கல்வித் தரத்தை மதிப்பீடு செய்ய ஒரு குழு அமைத்தது. அதில் இவரும் ஒரு முக்கியப் பொறுப்பாளராக நியமிக்கப்பட்டார்.

இவர் பிரான்சு நாட்டில் வாழும் தமிழ்ப் பிள்ளைகளும், தமிழ்க் கற்க விரும்பும் பிரஞ்சுக்காரர்களும் பிரஞ்சு மூலம் தமிழ் படிப்பதற்காக,

- சிறுவர் சித்திரச்சுவடி (Tamoul pour enfants - Children's picture book)
- எளிதில் தமிழ்க் கற்கும் முறை (Le tamoul facile)
- 60 நாள்களில் தமிழ் (Tamoul enn 60 jours)
- 40 பாடங்களில் தமிழ் (Tamoul en 40 leçons)
- தமிழ் இலக்கணம் (La grammmaire tamoule)

போன்ற நூல்களை வெளியிட்டிருக்கிறார்.

பிரஞ்சுக்காரர்கள் தமிழ்மொழியைப் பற்றி நன்கு தெரிந்து கொள்வதற்காக, தமிழ்மொழி, தமிழ் இலக்கிய வரலாறு (Histoire

de la langue et de la littérature tamoule) என்ற நூலைப் பிரஞ்சு மொழியில் தமிழ் மொழிபெயர்ப்புடன் எழுதி வெளியிட்டிருக்கிறார்.

தமிழ்நாட்டிலும், பிரான்சிலும் உள்ள தமிழர்கள் தமிழ் மூலம் பிரஞ்சு மொழி கற்பதற்காக

- எளிதில் பிரஞ்சு கற்கும் முறை (Le français facile)
- 90 நாள்களில் பிரஞ்சு மொழி (Le français en 90 jours)
- 60 நாள்களில் பிரஞ்சு பேசுங்கள் (Parlez le français en 60 jours)
- பிரஞ்சு இலக்கண விளக்கம் (La grammaire française)

போன்ற நூல்களையும், தமிழர்கள் ஆங்கிலம் மூலம் பிரஞ்சு கற்பதற்காக

- French in 90 days

என்ற நூலையும் எழுதியிருக்கிறார். இவை தவிரப் பிரஞ்சு இலக்கிய வரலாறு என்ற நூலையும் தமிழில் எழுதியிருக்கிறார்.

இவர் Trait-d'union என்ற பிரஞ்சு மாத இதழில்

- உலக மொழிகளில் தமிழ்ச் சொற்களும், இலக்கணக் கூறுகளும் (Mots et structures tamouls dans les langues du monde)
- தேவநேயப் பாவாணர் பற்றிய கட்டுரை (Devaneyap paavaanar)
- சமற்கிருதம் பற்றிய உண்மைகள் (Les vérités sur le sanscrit)
- இந்தியச் சிந்தனையில் தமிழ்ச் சிந்தனையின் முக்கியத்துவம் (Importance de la pensée tamoule dans la pensée indienen)
- தென்கிழக்காசியாவில் பல்லவர்-சோழர்களின் செல்வாக்கு (Influence des rois tamouls en Asie du sud -est)
- தமிழரின் தாயகம் (Orgine des dravidiens)

போன்ற கட்டுரைகளைப் பிரஞ்சு மொழியில் எழுதியிருக்கிறார்.

# உள்ளே

# 1. திராவிடம் என்றால் தமிழ்

இந்நூலில் திராவிட என்ற சொல் அடிக்கடி வருவதால், அதன் ஆரம்பக்கால, பிற்காலப் பொருள்கள் இப்பகுதியில் விளக்கப்படுகின்றன.

வால்மீகி இராமாயணம், மனுநூல், பாரதம், பாகவதம் போன்ற வடமொழி நூல்களில் திராவிடர், திராவிடம், திரமிளம் போன்ற சொற்கள் காணப்படுகின்றன. தமிழ் என்ற சொல்லுக்கு நேரடியான வடசொல் திராவிடம் என்பதை முதன் முதலில் அறிவித்த மேல்நாட்டவர் கால்டுவெல் பாதிரியார் ஆவார். இதை அவர் திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் என்ற தம் நூலின் முகவுரையில் குறிப்பிட்டிருக்கிறார். திராவிடம் என்ற சொல் தமிழ் என்று திரிந்திருக்கலாம் என்று கருதுகிறார். திராவிடம், திரமிடம், திரமிளம், திரமிளோ, தமிளோ, தமிழ் எனப் படிப்படியாக மாறியிருக்கலாம் என்பது அவர் கருத்து.

திராவிடம் என்ற சொல் தமிழை அல்லது இந்தியாவின் தென்பாகத்தில் பேசப்பட்ட மொழியைக் குறித்தது என்பதற்கு இந்திய வரலாற்றிலும், பழைய இலக்கியங்களிலும் ஆதாரங்கள் நிறைய இருக்கின்றன. அவைகளைச் சற்று விரிவாகப் பார்ப்போம்.

1. மகாவம்சம் என்ற பாலி இலக்கியத்தில் வரும் தமிள (Damila) என்ற சொல் தமிழைக் குறிக்கிறது.

2. ஸ்வேதாம்பர சைனர் என்ற பிராகிருதி இலக்கியத்திலும் தமிள என்ற சொல் காணப்படுகிறது.

   தமிட என்ற சொல் சைனர்களின் பிராகிருத மொழி இலக்கியத்தில் தவிள என்றும், ஆரம்பக் காலச் சமற்கிருத இலக்கியங்களில் தவிட என்றும் குறிக்கப்படுகிறது. பிற்காலத்தில் சமற்கிருதம் இந்தியாவில் நன்கு வேரூன்றிய காலத்தில் தமிள, தமிட ஆகிய சொற்கள் த்ரமிள, த்ரமிட என்று சமற்கிருத உச்சரிப்பைப் பெற்றன. இதற்கு ஆதாரமாகப் பின் வரும் எடுத்துக்காட்டுகளைக் கூறலாம்.

3. த்ரமிள என்ற சொல் வட இந்தியாவில் பாதாமி அருகில் உள்ள மகா கூடத்துக் கற்றூண்களில் காணப்படுகிறது. இத்தூண்கள் கி.பி. 597-608ல் செதுக்கப்பட்டவை.

இச்சொல் பழைய மலையாள, சமற்கிருத புராணங்களிலும், தாராநாத்தின் புத்தமத வரலாற்றிலும் காணப்படுகிறது.

4. த்ராவிள என்ற சொல் சைனக் கணங்கள் என்ற நூலிலும் காணப்படுகிறது.

5. த்ரமிட என்ற சொல் தமிழ்த் திருவாய்மொழியின் சமற்கிருத மொழிபெயர்ப்பிலும் காணப்படுகிறது. பிரம்ம சூத்திரத்துக்கு உரை எழுதிய ஒருவரைக் குறிப்பிடும் போது இராமானுஜர் த்ரமிட என்ற சொல்லைப் பயன்படுத்தி யிருக்கிறார்.

இந்திய இலக்கியங்களில் த்ராவிட என்ற சொல் ஆரம்பக் காலத்தில் பெரும்பாலும் தமிழையும், சிறுபான்மை திராவிட மொழிகளையும் குறித்தது என்பதற்குச் சில சான்றுகள் கீழே கொடுக்கப்படுகின்றன.

I -திராவிட என்ற சொல் தமிழை மட்டும் குறிப்பதற்கான சான்றுகளாவன:

அ. கி.மு. 5ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த திரிபிடகா என்ற புத்த வாய்மொழி இலக்கிய மூலம் இந்தியாவில் அந்தக் காலத்தில் மூன்று முக்கிய மொழிகள் இருந்ததாகவும் அவை மாகதி, அந்தகா, தமிள ஆகியவை ஆகும் என்று அறிகிறோம். இங்கு அந்தகா ஆந்திரத்தையும், தமிள தமிழையும் குறிக்கின்றன.

ஆ. திரிபிடகா இலக்கியத்துக்கு, கி.பி. 5ஆம் நூற்றாண்டில் உரை எழுதிய தம்ம பாலாவும் அந்தக் காலத்தில் மாகதி, அந்தகா, தமிள ஆகிய மூன்றும்தாம் முக்கிய மொழிகளாக இருந்ததாகக் கூறியிருக்கிறார்.

கி.பி. 3ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பௌத்த மகாயான நூலாகிய லலித விஸ்தாரத்தில் புத்தர் கற்ற பல மொழிகளில் ஐந்தாவதாகத் த்ராவிடி என்று தமிழ் குறிக்கப்பட்டுள்ளது.

கி.பி. 6ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த வராகமிகிரர் தம் நூலில் த்ரவிட என்று தமிழைக் குறிப்பிட்டிருக்கிறார்.

இ. கி.பி. 7ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த குமாரில பட்டரின் தந்திர வர்த்திகாவில் திராவிடாந்திர பாஷா அல்லது திராவிட பாஷா என்ற சொற்றொடர்கள் காணப்படுகின்றன. இவை முறையே தமிழ், தெலுங்கையும் அல்லது தமிழ் மற்ற திராவிட மொழிகளையும் குறிக்கின்றன.

கி.பி. 7ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பட்டபாணன், தன் காதம்பரி என்னும் உரைநடைக் காப்பியத்தில் சந்திரபீடம் என்பவள் காளி கோயிலில் தமிழகத் துறவியைச் சந்தித்த போது

*ஜரத் த்ரவிட தார்மிகஸ்ய இச்சய நிஸ்ருஷ்டை*

என்று வருணித்துள்ளான். இங்கு, த்ரவிட என்ற சொல் தமிழக என்ற பொருளில் கையாளப் பட்டிருக்கிறது.

சமண ஆகம நூலாகிய சுருதாவதாரம் என்னும் சமஸ்கிருத நூலின் ஆசிரியராகிய பூதபலி குறித்து

*தஸ்தெள பூதபலிரபி மதுராயாம் த்ரவிட தேஸான்*

என்ற குறிப்பு வருகிறது. இங்குத் த்ரவிட என்ற சொல் தமிழ் என்ற பொருள் தருகிறது.

ஒரு சிவனடியாரைப் பற்றிக் (திருஞான சம்பந்தரை) குறிப்பிடுகையில் கி.பி. ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஆதி சங்கரர் திராவிட சிசு என்ற சொற்றொடரைப் பயன்படுத்தியிருக்கிறார்.

கி.பி. எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த நாகேஷ் என்பவர் தமிழ் என்ற பொருளில் திராவிட பாஷா என்ற சொல்லைப் பயன்படுத்தியிருக்கிறார்.

தமிழ் ஆழ்வார்களின் பாடல்கள் திராவிட வேதம் என்றும் குறிக்கப்பட்டிருக்கின்றன.

கி.பி. 9ஆம் நூற்றாண்டில் காஞ்சியை ஆண்ட நந்திவர்மன் தமிழ் மன்னர்களைத் திராவிட மன்னர்கள் என்று குறிப்பிட்டிருக்கின்றான்.

கி.பி. 10ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த புலவர் நாகவர்மா சாந்தோம்புதி என்ற கன்னடக் கவிதை பற்றிய நூலில் *திராவிடாந்தர கர்னாடாதி சட் பஞ்சாசத் பாஷைகளுள்...* என்ற தொடரைப் பயன்படுத்தியிருக்கிறார். இங்குத் திராவிட என்ற சொல் தமிழைக் குறிக்கிறது.

கி.பி. 11ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த நாகவர்மனின் கன்னடக் காதம்பரி என்னும் காவியத்தில்,

*ஹாஸ்ய பீபத்ஸாதி நாநா ரஸங்களிம்*
*தொந்தித ஜரத் த்ரவிள தார்மீக ஜனங்களிம்*

என்று தமிழகத் துறவிகளை ஆசிரியர் வருணித்துள்ளார்.

கி.பி. 12ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பால்குரிகி சோமநாதர் என்ற தெலுங்குப் புலவர் பண்டிதராத்ய சரிதத்தில் பருவதப் பரிகரணத்தில்

- அருதெந்தனட்லியம் பரவதேசம்பு
- வருசயி த்ராவிட பாஷ சாங்கமுக

என்று ஸ்ரீ சைலத்துக்குச் செல்லும் தமிழகப் பக்தர்கள் தமிழில் பாடிக்கொண்டு போவதாகத் தெலுங்கில் பாடியிருக்கிறார்.

கி.பி. 14ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் கங்கா தேவியால் இயற்றப்பட்ட மதுர விசயம் என்ற சமஸ்கிருத நூல் தமிழகத்தைத் திராவிட தேசம் என்றும், தமிழ் மன்னர்களைத் திரமிள அரசர்கள் என்றும் குறிப்பிட்டிருக்கிறது.

15ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த மல்லனாரியனின் பாவ சிந்தாரத்னம் என்னும் காவியத்தில்

- த்ரிண்யனுகம திருஞானி சம்பந்திச். . .
- பணிதெயம் த்ராவிடதோளொ ரெதுதம்

என்று திருஞான சம்பந்தர், குலச்சிறையார், மனுநீதிச் சோழன் ஆகியவர்களையும் தமிழையும் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

16ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கன்னட இராஜசேகர விலாசம் என்ற காவியத்தில்

- . . . பிள்ளை நை நாரரீம்
- பாகிர் தெந்தாதி ஆசமம் த்ராவிடபாஷா பேதம்

எனத் தமிழைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

II. திராவிட என்ற சொல் தென்னிந்தியர் அல்லது தென்னிந்திய மொழிகளைக் குறிப்பதற்கான சான்றுகளாவன:

1. மகாபாரதத்தில் இரு முறை சில சத்திரிய இனத்தினர் விரிசாலர் (சூத்திரர்) ஆக ஆக்கப்பட்டனர் என்று வருகிறது. சூத்திர இனத்தவராகப் புன்ராகர், ஓட்ரர், திராவிடர், காம்போஜர், யவனர், சாகர், பரதர், பகால்வர், சீனர், கிராடர், தரதர், கார் போன்றவர்கள் குறிப்பிடப்

படுகிறார்கள். தென்னிந்திய இனத்தைக் குறிப்பிடத் திராவிட என்ற சொல் வருவதால் இது தமிழரை மட்டும் குறிக்காமல் திராவிட இனம் முழுவதையும் குறிக்கிறது.

2. மனு ஸ்ம்ரிதியிலும் இந்த இரண்டு இனங்கள் குறிக்கப்படுகின்றன. இங்கும் திராவிட என்ற சொல் பொதுவாகத் தென்னிந்தியரைக் குறிக்கிறது.

3. பாகவதம் என்ற நூலில் சத்திய விரதன் திராவிடபதி என்று அழைக்கப்படுகிறான். இங்குத் திராவிட என்ற சொல் தென்னிந்தியா முழுவதையும் குறிக்கிறது.

4. கி.பி. 14ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த லீலா திலகம் என்ற மலையாள இலக்கண நூலில் திராவிட என்ற சொல் தமிழ், மலையாளம், கன்னடம், தெலுங்கைக் குறிக்கிறது.

மேலே கூறப்பட்ட சான்றுகளிலிருந்து திராவிட(ம்) என்ற சொல் பழங்காலத்தில் தமிழை மட்டும் குறித்தது என்றும், கன்னடம், மலையாளம் போன்ற மொழிகள் தோன்றிய பிறகு தென்னிந்திய முக்கிய நான்கு மொழிகளையும் குறிக்க ஆரம்பித்தது என்றும் தெரிய வருகிறது. தற்காலத்தில் திராவிட என்ற சொல் தமிழிலிருந்து பிரிந்த மொழிகள் அனைத்தையும் அல்லது அத்துடன் தொடர்புள்ள பிற மொழிகளையும் குறிக்கிறது.

இதுவரை தமிழ் என்ற சொல் பல முறை திரிந்து திராவிட(ம்) என்ற வடிவம் பெற்றது என்று பார்த்தோம். அடுத்து, தமிழ் என்ற சொல் எப்படி உண்டாயிற்று என்று பார்ப்போம்.

சில அறிஞர்கள் திராவிடர் மத்திய தரைக் கடல் நாடுகளிலிருந்து இந்தியாவுக்கு வந்தவர்கள் என்று கூறுகிறார்கள். மத்திய தரைக் கடல் பகுதியில் உள்ள கிறீத் தீவு பழங்காலத்தில் - கிரேக்கர்களுக்கு முன்தெர்மிலை என்ற இனத்தவரால் வசிக்கப்பட்டது என்றும் அவர்களின் மொழியான ஏஜியன் மொழி திராவிட மொழியோடு ஒத்திருக்கிறது என்றும் சொல்கிறார்கள். இந்தக் கூற்றை அடிப்படையாக வைத்து, சுனித் குமார் சாட்டர்ஜி என்ற இந்திய மொழியியல் வல்லுனர், தமிழ் என்ற சொல் தெர்மிலை என்ற சொல்லிலிருந்து வந்திருக்கலாம் என்று நம்புகிறார். அவர் தெர்மிலையிலிருந்து, த்ரமிலி, த்ரவிட, த்ரமிட, த்ரமிள, த்ரமிழ, தமிள, தமிழ, தமிழ் என்று உண்டாகியிருக்கலாம் என்கிறார். ஆனால் ஸ்டென் கொனோவ்

தமிழ் என்ற சொல்லிலிருந்துதான் திராவிட என்ற சொல் தோன்றியதாகக் கருதுகிறார். A.L. பாஷம் என்பவர் தமிழ் என்ற சொல் தமிழ், தமிழ, தமில, த்ரமிள, த்ரமிட, த்ரவிட என்று மாறியதாகக் கூறுவார்.

தமிழ், தமிழகம் என்ற சொற்கள், தொல்காப்பியத்திலும், சங்க நூல்களிலும் பல இடங்களில் காணப்படுகின்றன. அவையாவன:

வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத்
தமிழ் கூறும் நல்லுலகத்து
வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின்
எழுத்தும் சொல்லும் பொருளும் நாடிச்
செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு

தொல்காப்பியப் பாயிரம்

இயற்சொல் தாமே
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் வழாமை இசைக்கும். . .

தொல்காப்பியம்-சொல்லதிகாரம்:
எச்சவியல் சூத்திரம் 2

செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்
தம் குறிப்பினவே திசைச் சொல் கிளவி

- தொல்காப்பியம் சொல்லதிகாரம், எச்சவியல் சூத்திரம்:4

தமிழ் தலை மயங்கிய தலையாலங்கானத்து. . .

புறநானூறு 19:வரி 2

அறியாது ஏறிய என்னைத் தெறுவர
இருபாற் படுக்கும் நின் வாள் வாய் ஒழித்ததை
அதூஉம் சாலும் நற்றமிழ் முழுதறிதல் புறம். 50:8-10

தமிழ் கெழு கூடல் தண்கோல் வேந்தே

புறநானூறு 58:13

வையக வரைப்பில் தமிழகம் கேட்ப புறம் 168:18

தமிழ்கெழு மூவர் காக்கும்
மொழிபெயர் தேயத்த பன்மலை இறந்தே

அகநானூறு களிற்றியானை நிரை
பாட்டு 31 வரிகள் 14-15

தமிழ் நிலை பெற்ற தாங்கரு மரபின்
மகிழ் நனை மறுகின் மதுரையும் வறிதே

சிறுபாணாற்றுப்படை 66-67

**இமிழ் கடல் வரைப்பிற் றமிழக மறிய. . .**
**தமிழ் முழுதறிந்த தன்மையனாகி. . .**
**தமிழ் வரம்பறுத்த தண்புனல் நன்னாட்டு. . .**
**தென் தமிழ்நாடு ஒருங்கு காண. . .**
**இமிழ் கடல் வேலியைத் தமிழ் நாடாக்கிய . . .**

எனச் சிலப்பதிகாரத்திலும், சம்புத் தீவினுட் டமிழக மருங்கில், என மணிமேகலையிலும், இமிழ் கடல் வேலித் தமிழகம் விளங்க, எனப் பதிற்றுப்பத்திலும் வருகிறது. பொதுவாகத் தமிழ் இலக்கியங்களை ஆழ்ந்து படிக்காத தமிழ் அறிஞர்களே தமிழ் என்ற சொல் திராவிட என்ற சொல்லிலிருந்து வந்ததாகக் கருதுகிறார்கள்.

இப்பொழுது தமிழோடு தொடர்புடைய பிற திராவிட மொழிகள் பற்றிச் சற்றுத் தெரிந்து கொள்ளுவோம்.

### திராவிட மொழிகள்

• மூலத்திராவிட மொழியிலிருந்து பிராகுயி என்ற மொழி கி.மு. 1500 அளவில் பிரிந்தது. சில பிராகுயி பிரிவுகள் ஆரியர் வருகைக்கு முன்பே இந்தியாவில் ராஜ்மகால், பீகார், ஒரிசா, மத்தியப் பிரதேசம் போன்ற பகுதிகளில் போய் வாழ ஆரம்பித்தனர். அதனால் பிராகுயிலிருந்து குருக், மால்தோ போன்ற மொழிகள் தோன்றின என்பர் ஆய்வாளர்கள்.

அடுத்து, தெலுங்கு, துளு பிரிவுகள் ஏற்பட்டன. கி.மு. 7ஆம் நூற்றாண்டு வரை தென்னாட்டுத் திராவிட மொழிகள் ஒரே மாதிரியாக இருந்தன. திராவிடர்கள் பரந்த நிலப்பரப்பில் குடியேறத் தொடங்கியதால் அவர்களுக்குள் தொடர்பு வர வரக் குறையத் தொடங்கியது. அதனால் தமிழ், கன்னடம், கொடகு, மலையாளம், கோடா, தோடா போன்ற மொழிகள் உருவாக ஆரம்பித்தன.

தமிழிலிருந்து கன்னடம் கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் தோன்றியிருக்கலாம்.

மலையாளம் சேர நாட்டுத் தமிழிலிருந்து உருவாகியது. கி.பி. 5ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டு மூலம் மலையாளத்தின் ஆரம்பம் தெரிய வருகிறது. கி.பி. 600இல் ஆரம்பித்து 900த்தில் மலையாளம் பிரிந்தது. பத்தாம் நூற்றாண்டுக் கல்வெட்டு ஒன்று இதை உறுதிப்படுத்துகிறது. கி.பி. 13ஆம் நூற்றாண்டிலிருந்து தனியாக இலக்கியம் உருவாகியது.

திராவிட மொழிகள் திருந்திய மொழிகள், திருந்தாத மொழிகள் என இரு வகைப்படும்.

திருந்திய மொழிகள் வரிசையில் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளு, குடகு போன்றவற்றைக் குறிப்பிடலாம். இவைகளில் பல எழுத்து வடிவம் பெற்ற, இலக்கிய வளமுள்ள மொழிகள். இவை கோடிக்கணக்கான மக்களால் பேசப்படுபவை.

திருந்தாத மொழிகள் வரிசையில் தோடா, கோடா, கொலமி, படக, பார்ஜி, நாயக்கி, கோந்தி, குவி, கூயி, மால்ட்டா, குருக் போன்ற மொழிகளைக் குறிப்பிடலாம். இவை பேச்சு வழக்கில் மட்டும் உள்ளவை. இவை எழுத்து வடிவம் பெறாத மொழிகள். இவை பெரும்பாலும் ஆயிரக்கணக்கான மக்களால் பேசப்படுபவை. ஒரு சில நூற்றுக்கணக்கான மக்களால் மட்டும் பேசப்படுபவை. இவை வழங்கும் இடங்களுக்கேற்ப வட திராவிட மொழிகள், நடுத்திராவிட மொழிகள், தென் திராவிட மொழிகள் எனப் பிரிக்கப்படும்.

### வட திராவிட மொழிகள்

வட திராவிட மொழிகளாகக் குருக், மால்டோ, பிராகுயி போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

குருக் 11.4 இலட்சம் மக்களால் பேசப்படுகின்றது. இவர்கள் பீகார், அசாம், வங்காளம், மத்தியப் பிரதேசம் போன்ற பகுதிகளில் வசிக்கின்றனர்.

மால்டோ: இம்மொழி பீகார், வங்காளம் பகுதிகளில் 90 ஆயிரம் பேர்களால் பேசப்படுகின்றது.

பிராகுயி: இது மூலத்திராவிட மொழியிலிருந்து முதலில் பிரிந்தது என்று அறிஞர் கருதுகின்றனர். மூன்று இலட்சம் மக்களால் பேசப்படுகின்ற இம்மொழி பலுசிஸ்தானம் பகுதியிலும், பாகிஸ்தானிலுள்ள கலத், அய்பூர் மாவட்டங்களிலும், ஈரான், ஆப்கானிஸ்தானம் பகுதிகளிலும் பேசப்படுகின்றது.

### நடுத்திராவிட மொழிகள்

நடுத்திராவிட மொழிகள், தெலுங்கு - குவி கிளை, கொலமி - நாயக்கி கிளை என இரு வகைப்படும்.

**தெலுங்கு - குவி கிளை** மொழிகளாகத் தெலுங்கு, கோண்டி, கோண்டா, குயி, குவி, பெங்கோ, மண்டா போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

**கொலமி - நாயக்கி கிளையில்** கொலமி, நாயக்கி, பார்ஜி, கடபா, ஒல்லாரி, சில்லூர் போன்றவை அடங்கும்.

**தெலுங்கு:** நடுத்திராவிட மொழியைச் சேர்ந்த தெலுங்கு, தமிழுக்கு அடுத்தபடியாகத் தொன்மைச் சிறப்பும், சொல் வளத்தையும் கொண்டது. இம்மொழி, தமிழ் நாட்டுக்கு வடக்கே உள்ள ஆந்திராவில் சுமார் 7 கோடி. மக்களால் பேசப்படுகின்றது. இம்மொழியில் சமற்கிருதச் சொற்கள் மிகுதியாக உள்ளன.

**கோண்டி:** மத்திய இந்தியாவின் காடுகளில் வாழும் 15 இலட்சம் மக்களால் பேசப்படுகின்றது.

**குயி:** இம்மொழி ஒரிசாவிலுள்ள கோறாபித் மாவட்டத்தில் 9 இலட்சம் மக்களால் பேசப் படுகின்றது.

**கோண்டா:** ஆந்திரப் பிரதேச எல்லைப் பகுதியில் 13,000 பேர்களால் பேசப்படுகிறது.

**கொலமி:** மத்தியப் பிரதேசத்தில் 50,000 பேர்கள் இம்மொழியைப் பேசுகின்றனர்.

**நாயக்கி:** மத்தியப் பிரதேசம் மகாராட்டிரப் பகுதிகளில் 15,000 பேர்கள் இம்மொழியைப் பேசுகின்றனர்.

**பார்ஜி:** மத்தியப் பிரதேசத்தில் 20,000 பேர்கள் இம்மொழியைப் பேசுகின்றனர்.

**கடபா:** ஒரிசா, மத்தியப் பிரதேசத்தின் சில பகுதிகளில் 8000 பேர்களால் பேசப்படுகின்றது.

**பெங்கோ-மண்டா:** 1300 பேர்கள் இம்மொழியைப் பேசுகின்றனர்.

## தென் திராவிட மொழிகள்

தென் திராவிடக் கிளையிலிருந்து முறையே, துளு, கன்னடம், கோடா, தோடா, கொடகு, மலையாளம் போன்ற மொழிகள் படிப்படியாகப் பிரிந்திருக்கலாம் என்று சில அறிஞர் நம்புகின்றனர். பிற திராவிட மொழிகளைப் பார்க்கும்போது தமிழில் வடமொழித் தாக்கம் மிகக் குறைவாகக் காணப்படுகிறது.

**தமிழ் :** தெலுங்கு, கன்னடம் போன்ற மொழிகள் தொன்மையான மொழிகளாயிருந்தும் அதிகப் படியான மக்களால் பேசப்படும் மொழிகளாக இருந்தும் தொன்மையான எழுத்து

இலக்கியங்களையும், இலக்கணங்களையும் கொண்ட மொழி தமிழே. இது தமிழ்நாட்டில் ஆறரைக் கோடி மக்களால் பேசப்படுகிறது.

**மலையாளம் :** தமிழோடு நெருங்கிய தொடர்பு கொண்டு, சிறப்புப் பெற்ற இம்மொழி பண்டைத் தமிழ் நாட்டின் மேற்குப் பகுதியான சேர நாட்டில் 3½ கோடி மக்களால் பேசப்படுகிறது. பதிற்றுப் பத்து, சிலப்பதிகாரம் போன்ற சிறந்த தமிழ் இலக்கியங்களைத் தந்த மலையாளப் பகுதியில் சமற்கிருத மொழியின் தாக்கத்தால் தமிழிலிருந்து பிரிந்து மலையாள மொழியாக மாறிவிட்டது.

**கன்னடம்:** இது கருநாடகத்திலும், மராட்டிய மாநிலத்திற்குத் தெற்கிலும் பேசப்படுகின்றது. சுமார் மூன்றரைக் கோடி மக்களால் பேசப்படுகிறது.

**துளு :** துளு கருநாடகத்தில் மைசூர் மாநிலத்தை அடுத்துள்ள பகுதிகளில் சுமார் 9,40,000 மக்களால் பேசப்படும் மொழி.

**குடகு:** இதுவும் கருநாடக மாநிலத்தை அடுத்துள்ள பகுதிகளில் பேசப்படும் மொழி. சுமார் 80,000 பேர் இம்மொழியைப் பேசுகின்றனர்.

பொதுவாகச் சுமார் 26 திராவிட மொழிகள் உள்ளன. இம்மொழிகளை ஆராய்ச்சி செய்த அறிஞர்களில் சிலர், இவை ஓரளவு இந்தோ - ஆரிய மொழிகளுடன் தொடர்புடையன என்றும் வேறு சிலர் இவை உராலிக் - ஆல்த்தாயிக் மொழிகளுடன் தொடர்புடையன என்றும் கூறுகின்றனர். இன்னும் சிலர் இம்மொழிகள் ஜப்பான், கொரியா, ஆஸ்திரோ - ஆசிய மொழிக் குடும்பத்தைச் சேர்ந்தவை என்பர். மற்றும் சிலர் இவை ஆப்பிரிக்கா மற்றும் மத்திய தரைக் கடல் நாட்டு மொழிகளுடன் ஒத்திருக்கின்றன என்பர். இவைகளில் எது உண்மை என்று அறியுமுன் இவைகளுக்குள் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளைத் தெரிந்து கொள்ளுவோம்.

# 2. இந்தோ ஆரிய மொழிகள், திராவிட மொழிகள்

**இந்த இரு குழு மொழிகளுக்குள் உள்ள ஒற்றுமைகளில் சில :**

- *படர்க்கைப் பெயரிலும், வினையிலும் பால் பாகுபாடு உண்டு.*
- *படர்க்கை ஒன்றன் பால் விகுதியாகத் "த" உள்ளது.*
- *திராவிட மொழிகளிலும், இலத்தீன் மொழியிலும் பலவின் பால் விகுதி "அ".*
- *இவ்விரு மொழிகளிலும் "அ" சேய்மைச்சுட்டு. "இ" அண்மைச் சுட்டு (அது, இது* - that, this*).*
- *திராவிட மொழிகளில் "த்" இறந்த கால இடைநிலை. ஆங்கிலம், பாரசீக மொழிகளில் "த்" இறந்த காலத்தை உணர்த்தும். (*Walk-walked*).*
- *வினைப்பகுதியில் முதல் உயிர் நீண்டு தொழிற் பெயராக மாறும். (*conduct, conduct*).*

**இரு குழு மொழிகளுக்குள் உள்ள வேற்றுமைகளாவன**

- *திராவிட மொழிகளின் திணை, பால் பாகுபாடுகள் இயற்கையானவை. ஆரிய மொழிகளின் பால் பாகுபாடுகள் செயற்கையானவை. பொருள்களின் தன்மைக்கு ஏற்றபடி பால் பாகுபாடுகள் இல்லை.*

- *திராவிட மொழிகளில் வேற்றுமை உருபுகள் பெயர்ச் சொல்லுக்குப் பின் வரும். ஒருமைக்கும், பன்மைக்கும் ஒரே உருபு. ஆரிய மொழிகளில் அவை பெயர்ச் சொல்லிலிருந்து பிரிக்க முடியாதபடி அதனுடன் இணைந்தே இருக்கும். ஒருமைக்கும் பன்மைக்கும் தனித்தனி உருபுகள் உண்டு.*

- *திராவிட மொழிகளில் பின்னொட்டுகளாய் இருப்பவை ஆரிய மொழிகளில் முன்னொட்டுகளாய் இருக்கும் பெயர்,*

உரிச்சொற்கள் திராவிட மொழிகளில் எண், பால் உணர்த்தா. ஆரிய மொழிகளில் முன்னொட்டுகளாய் இருக்கும். ஆரிய மொழிகளில் எண்பால் உணர்த்தும்.

- திராவிட மொழிகளில் முன்னிலையாரை உளப்படுத்திப் பேசும் முறை (நாம், நாங்கள்) உண்டு. இம்முறை ஆரிய மொழிகளில் இல்லை.

- திராவிட மொழிகளில் உடன்பாட்டுக்கும், எதிர்மறைக்கும் வெவ்வேறு வினைகள் உண்டு. ஆரிய மொழிகளில் இவ்விதமான வினைகள் இல்லை.

- ஆரிய மொழிகளில் செயப்பாட்டு வினைக்குத் தனி வடிவம் உண்டு. திராவிட மொழிகளில் படு என்ற துணைவினை செயப்பாட்டு வினையை அமைக்கப் பயன்படுகிறது.

- ஆரிய மொழிகள் வினைகளை இணைக்க இணைப்பு இடைச் சொற்களைப் (conjunctions) பயன்படுத்துகின்றன. திராவிட மொழிகள் அவைகளுக்குப் பதிலாக வினை எச்சங்களைப் பயன் படுத்துகின்றன.

- ஆரிய மொழிகளில் இணைப்பு இடப்பெயர்கள் (relative pronouns) உள்ளன. திராவிட மொழிகள் அவைகளுக்குப் பதிலாகப் பெயரெச்சம், வினையாலணையும் பெயர்களைப் பயன் படுத்துகின்றன.

- திராவிட மொழிகளில் நான்காம் வேற்றுமை உருபுகள் கு,கெ,கே. இலத்தீன், கிரேக், சமஸ்கிருதம் போன்ற ஆரிய மொழிகளில் இவை போன்ற உருபுகள் கிடையா.

## 2.1. இந்திய ஆரிய மொழியினங்களில் திராவிடக் கூறுகள்

சில திராவிட மொழிகளில் சமற்கிருதச் சொற்கள் மிகுதியாக உள்ளதால், சமற்கிருதம்தான் மிகப் பழைய மொழி என்றும், அதிலிருந்துதான் திராவிட மொழிகள் தோன்றின என்றனர் மேனாட்டுச் சமற்கிருத அறிஞர்களான காரே (Carey), கோல் புருக் (Cole Brooke) போன்றவர்கள். அவர்களுக்குப் பின் ஜி.யு. போப் (G.U.Pope) என்பவர் திராவிட மொழிகளுக்கும் ஆங்கிலம், கிரேக், இலத்தீன் போன்ற மொழிகளின் சொற்களுக்குள்ளும் பல ஒற்றுமைகள் இருப்பதாகக் கூறியிருக்கிறார்.[1] குறிப்பாக, தமிழுக்கும் சமற்கிருதத்துக்கும் ஒற்றுமைகள் இருப்பதாகக் கூறி நூற்றுக்கும் மேற்பட்ட சொல் ஒற்றுமைகளை எடுத்துக்காட்டியிருக்கிறார்.

சமற்கிருதம் மற்றும் திராவிட மொழிகளை ஆராய்ந்த அறிஞர்கள் இவை வேறுபட்ட இரண்டு குடும்பத்தைச் சார்ந்த மொழிகள் என்று விளக்கி உள்ளனர்.

கால்டுவெல் என்ற அறிஞர் தம் திராவிட மொழிகள் ஒப்பிலக்கணத்தில்,

> திராவிட மொழிக் குடும்பம் சமற்கிருதத்திற்கு முற்பட்ட சில மிகப் பழைய கூறுகளைப் போற்றி வைத்திருக்கின்றது என்றும், சிறப்பாக அதன் சுட்டுப் பெயர்கள், சமற்கிருதத்தினின்று கடன் கொள்ளப் படாமல் சமற்கிருதச் சுட்டுச் சொற்கட்கும் இந்தோ-ஐரோப்பியக் குடும்பத்தைச் சேர்ந்த வேறுபட்ட பிறமொழிச் சுட்டுச் சொற்களுக்கும் மூலமான, அந்தப் பழைய ஜாப்பெத்தியச் சுட்டடிகளை நிகர்த்து நிற்கின்றன.
>
> திராவிட மொழிகள் சமற்கிருதத்திற்கு முற்பட்டதும், இந்தோ-ஐரோப்பிய மொழிக் குடும்பத்திற்குத் தாயாகக் கருதப்படுவதுமான அந்த இறந்துவிட்ட மொழியோடு கொண்டுள்ள தொன்மையான மிக நெருங்கிய தொடர்புக் குறிகளைக் காட்டுகின்றன.

என்றெல்லாம் கூறி, திராவிட மொழிகள் சமற்கிருதத்திலிருந்து உருவானவை அல்ல என்றும், அவைகளுக்குள் ஒற்றுமைகள் இருந்தாலும், வேற்றுமைகள் பல இருப்பதாகக் கூறியிருக்கிறார். அவ் வேற்றுமைகளாவன :

- திராவிட மொழிகளில் வடமொழிச் சார்பில்லாப் பகுதியே அதிகம்.
- திராவிட மொழிகளில் மூவிடப் பெயர்கள், வினைத்திரிபுகள், பெயர்த் திரிபுகள், சொல்லமைப்பு முறைகள் வட மொழியினின்றும் முற்றிலும் வேறுபடுகின்றன.
- திராவிடச் சொற்களே மிகுதியாகவும், அடிப்படைச் சொற்களாகவும் இருக்கின்றன.
- தெலுங்கு, கன்னடம், மலையாளம் போன்ற திருந்திய மொழிகளில்தாம் சமஸ்கிருதச் சொற்கள் கலந்திருக்கின்றன. ஆனால் பேச்சு மொழியாக உள்ள திருந்தாத திராவிட மொழிகளில் வடமொழிச் சொற்கள் மிகக் குறைவாக இருக்கின்றன.

சில அறிஞர்கள், ஆரியர் வடமேற்கு வழியாக நாடோடிகளாக இந்தியாவிற்கு வந்தபோது, அவர்கள் மொழி வளர்ச்சி பெறாத நிலையில் இருந்ததாகவும், அங்கு மிக நாகரிகமடைந்த திராவிடர்களுடன் கலந்து வாழும் போதுதான் அவர்கள் மொழி பல மாறுதல்களைப் பெற்றது என்றும் கூறுகின்றனர்.

Rhys Davids என்பவர் வேதகால ஆரியமொழி திராவிட மொழிகளின் தொடர்பால் திராவிட ஒலிகள், இலக்கணக் கூறுகள் மற்றும் சொற்களை ஏற்று அதிகம் மாறத் தொடங்கியதாகக் குறிப்பிடுகிறார்.

இவருக்கு அடுத்தபடியாக மோரிஸ், பென்பே, ஆஸ்கொலி போன்றவர்கள் சமற்கிருதத்திலும் பல திராவிடச் சொற்கள் கலந்திருப்பதாகக் குறிப்பிட்டிருக்கிறார்கள். குண்டர்ட், கிட்டல் போன்றவர்களும் ஆரியர் இந்தியாவுக்கு வந்தபோது திராவிட மொழி பேசுவோர்களுடன் கலந்து உறவாடியதால் இரு மொழிகளிலும் பிற மொழிச் சொற்கள் கலந்து விட்டன என்கிறார். கிட்டல் சமற்கிருதம் திராவிடச் சொற்களை ஏற்றுக் கொண்டபோது அவைகளைத் தன் ஒலியமைப்புக் கேற்றவாறு மாற்றிக் கொண்டதாகவும் குறிப்பிடுகிறார்.[2]

ஸ்டென் கொனோவ், பர்ரோ போன்றவர்களும் சமற்கிருதத்தில் திராவிடச் சொற்கள் அதிக அளவில் இருப்பதைச் சுட்டிக்காட்டுவர். ஸ்டென் கொனோவ் சமற்கிருதமும், பல இந்தோ ஆரிய மொழிகளும் தன்னகத்தே பல திராவிடச் சொற்களை மட்டும் ஏற்றுக் கொள்ளவில்லை; சில நாமடி ஒலிகள் (retroflex) மற்றும் திராவிட இலக்கணக் கூறுகளையும் ஏற்றுக் கொண்டன என்கிறார். வேதகால மொழி வினைச்சொற்களுக்கும், பிற்கால இந்தோ-ஆரிய மொழிகளிலுள்ள வினைச் சொற்களுக்கும் இடையே பல வேறுபாடுகள் இருப்பதாகவும் குறிபிடுகிறார். மராத்தி, பீகாரி போன்ற பிற்கால இந்தோ-ஆரிய மொழிகளில் காணப்படும் பின்னொட்டுகள் திராவிட மொழிகளின் செல்வாக்கைக் காட்டுவதாகக் குறிப்பிடுகிறார். வேதகால இலக்கியங்களிலிருந்த மொழி நடை பிற்கால இலக்கியங்களில் இல்லை என்கிறார்.

எமினோ, சட்டர்ஜி, முயல் ப்லோக் போன்றவர்கள் சமற்கிருதம் திராவிட முறையைத் தழுவி வினையெச்சங்கள், வினையாலணையும் பெயர்களைப் பயன்படுத்தியிருப்பதாகத் தெரிவித்திருக்கின்றனர்.

இராமச்சந்திர தீட்சிதர் ஆரியர் வட இந்தியாவிற்கு வந்த போது அங்கிருந்த திராவிடர்களுடன் கலந்ததால் திராவிடச் சொற்களும், இலக்கணமும் சேர்ந்த பிராகிருதம், பாலி போன்ற புது மொழிகள் ஏற்பட்டதென்றும், கலந்த மக்கள் அம்மொழிகளையே தங்கள் பொது மொழியாகக் கொண்டனர் என்றும் குறிப்பிடுகிறார்.[3]

சாட்டர்ஜி என்பவர் ஆரிய மொழிகளில் இல்லாத பல ஒலிகள் (retroflex) வட இந்திய மொழிகளில் காணப்படுவதாகக் கூறுகிறார்.

சமற்கிருத மொழி பற்றி ஆய்வு செய்த வங்காளப் பேராசிரியர் பந்தர்கார், பாலி மொழியில் வடமொழிச் சொற்கள் பல இருந்தும் அதன் ஒலிகள் திராவிட ஒலிகள் போல் எளிமையாக இருக்கின்றன என்றும் அதில் பின்வரும் திராவிடக் கூறுகள் இருக்கின்றன என்றும் கூறுகிறார்.

- வடமொழியில் மூன்று விதச் சகர ஒலிகள் உண்டு. ஆனால் பாலியில், தமிழில் உள்ளது போல ஒரே சகரம் தான் உள்ளது.

- தமிழில் மெய்யெழுத்துக்கள் வருமொழி முதல் எழுத்துக்கேற்ப மாறும் தன்மையுடையவை. இம்முறை பாலியிலும் உண்டு.

- தமிழில் சொற்கள் எளிய ஒலிகளால் முடியும். அதாவது, உயிரொலிகள் அல்லது மூக்கொலிகளால் முடியும்.

- வடமொழியில் உள்ள இருமை பாலியில் இல்லை : திராவிட மொழிகளில் உள்ளபடி ஒருமை, பன்மை தாம் உண்டு.

- வடமொழியில் எகர, ஒகரக் குற்றுயிர்கள் இல்லை. ஆனால் அவை பாலியில் உண்டு.

மேற்கூறிய கூறுகள் எல்லாம் திராவிடக் கூறுகளாய் இருப்பதால், ஆரியர் வருகைக்கு முன்னரே, வட இந்தியாவில் இம்மொழியைப் பேசி வந்த மக்கள் திராவிட இனத்தைச் சேர்ந்தவர்கள் எனக் கொள்ள இடமுண்டு என்கிறார்.

மேலே பல அறிஞர்களால் கூறப்பட்ட கருத்துக்களைத் தொகுத்துப் பார்க்கும்போது பிராகிருதம், பாலி போன்ற வட இந்திய மொழிகள் சமற்கிருதத்திலிருந்து பிறந்த ஆரிய மொழிகள் அல்லவென்று தெரிய வருகிறது.

கி.மு. 1000க்குப் பிறகு பிராகிருதம் பாலி, மாகதி அர்த்தமாகதி, சூரசேனி, ஸ்பைசாசி, மகாராஷ்டிரி போன்ற பல வட்டார மொழிகளாகக் கிளைக்க ஆரம்பித்தது. அறிஞர்கள்

இவ்வட்டார மொழிகளுக்குள் அதிக வேறுபாடுகள் இல்லை என்பர்.

கி.பி. 10இலிருந்து கி.பி. 15க்குள் வழங்கிய பேச்சு மொழிகளாயிருந்த சில பிராகிருத மொழிகளிலிருந்து அபப்பிராம்ச மொழிகள் தோன்றின. சூரசேனியிலிருந்து மேற்கு இந்தி, ராஜஸ்தானி, குஜராத்தியும் - மகாராட்டிரியிலிருந்து மராத்தியும்-மாகதியிலிருந்து வங்காளி, பீகாரி, அசாமி, ஒரியாவும்-அர்த்தமாகதியிலிருந்து கிழக்கு இந்தியும் - பைசாசியிலிருந்து இந்தியும் தோன்றின.

கி.மு. பத்தாவது நூற்றாண்டிற்கு முன்பிருந்தே தமிழ் எழுத்தும், நெடுங்கணக்கும் பெற்றிருந்ததாக எஸ்.கே. சாட்டர்சி போன்ற அறிஞர்கள் கூறுவர்.

இப்பொழுது சமற்கிருதம் பற்றிய சில உண்மைகளை அறிந்து கொள்வோம்.

ஆரியர்கள் இந்தியாவிற்குக் கி.மு. 1500 அளவில் வந்ததாகவும், இருக்கு வேதம் கி.மு. 1200 அளவில் தோன்றியதாகவும் மேல் நாட்டறிஞர் கூறுவர்.[4]

வேதங்களில் சுமார் 500 திராவிடச் சொற்கள் கலந்துள்ளன என்றும், ஆரியர் இந்தியாவிற்கு வந்து பல நூற்றாண்டுகளுக்குப் பின்பே வேதங்கள்[5] தோன்றின என்றும் பர்ரோ போன்ற அறிஞர் கருதுகின்றனர்.

வடமொழிப் பேராசிரியர் டாக்டர் கே. கைலாசநாத குருக்கள் வேதங்கள் சமற்கிருத நூல்கள் எனப்படுவதில்லை என்றும், வேதங்களுக்குப் பின் பாணினியால் திருத்தம் செய்யப்பட்ட மொழியில் தோன்றிய இலக்கியங்களே சமற்கிருத நூல்கள் எனப் பெயர் பெற்றதாகவும் கூறுகிறார்.

பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை **இலக்கிய உதயம்** என்னும் தம் நூலில்,

> பாணினியத்தில் வைதிக மொழியைப் பற்றிக் கூறும் பகுதி மிகச் சொற்பமே ஆகும். இதற்கும் வேத சாகைகளுக்கும் யாதொரு தொடர்பும் இல்லை. சமயத் தொடர்பு அற்ற வெகுகாலமாகப் பயிலப்பட்டு வந்த இலக்கண நெறியின் பயனே பாணினி முனிவரது வியாகரணம்

என்கிறார்.

பாணினி இலக்கணத்தில் இருந்த குறைகளைக் காத்தியாயனா என்பவர் வார்த்திகா என்ற தன் நூலில் சில விளக்கச் சூத்திரங்களை இயற்றிப் பாணினியத்தைச் செப்பம் செய்தார் என்றும், அதுவும் போதவில்லை என்று கி.மு. 150இல் வாழ்ந்த பதஞ்சலி முனிவர் மகாபாஷ்யத்தை இயற்றி அதை முற்றுப் பெற வைத்தார் என்றும் வையாபுரிப் பிள்ளை கூறுகிறார். இதிலிருந்து சமற்கிருதம் பதஞ்சலி காலம் வரை வளர்ச்சி பெறாத மொழியாகவே இருந்ததாகத் தெரிகிறது. (பதஞ்சலி சிதம்பரத்தைச் சேர்ந்த ஒரு தமிழர் என்று சொல்லப்படுகிறது).

அசோகருடைய கல்வெட்டுகளில் பிராகிருதமும், பிராமி எழுத்துக்களுமே காணப்படுவதால் அக்காலத்தில் ஆரியமொழி பொதுமக்களால் பேசப்படவில்லை என்றும், வேதம் பயிலும் சிறுபான்மையினரால் பேசப்பட்டிருக்கலாம் அல்லது சூரசேனி மொழியோடு கலந்து சூரசேனி என்ற பெயரில் இருந்திருக்கலாம் என்றும் சில அறிஞர் கருதுகின்றனர். திரு. கிருஷ்ண சைதன்யா, ஆரிய மொழி பொதுமக்களால் பேசப்பட்ட மொழியினின்றும் மாறுபட்டிருந்தது என்றும், ஆரியர் தங்கள் வீட்டில் பேசிய மொழி வேறாக இருந்தது என்றும் கூறுகிறார்.

கி.மு. மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த சமவயங்க சுத்தா, கி.மு. 168ஆம் ஆண்டில் எழுதப்பட்டதாகக் கருதப்படும் பண்ணவணா சுத்தா முதலிய சைன நூல்கள், அக்காலத்தில் இந்தியாவில் 18 வகையான எழுத்துக்கள் இருந்ததாகவும், அவைகளில் குறிப்பிடும்படியானவை பாம்பி, கரோஷ்டி, தமிழி போன்றவை என்றும் கூறுகின்றன. ஆனால் ஆரியம் அல்லது சமற்கிருதம் போன்ற எழுத்து வகைகள் அதில் குறிப்பிடப் படவில்லை. டாக்டர் டி.வி. மகாலிங்கம் என்பவர் பம்பி என்ற எழுத்து பிராமி எழுத்தைக் குறிப்பதாகத் தன் Early South Indian Paleography என்ற நூலில் குறிப்பிடுகிறார். வால்மீகியின் இராமாயணம் கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் எழுதப் பட்டிருக்கலாம் என்று அறிஞர் கருதுகின்றனர். இராமாயணமும், மகாபாரதமும் எழுதப்பட்ட காலத்தில் தேவநாகரி எழுத்து உருவாகவில்லை. அதனால் அவை எந்த வகையான எழுத்தில் எழுதப்பட்டன என்று தெரியவில்லை.

இந்திய வரலாற்றாசிரியர் கே.சி. கன்னா என்பவர் இராமாயணம், மகாபாரதம், புராணங்கள் போன்றவை கி.பி. நான்கு அல்லது ஐந்தாம் நூற்றாண்டில் குப்த அரசர் காலத்தில் சமற்கிருதத்தில் எழுதப்பட்டனவென்றும், அப்பொழுது அவை சமய இலக்கியங்களாக மாறின என்றும் கூறுகிறார். ஏ. பார்த் என்னும் அறிஞரும் இதே கருத்துடையவராய் இருக்கிறார்.

கண்ட்ராக்டர் என்னும் அறிஞர் அச்சகங்கள் வருவதற்கு முன் சமற்கிருதம் அந்தந்தப் பிராந்திய மொழி எழுத்துக் களிலேயே எழுதப்பட்டது என்று கூறுகிறார்.

அறிஞர் பர்னல் ஆரியர்கள் தங்களுக்கென ஒரு எழுத்து முறையை உருவாக்கவில்லை என்றும், அவர்கள் குடியேறிய இடத்து எழுத்துக்களையே ஏற்று வாழ்ந்தனர் என்றும் குறிப்பிடுகிறார். பிற்காலத்தில் சமற்கிருதம் மட்டுமே ஏற்கெனவே இருந்த திராவிட எழுத்துக்களில் ஆரியர்கள் செய்த மாற்றம் என்று தெரிகிறது.

H.G. Wells (வெல்ஸ்) என்ற அறிஞரும் ஆரியர்கள் நாகரிகமடைந்த மக்களுடன் தொடர்பு கொள்ளும் வரை அவர்களுக்கென்று எழுத்து முறை இருந்ததில்லை என்று A Short history of the World என்ற நூலில் குறிப்பிடுகிறார்.[6]

சமற்கிருதத்தில் இலக்கியங்கள் கி.மு. இரண்டு அல்லது மூன்றாவது நூற்றாண்டில் தோன்றியிருக்கலாம் என்றும், அதற்கு முன் செல்ல இடம் தரவில்லை என்றும் அறிஞர் கூறுவர். அதற்கு முன் ஆரியம் என்னும் பேச்சு மொழி தனது தாக்கத்தை இந்திய மொழிகள் பலவற்றிலும் ஏற்படுத்திக் கொண்டிருந்தது. வடநாட்டுத் திராவிட மொழிகளில் ஆரியச் சொற்கள் அதிக அளவில் கலக்கவே அவை ஆரியமொழி எனப்பட்டன. திராவிட மொழிகளான மராத்தி, குசராத்தி போன்றவை ஆரியச் சொற்கள் கலப்பால் ஆரிய மொழிகளாகக் கருதப்பட்டன.

கி.மு. முதல் நூற்றாண்டு வரை கல்வெட்டுகளிலும், நாணயங்களிலும், பிற தொல்லியல் ஆதாரங்களிலும் காணப்படாமலிருந்த சமற்கிருதம் கி.மு. முதல் நூற்றாண்டு முதல் பிராகிருத எழுத்துக்களால் எழுதப்பட்டும், கி.பி.350க்குப் பின் பிராகிருத இலக்கியத்தை மொழிபெயர்த்தும் வளர்ந்தது. இந்த மொழிபெயர்ப்புக் காலத்தில் தான் இந்திய மரபுப் புராணங்களும், இராமாயணம், மகாபாரதம் போன்ற காப்பியங்களும் திருத்திச் சமற்கிருத மொழியில் வெளியிடப்பட்டன. (ஆதாரம் இந்திய வரலாற்றுத் தொகுதி 162-3 பாரதீய வித்யாபவன் வெளியீடு - சார்ஜ் எல். ஆர்ட்டின் - ஆரிய மொழி, திராவிட மொழி மரபுகளின் ஒப்பாய்வு நூல்).

வரலாற்று ஆசிரியர்களான எச்.வி. சீனிவாசமூர்த்தி, ஆர். இராமகிருஷ்ணன் போன்றோர் சாதவாகனருடைய கல்வெட்டுகள் பிராகிருதியிலும், பிராமி எழுத்துக்களிலும் இருந்தனவென்றும், சமற்கிருத மொழி கல்வெட்டுக்களில் புகுந்தது

கி.பி. நான்காவது அல்லது ஐந்தாவது நூற்றாண்டுகளில்தான் என்றும் கூறுவர். ஆனால் நாசிக் குகையில் காணப்படும் நாகபாணா கல்வெட்டுதான் பழமையானதென்பர் சிலர். வேறு சில அறிஞர்கள் கி.பி. 150இல் ருத்ரதாமனால் வெட்டுவிக்கப்பட்ட ஜுனாகத் கல்வெட்டே (கிர்னார் கல்வெட்டு) மிகப் பழமையானதென்பர்.

முற்காலப் பல்லவர்களின் ஓமகோடு கல்வெட்டுகள் பிராகிருதியிலும், சமற்கிருதத்திலும் உள்ளன. அக்கல் வெட்டுகளில் சமற்கிருதம் வளர்ச்சி பெறாத மொழியாகவே காணப்படுகிறது. அதாவது பிராகிருதத்திலிருந்து உருமாறிக் கொண்டிருந்த சமற்கிருதத்தையே அக்கல்வெட்டுகளில் காண முடிகிறது. கந்தவர்ம பல்லவனுடைய ஓமகோடு சாசனத்தில் பிராகிருதம் மிகுதியாகவும், சமற்கிருதம் குறைவாகவும் உள்ளன. பல்லவர் காலத்தில்தான் சமற்கிருதம் இலக்கிய மொழியாக மாற ஆரம்பித்தது.

கி.பி. 4ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 6ஆம் நூற்றாண்டு வரை தமிழக அறிஞர்கள் பல நூல்களைச் சமற்கிருதத்தில் மொழிபெயர்த்தனர். கி.பி. 4ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் சிம்மசூரி முனிவரின் உலோக வியாபகம் என்ற பிராகிருத மொழிநூல் தென்னாட்டைச் சேர்ந்த பாதிரிப்புலியூர் (தற்காலக் கடலூர்) சர்வந்தி என்பவரால் கதசப்த சாயி என்ற பெயரில் சமற்கிருதத்தில் மொழிமாற்றம் செய்யப்பட்டது. பைசாசமொழிப் புலவரான குணாட்டியரின் பெருங்கதை பிரகத்கதா என்ற பெயரில் சமற்கிருதத்தில் மொழிபெயர்க்கப்பட்டது.

சூரசேனி என்ற பிராகிருத மொழி, கலப்பு குறைந்து காணப்பட்டதால் ஆரியர் அதைச் செம்மைப்படுத்திச் சமற்கிருதம் (செம்மை செய்யப்பட்டது) என்ற பெயரைக் கொடுத்து, அக்காலத்தில் வாழ்ந்த மக்களின் கருத்துக்களை எல்லாம் நூல்கள் வடிவில் அம்மொழியில் எழுதி வைத்தனர். அவர்களுக்குப் பின் வந்த அறிஞர்களும், அம்மொழியிலேயே எழுத ஆரம்பித்ததால் சமற்கிருத நூல்கள் நாளடைவில் பெருகி அவற்றிற்குச் சிறப்புகள் பல உண்டாயின. இந்தியாவின் பல பாகங்களிலிருந்த அறிஞர் பலவகை அறிவு வளர்ச்சியையும் வடமொழியில் எழுதி வைத்தனர். அவ்வாறு வடமொழியில் எழுதி வைத்தவர்களில் பலர் தென்னாட்டு அறிஞர்கள்.[7]

சமற்கிருதம் எழுத்து மொழியானதிலிருந்து பேச்சு மொழிகளாயிருந்த சில பிராகிருதங்கள் நாளடைவில் சிதைந்து அபப்பிராம்சங்களாக மாறின. அவ்வபப்பிராம்சங்கள் மேலும்

திரிந்து குஜராத்தி, மராத்தி, பெங்காலி போன்ற மொழிகளாயின. இவை சமற்கிருதத்திலிருந்து நேரே பிறந்த மொழிகள் அல்ல. இம்மொழிகளை ஆராய்ந்த டாக்டர் ஸ்டிவென்சன் (Dr. Stevenson), ஹட்ஜன் (Hudgon) போன்றவர்கள் வட இந்திய மொழிகள் அனைத்திலும் வடமொழிக் கூறுகளுடன், பிறமொழிக் கூறுகளும் உள்ளன வென்றும், அப்பிறமொழிக் கூறுகளில் திராவிடக் கூறுகளும் உள்ளன என்றும் கூறியிருக்கின்றனர்.

சமற்கிருத மொழியின் தோற்றம், அமைப்புப் பற்றி ஆராய்ந்த கால்வின் கெபார்ட் (Calvin Kephart) இந்தியாவின் பழைய மொழி எதற்கும் அம்மொழி தாய் அல்லவென்றும், அது பழைய இந்திய மொழிக் கூறுகளின் கலப்பால் பிற்காலத்தில் தோன்றி வளர்ந்த மொழி என்றும் விளக்கிக்காட்டியிருக்கிறார்.[8]

இந்திய மொழிகளை ஆய்வு செய்த அறிஞர் கிரியர்சன் சமற்கிருதம் பற்றிப் பின் வருமாறு கூறுகிறார்:

> மத்திய தேசத்தினர் பேசி வந்த மொழி சூரசேனி பண்டைப் பாகதமாகும். இச்சூரசேனி இந்தி மொழியின் பெரும் பகுதியாகிய மேற்கு இந்திக்குத் தாய் மொழியாகும். இந்திய - ஆரிய மொழியைச் சேர்ந்த இச்சூரசேனியே பின்னர் மத்தியதேசத் திருந்திய ஆரிய மொழியாக மாறுதலடைந்தது. அதுவே மேலும் மேலும் செம்மை செய்யப்பட்டு முறையான இலக்கண அமைப்புடையதாகப் பின்னர் மாறியதன் காரணத்தால், சமற்கிருதம் என்று பெயர் பெற்றது. இச்செம்மைப்பாடு கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் இயற்றப்பட்டதாகக் கருதப்படும் பாணினி இலக்கணத்தில் உருப்பெற்றது. எனவே, கற்றோரால் இலக்கண முறைப்படி திருத்திச் செம்மை செய்யப் பெற்ற ஆரியப் பாகங்களே சமற்கிருதம் என்பது ஒருவாறு விளங்கும். அன்றியும் பண்டைய ஆரியமொழிகளும், பண்டைய இந்திய உள்நாட்டு மொழிகளைப் போல் திருந்தா மொழிகளேயாம் என்பதும் விளக்கமுறும். இதனால் திருத்தம் செய்யப்பெற்றுப் புத்துருக் கொண்ட சமற்கிருத மொழியினின்றும் வேறெம்மொழியும் கிளைத்திருக்க முடியாது என்பது தெளிவு

இந்திரமால் பகவான்ஜி என்னும் சமண அறிஞர் பழைய பிராகிருத மொழிகள் பழங்காலத்தில் சிறந்து விளங்கின என்றும்

அவற்றின் போலி உருவங்களே சமற்கிருத மொழி என்றும் கூறுகிறார்.

ஆதலின், பிராகிருத மொழியிலிருந்தே தோன்றியது பிற்காலச் சமஸ்கிருதம்; சமற்கிருதத்திலிருந்து பிராகிருத மொழிகள் தோன்ற வில்லை.

இப்பொழுது இந்தியாவின் தொன்மையான மொழி எது என்றும், அது பற்றி அறிஞர்களின் கருத்துக்கள் என்ன என்றும் ஆராய்வோம் .

டாக்டர் மக்ளீன் என்ற அறிஞர் திராவிட மொழிகள் சமற்கிருதத்தை விட மூத்த மொழிகள் என்பதில் சந்தேகமில்லை என்கிறார்.

டாக்டர் டைலர் என்ற அறிஞர், திராவிட மொழியிலிருந்து தோன்றிய மிகவும் வளர்ந்த மொழியான தமிழ், இந்திய மொழிகள் அனைத்திற்கும் மூல மொழி என்றும், வேதகாலச் சமற்கிருதம், பிற்காலச் சமற்கிருதம் மற்றும் இந்திய மொழிகள் அனைத்தும் இலக்கியத் தமிழால் வளர்ந்தவை என்றும் கூறுகிறார்.

பஞ்சாப், சிந்துவெளிப் பகுதிகளில் கிடைத்த குறியீடுகளை ஆராய்ந்து பார்த்த பி.டி. சீனிவாச ஐயங்காரும், அக்குறியீடுகள் மூலத்தமிழைக் குறிப்பதாகக் கூறுகிறார். புதிய கற்காலத்தில் இந்தியாவில் பேசப்பட்ட மொழிகள் அனைத்தும் மூலத்தமிழ் மொழியின் கிளைமொழிகள் என்றும், தற்காலத்தில் கீழ்க் கோதாவரிப் பகுதிகளில் பேசப்படும் மொழிகள் மூலத்தமிழின் இன்றைய கிளைமொழிகள் என்றும், வடநாட்டு இந்தோ - ஆரிய மொழிகள் மூலத்தமிழிலிருந்து கிளைத்த மொழிகள் என்றும், அவை சமற்கிருதத்தால் பெரிதும் பாதிக்கப்பட்ட மொழிகள் என்றும் கூறுகிறார்.

டி.ஆர். சேஷ ஐயங்காரும் இதே கருத்தைத் தெரிவித்திருக்கிறார் (Dravidian India - Prof. Sesha Aiyangar).

இந்திய இலக்கியங்களை ஆய்வு செய்த அமெரிக்கத் தமிழறிஞரான George L. Hart என்பவர் சமற்கிருதம் இராமாயணம், மகாபாரதம், புத்த சரிதை போன்ற வடமொழி இலக்கியங்களில் எழுதப்பட்டுள்ள மொழி பண்பட்ட மொழியாக இல்லை என்றும், காளிதாசரின் இலக்கியங்களிலிருந்துதான் (சகுந்தலை, குமாரசம்பவம், மேகதூதம் போன்றவை) அது செம்மொழியாக மாறியதென்றும்

குறிப்பிடுகிறார். காளிதாசர் காலம் கி.பி. 5ஆம் நூற்றாண்டு என்பர் அறிஞர். ஆனால் தமிழில் தொல்காப்பியம் என்ற இலக்கண நூலும், சங்கப் பாடல்களான எட்டுத் தொகை நூல்களும் கி.மு. 450க்கு முற்பட்டதாக அறிஞர் கருதுகின்றனர். தொகை நூல்களில் காணப்படும் உவமைகள், கவிமரபுகள் பல காளிதாசரின் இலக்கியங்களில் காணப்படுகின்றன. சமற்கிருதத்தில் காளிதாசருக்கு முன் இவ்விதமான இலக்கிய மரபுகள் காணப் படவில்லை. (George. Hart - Tamil heroic poems என்ற நூலில் - பெருவாரியான தமிழ் மற்றும் திராவிட இலக்கிய மரபுகள் சமற்கிருதத்திற்குப் பிராகிருத மொழி இலக்கியங்கள் மூலம் வந்ததாகப் பல எடுத்துக்காட்டுகள் மூலம் விளக்கிக் காட்டுகிறார்.

அமெரிக்கத் தமிழறிஞர் எம்.பி. எமனோ, இந்தியாவின் தென்கோடியிலுள்ள தமிழர்கள் சமற்கிருத இலக்கியத்தில் கூறப்பட்டுள்ள சிறந்த நாகரிகக் கூறுகள் அனைத்தையும் பெற்றிருந்தனர் என்றும், சமற்கிருத இலக்கிய, இலக்கணத் திறனாய்வுகள் தமிழிலிருந்து கடனாகப் பெற்றவை என்றும் கூறுகிறார்.

இதுவரை கூறப்பட்ட அறிஞர்களின் கருத்துக்களை ஒன்று சேர்த்துப் பார்க்கும் போது சிந்துவெளியில் மிக உன்னத நாகரிகத்தை உருவாக்கிய திராவிடர்கள், ஆரியர்களை விட நாகரிகத்தில் மேம்பட்டவர்கள் என்றும், அவர்கள் மொழியான திராவிடம் அல்லது மூலத்தமிழிலிருந்துதான் பிற்காலச் சமற்கிருதம் வளர்ச்சி பெற்ற மொழியாக மாறியது என்றும் விளங்குகிறது.

அஜ்வானி என்பவர் தற்காலத்து மராத்தி, இந்தி, பஞ்சாபி, வங்காளி மொழிகளை விடச் சிந்தி மொழி பழம் பிராகிருதத்தை நெருங்கி இருப்பதாகவும், தற்கால இந்திய மொழிகள் அனைத்தும் சிதைந்து உருக்குலைந்து சமற்கிருதத்திலிருந்து கிளைத்த மொழிகள் போல் திரிந்திருக்க, சிந்தி மட்டும் முக்கியமான இலக்கணப் பகுதிகளைப் பாதுகாத்துக் கொண்டிருப்பதாகக் கூறுகிறார்.

பாகிஸ்தானத்து இசுலாமாபாத் பல்கலைக் கழகத் துணைத் தலைவர் குலாம் அலி அல்லானா தாம் செய்த ஆய்வு மூலம், சிந்தி மொழி தமிழோடு பல விதங்களில் நெருங்கிய தொடர்புடைய தென்று தம் ஆய்வின் முடிவில் தெரிவித்திருக்கிறார்.

இவற்றிலிருந்தும், மூலத் தமிழிலிருந்து கிளைத்த மொழிகளே வடநாட்டுப் பிராகிருத மொழிகள் என்று விளங்குகிறது.

தமிழுக்கும், பிராகிருதிக்கும் நெருங்கிய தொடர்பு இருக்கிறது. இலக்கண அடிப்படையிலும் இவை இரண்டும் சமற்கிருதத்திலிருந்து வேறுபடுகின்றன என்பர் இம்மொழிகளை ஆராய்ந்த அறிஞர் (D.C. Sircar, Prakrit grammar, Calcutta). இவ்விரு மொழிகளின் உயிரெழுத்துக்களிலும் ஒற்றுமை காணப் படுகின்றது.

- பிராகிருதியில் தமிழ் போல் அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஒ, ஓ, உயிரெழுத்துக்கள் உள்ளன. வடமொழிக்குரிய புலதம், விசர்க்கம் போன்றவையும் இல்லை. ரு, ரூ, லு, லூ போன்றவையும் இல்லை. ங, ஞ, ஸ, ஷ என்ற மெய்யெழுத்துக்களும் இல்லை. (தமிழிலுள்ள ள, ற வும் இல்லை).
- கூட்டெழுத்துக்கள் அமைப்பு தமிழ் மரபை ஒட்டியிருக்கிறது. வடமொழியில் தன்னின எழுத்துக்கள் மட்டுமின்றிப் பிற மெய்களின் கூட்டுறவே அதிகமாகும். தமிழில் தன்னினக் கூட்டே மிகுதியாகும்.
- வடமொழியில் ஒருமை, இருமை, பன்மை என்ற மூன்று எண்கள் உள்ளன. பாலி, பிராகிருத மொழிகளில் திராவிட மரபுப்படி ஒருமை, பன்மை என்ற இரு எண்களே உள்ளன. இருமை இரு வடிவம் இல்லை.
- நான்காம் வேற்றுமை தமிழில் கு. தெலுங்கில் கை. கன்னடத்தில் கெ என்று வரும்.

பிராகிருதம் திராவிட வடிவத்தைப் பெற்றிருக்கிறது. காலங்காட்டும் சமற்கிருதத்தின் பல்வேறு விகுதிகள் பிராகிருதியில் இல்லை. தமிழ் எ, ஒ போன்ற குறில்கள் பிராகிருதியில் உண்டு. சொல் உச்சரிப்பு முறையில் பிராகிருதம் முழுவதும் தமிழோடு ஒத்திருக்கிறது. சில எடுத்துக்காட்டுகள் :

| **தமிழ்** | **பிராகிருதம்** |
|---|---|
| அச்சன் | அஜ்ஜ |
| அத்தன் | அத்த |

| தமிழ் | பிராகிருதம் |
|---|---|
| அத்தை | அத்தா |
| அப்பன் | அப்ப |
| இதோ | இதோ |
| செட்டி. | சேட்டி.... |

## 2.2. மராத்தி - இந்தி மொழிகளில் பழந்தமிழ்ச் சொற்கள்

விஸ்வநாத கைரே என்பவர் நம்ப முடியாத அளவுக்குப் பல ஒற்றுமைகள் தமிழ்-மராத்தி மொழிகளிலும், பண்பாடுகளிலும் இருப்பதாகத் தம் ஆய்வு மூலம் வெளிப்படுத்தி இருக்கிறார். பல மராத்தியச் சொற்கள் தொல்காப்பிய உரிச்சொல் இயல் சொற்களுடன் ஒத்திருப்பதை எடுத்துக் காட்டுகிறார். அவர் தம் ஆய்வுக் கட்டுரையில் பின் வருமாறு கூறுகிறார்:

> ஒரு நூற்றாண்டுக்கு மேலாக, மொழியியலார் மராத்தி மொழி சமஸ்கிருத மொழியிலிருந்து தோன்றியதாகவும், சில கன்னட, தெலுங்குச் சொற்களைத் தவிர்த்து இம்மொழி வேறு எந்தத் தென்னிந்திய மொழிகளுடனும் தொடர்பற்றது என்றும் எண்ணி இருந்தனர். இதற்குக் காரணம் கால்டுவெல் என்ற அறிஞர் சமற்கிருதத்திலிருந்து தோன்றிய மொழிகளுள் மராத்தியும் ஒன்று என்று கூறியதே. அதனால்தான் பெரும்பாலான மராத்திய மொழிச்சொற்கள் சமற்கிருதத்திலிருந்து தோன்றியவை என்று நம்பினர். சில அடிப்படைச் சொற்கள் சமற்கிருத உச்சரிப்பை ஒத்திருப்பதால் அவை சமற்கிருதத்திலிருந்து தோன்றியவை என்று எண்ணினர். ஆனால் சொற்றொடர் அடிப்படையில் பார்க்கும் போது வேறு விதமாக இருக்கிறது.
>
> மகாராட்டிரத்தின் பெரும்பாலான இடப் பெயர்களைத் தமிழ் மூலம்தான் விளக்க முடியும். காரணம் வரலாற்றுக் காலத்துக்கு முன் மகாராட்டிரத்தில் வசித்த மக்கள் தமிழ் போன்ற ஒரு மொழியைப் பேசி இருக்க வேண்டும். நாட்டுப்புறப் பண்பாடு, கிராமக் கடவுளர்கள் வழிபாட்டு முறைகளில் காணப்படும் சொற்கள்

முழுமையாகத் தமிழுடன் தொடர்புடையனவாக உள்ளன. பெரும்பாலான இச்சொற்கள் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன. இதிலிருந்து மராத்தியில் காணப்படும் சொற்களின் பழமை நன்கு புலப்படுகிறது.

மராத்திய மொழியில் காணப்படும் கன்னட, தெலுங்குச் சொற்கள் தென்னிந்தியக் குடும்ப மொழிகளின் பொதுச் சொற்களே. இருப்பினும் அவைகள் உச்சரிப்பிலும், தொடரியலிலும் கன்னடம், தெலுங்கை விடத் தமிழ் வேர்ச் சொற்களோடு அதிகம் ஒத்திருக்கின்றன.

மகாராட்டிரத்தின் பெரும்பாலான கிராம மக்களின் நடைமுறைச் சொற்களும், சமற்கிருத இலக்கியச் சொற்களை விடத் தமிழ் நாட்டுப்புறச் சொற்களுடன் மிகவும் தொடர்புடையனவாக உள்ளன. படிக்காத இம்மக்களின் மொழிநடை தமிழ் மூலத்தைக் காட்டும் குறிப்புகள் என்று நிச்சயப்படுத்திக் கொள்ளலாம்.

பழங்கால மராத்தி மொழி தொல்காப்பியத் தமிழ் இடையே உள்ள பல விதமான ஒற்றுமைகளை இலக்கணம் தொடரியல் மூலமாக விளக்க முடியும். இவைகள் உண்மையில் மராத்தியியலில் உள்ள, சமற்கிருத மொழியால் விளக்க முடியாத இருட்டுகளைப் போக்கும் ஒளி என்றால் மிகையாகாது.

பல சமற்கிருதமொழிச் சொற்களின் பொருளையும் மூலத்தையும் உணர்த்தும் மொழியாக மராத்தி மொழியைக் கொள்ளலாம். மராத்திய மொழியைச் சமற்கிருதம் - தமிழ் ஆகியவற்றை இணைக்கும் மொழியாகவும் கொள்ளலாம். சமற்கிருதம், மராத்தி, தமிழ் ஆகிய மொழிகளில் பெரும்பாலான சொற்கள் பொதுவானவை. இச்சொற்கள் இடையே, உச்சரிப்பு, தொடரியல்களில் ஒற்றுமை இருந்தாலும் நேரடியாக விளக்க முடியாது.

விஸ்வநாத கைரேவுக்கு முன்னர்த் தேவநேயப் பாவாணர் என்ற தமிழறிஞர் இது பற்றி விரிவாக விளக்கியுள்ளார்.

தமிழிலிருந்து முதலில் திரிந்த மொழி தெலுங்கே என்றும், அது திரிந்துதான் பிற வடநாட்டு மொழிகளானதாகக் கூறுகிறார். ஒரு காலத்தில் கொடுந்தமிழாக இருந்த மொழிகள் ஒரு பிரிவு தமிழர் விந்தியமலைக்கு அப்பால் குடியேறியபோது திரவிடம் என்னும் கிளைமொழிகளாகத் திரிந்து விட்டதாகவும், அவ்வாறு திரிந்த மொழிகளே சூரசேனி, மாகதி, மகாராட்டிரம் போன்ற பிராகிருத மொழிகள் என்கிறார். அவை மேலும் திரிந்து இக்கால இந்தி, வங்காளி, மராத்தி, குசராத்தியாகி விட்டதாகக் கூறுகிறார். இவற்றின் அடிப்படைச் சொற்கள் தமிழாயிருப்பதுடன் தொடரமைப்பிலும் இவை தமிழையே முற்றிலும் ஒத்திருக்கின்றன என்கிறார். அதனால் தான் மராத்தியும், குசராத்தியும் ஒரு காலத்தில் திராவிட மொழிகளாய்க் கொள்ளப்பட்டு, பஞ்ச திரவிடத்தின் இரு கூறுகளாய்க் குறிக்கப்பட்டதென்கிறார்.

அவர் வட திரவிடத்திலும், ஆரியத்திலும் மூவிடப் பெயர்களில், தன்மைப் பெயரடி மகரமாயிருத்தற்குத் தோற்றுவாய் செய்தது தெலுங்குப் பன்மைச் சொல்லே என்கிறார்.

சில தெலுங்குச் சொற்களின் முதலிலுள்ள உயிர்மெய் இடை ரகரம் செருகப்படும் என்கிறார்.

எ.கா.

| **தமிழ்** | **தெலுங்கு** |
|---|---|
| பொழுது | ப்ரொத்து |
| மண்டு | ம்ரண்டு |

இவ்வழக்கே வடசொல் திரிபுகளுக்கு வழிவகுத்ததாகக் கூறுகிறார்.

எ.கா.

| **தமிழ்** | **வடமொழி** |
|---|---|
| தமிழ் | த்ரமிள |
| படி | ப்ரதி |
| பதிகம் | ப்ரதீக |
| மதங்கம் | ம்ருதங்க |
| மெது | ம்ருது ... |

பல தமிழ் மென்றொடர்ச் சொற்கள் தெலுங்கில் வல்லோசை பெறும் என்கிறார்.

எ.கா.

| | |
|---|---|
| கும்பு | கும்ப்பு |
| என்றார் | அண்ட்டாரு. . . |

*ஆரியமாக மாறிய பிற தெலுங்குத் திரிபுகளாவன:*

**தன்மை முன்னிலைப் பெயர்களின் நகர முதல் மகரமாதல்**

*நாம் - மனமு*

*நீர் - மீரு*

**வினாவடி ககரமாகத் திரிவதற்கு வழிவகுத்தல்**

*எவற்றினை - வேட்டினி*

*எவற்றின் - வேட்டின்*

**வகரம் ககரமாகத் திரிதல்**

*ஆவா - ஆகா*

*சிவப்பு - சிகப்பு*

*துவர் - துகர்*

*இம்முறையில் எவ்-வெ-கெ எனத் திரிந்து பிராகிருதம் என்னும் வடதிராவிடத்திலும், ஆரிய மொழிகளிலும் வினாவடி ககரமாக மாறும் என்கிறார்.*

| | | |
|---|---|---|
| *இந்தி* | *கோன்-யார்* | *ககாங்-எங்கே* |
| *இலத்தீன்* | qui - *எது* | quot - *எத்தனை* |
| *சமற்கிருதம்* | *குத்ர - எங்கே* | *கிம் - என்ன* |

*இவ் வ, க திரிபு தெலுங்கை அடுத்த மராத்தியிலேயே தொடங்கி விடுகின்றது. மராத்தி முதலில் ஐந்திரவிடத்தில் ஒன்றாயும், பின்பு நடுத்திர விடமாகவும், அதன் பின் ஐம்பிராகிருதத்துள் ஒன்றாயும் இருந்தமை கவனிக்கத் தக்கதென்கிறார்.*

> *வடக்கே செல்லச் செல்ல, தமிழ் ஒலிகள் வலித்துக் கொண்டே போகும். இதற்குத் தொடக்கம் தெலுங்கும் முடிவு சமற்கிருதமும் ஆகும். தெலுங்கு வடமொழி போல் வல்லோசை பெற்றிருப்பதுடன், வட திசையாற் பெயர் பெற்றிருப்பதும் கவனிக்கத் தக்கது. . .முதன் முதல் வடதிசையால் வடுகு என்று பெயர் பெற்றதும், உண்மையில் வடமொழிக்கு அடிப்படையும் தெலுங்கே.*
>
> *தமிழ் வேங்கடத்திற்கு வடக்கே சென்று திரவிடமாய்த் திரிந்ததுடன், திரவிட மொழிகளும் வடக்கே செல்லச்செல்ல மேன்மேலும் திரிந்தும், சிதைந்தும், சிறுத்தும் முதலில் பிராகிருதங்க ளாகவும் பின்னர் ஆரியமாகவும் மாறின*

*என்கிறார்.*

வேத ஆரியர் இந்தியாவுக்கு வருமுன் வடக்கே திராவிட மொழிகளும், தெற்கே தமிழும் வழங்கியதாகவும், திரவிடம் தென் திரவிடம், நடுத்திரவிடம், வட திரவிடம் என்று மூன்றாக இருந்ததாகவும் கூறுகிறார். வடுகு தென்திரவிடமென்றும், மகாராட்டிரம், குர்ச்சரம் நடுத்திரவிடம் என்றும், வட இந்தியப் பிராகிருதம் வடதிரவிடம் என்றும் அழைக்கப்பட்டதென்கிறார். தெலுங்கு வடிவாகப் பல தென்சொற்கள் மேலையாரிய மொழிகளிலும் வழங்குவதைச் சுட்டிக் காட்டுகிறார்.

எ.கா.

| தமிழ் | தெலுங்கு | ஆரியம் |
|---|---|---|
| விளி | பிலு (ச்)சு | பெல்லா (இலத்தீன்)<br>அப்பீல் (ஆங்கிலம்) |
| அள் (காது) | அடுகு | ஆடியோ (இலத்தீன்).<br>ஆடியன்ஸ், ஆடிபில் (ஆங்கிலம்) |
| வரை | வராசு | ரைட் (ஆ)- |
| சால் | சாலு | சடிஸ் (இ) -சட்டிஸ்பை (ஆ) |
| வண்டி | பண்டி | பண்டி (ஆ) |

**மேலை ஆரியத்தில் மூவிடப்பெயர்களின் திரிபு**

**தமிழ்**

| தன்மை | முன்னிலை | படர்க்கை(சுட்டு) |
|---|---|---|
| யான், நான் | நூன்-நீன்-நீ | அவன்-அவர்-அது |
| யாம்-நாம் | நூம்-நீம் | |
| | நீயிர்-நீவிர்-நீர் | அவர், அவர்கள், அவை |

**தெலுங்கு**

| | | |
|---|---|---|
| நேனு | நீவு | வாடு, அதன், அதடு<br>ஆதி (பெ.பா, ஒ.பா) |
| மேமு | மீரு | வாரு, வாண்ட்லு, அவி |

**இந்தி**

| | | |
|---|---|---|
| மைன் | து | வஹ் (அவன், அவள், அது) |
| ஹம் | தும் | வே (அவர்கள், அவை) |

**தியுத்தானியம்**

| | | |
|---|---|---|
| ic | tu(du) | he, heo, (she), hit(it) |
| we | ye | hi (they) |

**இலத்தீனம்**

| | | |
|---|---|---|
| ego | thou | is (he), ea (she), id (it) |
| nos | vos | ii (i) or ei, eae, ea |

**கிரேக்கம்**

| | | |
|---|---|---|
| ego | su | autos, autê, auto |
| nô | sphô | - - - - - - - - - - - |
| hêmeis | humeis | autoi, autai, auta |

**வேதமொழி, சமற்கிருதம்**

| | | | | |
|---|---|---|---|---|
| | | ஆ.பா. | பெ.பா. | அ.பா |
| ஆஹம் | த்வம் | ஸ: | ஸா | தத் |
| ஆவாம் | யுவாம் | தௌ | தே | தே |
| வயம் | யூயம் | தே | தா | தானி |

பாவாணர், வடமொழி பற்றிப் பின் வரும் கருத்துக்கள் கொண்டவர்:

**வடமொழி ஐந்து நிலைகளில் உருவானது** அதன் முதன் நிலை தெலுங்கு அல்லது தென் திரவிடம். இரண்டாம் நிலை பிராகிருதம் அல்லது வட திரவிடம். மூன்றாம் நிலை கீழையாரியம். வேத ஆரியரின் முன்னோர் வட கோகித்தானத்திலிருந்த போது (தற்கால ஈரான்) பேசிய மொழியே கீழையாரியம். இம்மொழி கிரேக்கத்திற்கு மிக நெருக்கமாய் இருந்தது. நான்காம் நிலை வேதமொழி. வேத ஆரியர் வடநாட்டில் சிறுபான்மையினராய் இருந்ததால் வடநாட்டுத் திரவிடருடன் கலந்து தங்கள் முன்னோர் மொழியை மறந்து விட்டனர். வேதங்கள் ஆரியர் இந்தியாவுக்கு வந்து பல நூற்றாண்டுகள் சென்ற பிறகே இயற்றப்பட்டதால் வேதமொழி பிராகிருதம் என்னும் வடதிரவிடச் சொற்கள் கலந்தது. வேதமொழியின் சொற்றொடரமைப்பு தமிழ் முறையைத் தழுவியது.

ஐந்தாம் நிலை சமற்கிருதம் வேதமொழியும் ஆயிரக்கணக்கான தென்சொற்களும் கலந்ததே சமற்கிருதம். வடமொழியில் ஐந்திலிரு பகுதி தமிழ்ச்சொற்கள் உள்ளன.

வடமொழி இலக்கண அதிகாரமும், இலக்கணக் கூறுகளும் தமிழைப் பின்பற்றி அமைக்கப்பட்டு இருக்கின்றன.

வடமொழியின் எழுத்தியல் தமிழைப் பின்பற்றி அமைக்கப்பட்டிருப்பதால் வடமொழி மெய்கள் தமிழ் மெய்யெழுத்துக்கள் போல் அகரமொடு இயங்குகின்றன. சாரியை என்னும் குறியீடு வடமொழியில் இல்லை.

ஆரியர் தென்னாடு வந்து தமிழரோடு தொடர்பு கொண்ட பின்பே தமிழ் எழுத்தைப் பின்பற்றிக் கிரந்த எழுத்தையும், தேவநாகரியையும் கி.பி. மூன்றாம் நூற்றாண்டிற்குப் பின்னரே அமைத்துக் கொண்டனர்.

வடமொழி நெடுங்கணக்கும் தமிழைப் பின்பற்றியே உள்ளதால் அம்மொழி பிந்தித் தோன்றியது.

மேலை ஆரிய மொழிகளில் எண் வேற்றுமை சொல்லப்படாததால் வடமொழி வேற்றுமை அமைப்பும் தமிழைத் தழுவியது.

கிரேக்க இலக்கணத்தில் ஐந்து வேற்றுமைகளும், இலத்தீன் மற்றும் முதற்கால ஆங்கில இலக்கணத்தில் ஆறு வேற்றுமைகளும் இருக்க வடமொழியில் தமிழில் உள்ளது போல் எட்டு வேற்றுமைகள் உள்ளன. அவற்றின் வரிசையும், பொருளும் தமிழில் உள்ளது போல் இருக்கின்றன. முக்கிய இலக்கணக் கூறுகள் எல்லாம் தமிழைப் பின்பற்றியே அமைந்திருக்கின்றன.

அவர் பின்வரும் சொற்களில் தமிழும் - மராத்தியும் எப்படி திரிகின்றன என்று விளக்குகிறார்.

**மூவிடப் பெயர்கள்**

| தமிழ் | மராத்தி |
|---|---|
| நான் | மீ |
| நாம் | ஆம்ஹீ |
| நூன் (நீ) | தூன் |
| நூம் (நீர்) | தும்ஹீ |
| அதனு (தெ) | தோ |
| அதி (தெ) | தீ |
| அது | தேன் |

**பெயர்ச் சொற்கள்**

| | |
|---|---|
| ஏகு | யா (ஜா) |
| இடு | டேவ் |
| இரு | ரஹ்... |

யகரம் ஆரிய மொழிகளிலும், ஆரியத் தன்மையடைந்த மொழிகளிலும் ஐகரமாகத் திரியும். இது தெலுங்கிலேயே தொடங்குவது கவனிக்கத் தக்கது என்கிறார்.

எ.கா.

| | |
|---|---|
| யமன் (வ) | ஜமுடு (தெ) |
| யுவன் (வ) | ஜவான் (இ) |
| யௌவனம் (வ) | ஜூவெனிலிஸ் (இலத்தீன்) |

மராத்தி சொற்றொடர் அமைதி தமிழில் உள்ளது போல் இருப்பதைப் பின் வரும் எடுத்துக் காட்டுகளால் விளக்குகிறார்.

எ.கா.

மீ த்யாலா எக் ருப்பயா திலா ஆஹே

நான் அவனுக்கு ஒரு ரூபாய் கொடுத்து இருக்கிறேன்

ஹேறங் பத்ர மாஜ்யா டேப்லாலர் டேவ்

இந்தக் கடிதத்தை என் மேசை மேல் வை

பிற சொற்கள் :

| தமிழ் | மராத்தி |
|---|---|
| அம்மை | அம்மா |
| அக்கை | அக்கா |
| அரக்கு | லாக் |
| அரத்தம் | ரக்த |
| ஆய் | ஆயி |
| இக்கடை | இக்கடே..... |

இதே போன்று சூரசேனியிலிருந்து கிளைத்த, தற்கால இந்திமொழி தமிழிலிருந்து எப்படி திரிகிறது என்பதையும் பின்வருமாறு விளக்குகிறார்.

**தமிழ்ச்சொற்கள் திராவிடம் வழியாக இந்தியில் புகுதல்**

| தமிழ் | திராவிடம் | இந்தி |
|---|---|---|
| ஆகு | ஆகு | ஹோ |
| களி | களி | கேல் |

| | | |
|---|---|---|
| கெடு | செடு | ஸடு |
| செடி | செட்டு(மரம்) | ஜாடு |
| செருப்புக்கள் | செப்புலு | சப்பல் |
| பிள்ளை | பில்லி(பூனை) | பில்லீ |
| பிள்ளை | பிட்ட (தெ) | பேட்டா (மகன்) |
| | | பேட்டி (மகள்) |

மூவிடப் பெயர்கள்

| தமிழ் | இந்தி |
|---|---|
| நான் | மைன் |
| நாம் | ஹம் |
| நூன் | தூ |
| நூம், (நும்) | தும் |

> நுன், நும் என்பன நீன், நீம் என்பனவற்றின் மூலமாயிருந்து வழக்கற்றுப் போன தமிழ் முன்னிலைப் பெயர்கள். நுன், நும் என்பன அவற்றின் வேற்றுமை அடிகள். இவையே மராத்தி, இந்தி மொழிகளில் து, தும், எனத் திரிந்து எழுவாய் வேற்றுமைப் பெயர்களாக வழங்கி வருகின்றன.

என்கிறார்.

தமிழ் - இந்தி இலக்கண அமைதியிலும் பின் வரும் ஒற்றுமைகளைக் காட்டுகிறார்:

தமிழில் 4ஆம் வேற்றுமை உருபு கு என்றும் இந்தியில் கோ என்றும் இருக்கிறது.

ராம்கோ - இராமனுக்கு

**7ஆம் வேற்றுமை உருபுகள் :**

மேஜ் பர் - மேசை மேல் (தமிழில் புரம்-பரம் மேல் என்று பொருள் - இந்தியில் பர் - மேல்)

மந்திர் கே ஊப்பர் - கோயிலுக்கு மேல். (தமிழில் உம்பர்-மேல், இந்தியில் ஊப்பர் - மேல்)

கம்லாகே பாஸ் - கமலாவினிட்த்தில் (தமிழில் பால் - இந்தியில் பாஸ்)

பீச்சே தேக்கோ - பின்னால் பார் (பிற்றே - பீச்சே : பின்னால்)

தமிழில் செய்யா என்னும் வாய்பாட்டு ஆவீற்று வினைச்சொல் இறந்த கால வினையெச்சமாகும். இந்தியில் இவ்வாய்பாட்டுச் சொல் இறந்த கால முற்றும், எச்சமுமாகும்.

எ.கா.

ஆ : வா ஆயா : வந்தான், வந்து

போல் : சொல் போலா : சொன்னான், சொல்லி

ஜாத்தா ஹை, போல்த்தா ஹை போன்ற நிகழ்கால இந்தி வினை முற்றுக்கள் போத்தாடு, செப்புத்தாடு போன்ற தெலுங்கு நிகழ்கால வினை முற்றுக்களை ஒத்திருப்பதையும் சுட்டிக் காட்டுகிறார்.

இய என்னும் தமிழ் வியங்கோள் ஈறு இந்தியில் இயே என்றாகிறது.

போலியே : சொல்லுங்கள், சொல்லுக.

கூடாது (ஒல்லாது) என்னும் தமிழ் எதிர்மறை வினைச்சொல், தெலுங்கில் ஒத்து-வத்து எனத் திரியும். சூரசேனியில் வத்து - மத்து ஆகி, அது பின் இந்தியில் மத் எனத் திரிந்துள்ளது.

போக வத்து (தெலுங்கு) போக வேண்டாம்

ஜா மத் (இந்தி) போக வேண்டாம்

தமிழ் வாக்கியம் எழுவாய்-செயப்படுபொருள்-பயனிலை என்ற முறையிலேயே இந்தி வாக்கியமும் அமைந்திருக்கிறது.

ராம் பாத் காத்தா ஹை

இராமன் சோறு உண்கிறான்

என்கிறார். இவை போன்ற பல எடுத்துக்காட்டுகள் மூலம் தமிழ் - இந்தி ஒற்றுமைகளை விளக்குகிறார்.

| **தமிழ்** | **இந்தி** |
|---|---|
| அடே | அரே |
| அரங்கம் | ரங்க் |
| ஆகு | ஹோ |
| ஆம் | ஹாம் |
| இத்தனை | இத்னா. . . |

## 2.3 இந்தோ-ஐரோப்பிய மொழிகளில் தமிழ் வேர்ச்சொற்கள்

ஞானகிரி நாடார் என்பவர் சுமார் 2200 தமிழ் வேர்ச் சொற்கள் ஐரோப்பிய மொழிகளில் இருப்பதாகவும் அவைகளில் 800 கிரேக்க மொழியிலும், 800 இத்தாலிய - செல்த்திக் மொழிகளிலும், 600 தியுத்தானிய (பழைய செருமானிய) மொழிகளிலும் இருப்பதாகவும் தம் ஆய்வு மூலம் விளக்கிக் காட்டியிருக்கிறார். Routledge and Kegan Paul limited என்ற இங்கிலாந்தின் முக்கியப் பதிப்பகத்தின் தலைவரான Norman Franklin என்பவர் இவ் வேர்ச்சொற்கள் சமற்கிருதம் மற்றும் இந்தோ - ஐரோப்பிய மொழிகளைவிடப் பழமையான மொழிகளின் வேர்களுடன் தொடர்புடையதாய் இருப்பதாக மிகவும் பாராட்டியிருக்கிறார்.

இந்நூலாசிரியர் தமிழ்மொழியை ஆரிய மொழியான இத்தீத்து (Hittite) மொழியுடனும் ஒப்பிட்டுப் பார்த்து இத்தீத்து மொழிச் சொற்களில் சில தமிழ்ச் சொற்களுடன் ஒத்திருப்பதைப் பார்த்து அது பற்றியும் ஆய்வு செய்ய இருப்பதாகக் கூறியிருக்கிறார்.

அவர் அத்துடன் நில்லாமல் W.W. Skeat என்பவரின் The Etymological dictionary of the English language இல் உள்ள 14286 சொற்களில் 5700 (40 விழுக்காடு) சொற்கள் தமிழ் மூலத்திலிருந்து வந்தவையென்று விளக்கியிருப்பதாகவும், மேலும் 7200 சொற்கள் (50 விழுக்காடு) தமிழ் மூலத்திலிருந்து வந்தவை என்று சந்தேகப்படுவதாயும் கூறுகிறார். பொதுவாகப் பார்க்கும் போது ஆங்கில மொழி பாதிக்கு மேல் தமிழ் மொழியே என்று தாம் நினைப்பதாகக் கூறுகிறார்.

இவ்வாறு இரண்டாயிரத்திற்கு மேற்பட்ட ஐரோப்பிய கலைச் சொற்களிலும் தமிழ் வேர்ச்சொற்கள் உள்ளன என்றும் அவை கிரேக்க, இலத்தீன், தியுத்தானிய மொழிகள் மூலம் ஐரோப்பிய மொழிகளில் கலந்ததாகக் கூறுகிறார்.

அவருக்கு முன்பே தேவநேயப் பாவணரும், பிற தமிழறிஞர்களும் ஐரோப்பிய மொழிகளில் உள்ள தமிழ்ச் சொற்கள் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

பாவாணர், வட திராவிடருள் ஒரு பிரிவினர் வடமேற்காகச் சென்று ஐரோப்பாவின் வடமேலைப் பகுதியிலுள்ள செருமானிய காண்டிநேவியத்தை அடைந்ததால் அவர்கள் மொழி தியுத்தானியமாகத் (செருமானியமாக) திரிந்தது என்றும்,

அதனால்தான் அது பிற ஆரிய மொழிகளுள்ளும் தமிழுக்கு மிக நெருக்கமாக இருக்கிறது என்றும் கூறுகிறார்.

**சொற்களில் ஒற்றுமை**

கத்தொலிகள் : கூ, கூவு - coo

| | |
|---|---|
| கரை | cry, crow |
| ஊளை | howl Cis-howl |
| கனை | neigh |
| பிளிறு | blare |
| உரறு | roar |
| இமிர் | hum |
| கலி | call |

| **தமிழ்** | **இந்தி** | **ஐரோப்பிய மொழிகள்** |
|---|---|---|
| உம்பர் | உப்பர் | E. upper. over, OE ofer OS obar, OHG ubar ON yfir, Goth. ufar, |
| ஏகு | யா-ஜா | OS, OE, gan, OHG gan gen, skt gam, gac |
| களம்(தொண்டை) | கலா | L gula, OF gole, E gullet Skt kantha |
| | | Skt kantha |
| குத்து | காட் | ME cuthe, kitte, kette Sw kata, kuta, E cut |
| தாதா, தாதை, | தாதா | E dada, daddy, dad, da Skt tata |
| நாரந்தம் | நாரங்கி | Ar. naranj, OF, ME, E orange |
| மடி | | மரி, மர் L mori, OE morthor, E murder Gauth, maurthr |

N.B. E (English)- OE (old English)-OS (old Sweedish)-OHG (old Hungarian) ON (old Norwegian)-Goth (Gothic)-L (Latin)-GK (Greek)-Skt (Sanskrit)

OF (old French)-ME (middle English)-Sw(Sweedish)-Ar (Armenian)

Legrand F. Tamil loanwords in Greek என்ற நூலில் Oryza, Piperie, Zingiberi, Santalon etc. போன்ற சொற்கள் கிரேக்கர்கள் இந்தியாவுடன் வாணிகம் செய்தபோது கடனாகப் பெற்ற சொற்கள். ஆனால் palai (palaya), nereids (from nir), per (peria), pagos (paguthi), gune (penn-hennu-gune), aner (Aan), pais (paiyan), gala (palu-halu) etc... போன்ற சொற்கள், கிரேக்க நாட்டில் கிரேக்கர்களுக்கு முன் வசித்த தமிழ்மொழி பேசிய மக்கள் கிரேக்கர்களுடன் கலந்ததால் அவை கிரேக்க மொழியில் நிலைத்தன என்று கூறுகிறார்.

கிரேக்க நாட்டில் கி.மு. 5ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஏரோதோத் என்ற வரலாற்றாசிரியர் இந்தியாவின் தென் கோடியில் உள்ள குமரிநாட்டிலிருந்து வந்த பினிசியர் முதலில் கிரீத் தீவிலும் பின்னர்க் கிரேக்க நாட்டிலும் கி.மு. 3000 அளவில் குடியேறியதாகக் கூறுகிறார்.

மேற்காசிய, ஐரோப்பிய மொழிகளில் தமிழ் மற்றும் திராவிடச் சொற்கள் மட்டும் கலக்கவில்லை. திராவிடர்களின் அறிவியல், அணுவியல், மெய்யியல், மதம், பண்பாடுகளும் கலந்தன என்றும் தெரிகிறது. அது பற்றிச் சற்று விரிவாகப் பார்ப்போம்.

இக்காலத் துருக்கியின் மிலிட்டசு நகரில் பிறந்த லியூசிப்பசுஃ கிரேக்க அணுவியத்தின் புகழ்பெற்ற அறிவியலார். இவரது காலம் கி.மு. 460-370. இவரும் இவர் காலத்தில் வாழ்ந்த கிரேக்கத்தின் திரேசு கரையோரப் பகுதியில் பிறந்தவரான டெமாக்கிரட்டஸ் (Democretus) என்பாரும் கிரேக்க அணுவியத்தின் மூல கர்த்தாக்கள் எனப்படுவர். கி.மு. 495-435இல் வாழ்ந்த எம்பீடாக்லசு என்பார் கிரேக்கத்தின் மெய்யியலார் என்று போற்றப்பட்டவர். இவ்வறிஞர்கள் நாவலந்தேயத்திற்கு வந்து தமிழ்நாட்டின் அறிவர்களோடு நல்ல தொடர்பு கொண்டி-ருந்ததாகத் தெரிகிறது.

டெமாக்கிரட்டசு, நாவலந் தேயத்திற்கு வந்து ஓகப்பயிற்சி பெற்றுச் சமணராகக் கடுந்துறவு மேற்கொண்டிருந்த தமிழ் அறிவர்களைக் கண்டு மெய்யியல், அணுவியல்களைக் கற்றுச் சென்றார் என்று, Difference between Democriterean and Epicurean philosophy of nature என்னும் நூலில் கார்ல் மார்க்சு என்ற மேல்நாட்டறிஞர் குறிப்பிடுகிறார். இதிலிருந்து கிரேக்கத்தின்

அணுவியல், மெய்யியல் கோட்பாடுகளின் வேர்கள் தமிழ் நாட்டிலிருந்து சென்றவை என்று தெரிகிறது.

எகிப்து நகரமான அலெக்சாந்திரியா வணிக, கலை, தத்துவ, விஞ்ஞான மையமாகவும், இந்தியாவுக்கும், ஐரோப்பாவுக்கும் பாலமாகவும் விளங்கியது. அலெக்சாந்திரியாவைச் சேர்ந்த கிலேமான் என்பவர் கிரேக்கர்கள் தங்கள் தத்துவ சாத்திரத்தை இந்தியாவிலிருந்து திருடி வந்தவர்கள் என்று தயங்காமல் கூறியிருக்கிறார். இந்திய சாங்கியத்துக்கும், பித்தகோரசு என்பவரின் தத்துவத்துக்கும் மிகுந்த ஒற்றுமை இருப்பதாக 18ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த வில்லியம் ஜோன்சு என்பவரும் குறிப்பிட்டிருக்கிறார். சாங்கிய தத்துவம் வேத காலத்திற்கு முன்பே இந்தியாவில் தோன்றியதாகத் தெரிகிறது என்று Kegan Paul, A history of yoga (1982) என்ற நூலில் குறிப்பிட்டிருக்கிறார்.

Schroder என்ற செருமானிய நாட்டு அறிஞர், Phythagoras and die Inder, Leipzig, 1884 என்ற நூலில் பித்தாகோரசுடையது என்று சொல்லப்படும் எல்லாத் தத்துவ, கணித ஆரம்பக் கோட்பாடுகளும் அவர் காலத்தில், இந்தியாவில் மிகவும் வளர்ச்சியுற்ற நிலையில் இருந்ததாகக் குறிப்பிட்டிருக்கிறார்.

> ........சாங்கியத்தின் அடிப்படைகள் மீண்டும் Anaximandre, Heraclite, Empedocle, Anaxagore, Democrite, Epicure போன்றோர்களிடமும் காணப்படுகின்றன. Sceptics, neo-platoniciens போன்றவர்களின் சிந்தனைகளில் இந்தியாவின், குறிப்பாகச் சைன, புத்த சிந்தனைகளின் தாக்கம் மிக அதிகமாக இருக்கிறது. கி.மு. முதல் நூற்றாண்டில் தோன்றிய பாலஸ்தீனத்துக் கிளைச் சமயங்களும் இந்தியக் கோட்பாடுகளைத் தழுவியனவே. Essenien, கிருத்துவ மதங்களின் ஆரம்பக் கட்டத்தில் இந்தியாவிலிருந்து வந்த கருத்துக்களே மிக அதிகமாகக் காணப்படுகின்றன. கிறித்துவின் பிறப்புப் பற்றிப் பைபிளில் சொல்லப்பட்டிருக்கும் நிகழ்ச்சிகள் (காட்சிகள்) புத்தர், கிருட்டினன் பற்றியவைகளை நினைவுபடுத்துகின்றன. Gnostiques, neo-platoniciens, saint-Jean (Evangiles) போன்றோர்களின் சிந்தனையில் இந்தியச் சிந்தனைகள் காணப்படுவது பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒன்று.

> கிறித்து பிறந்த காலத்தில் இந்தியப் பண்பாடும், மதங்களும் மேற்கு ஆசியாவில் மிகவும் முக்கியத்துவம் அடைந்திருந்தன என்பதில் சந்தேகமில்லை. கிறித்து மதத்துக்கும், புத்த மதத்துக்கும் உள்ள ஒற்றுமை எதிர்பாராமல் ஏற்பட்டதில்லை. கிறித்துவக் கோயில் (மாதாகோயில்) அமைப்பு புத்த சைத்யத்தை நினைவு படுத்துகிறது. மதபோதகர்களின் அங்கங்களை வணங்கும் முறை, சபமாலையைப் பயன்படுத்துதல் போன்றவை இந்திய முறைகளே

என்று Alain Danielou என்ற பிரஞ்சு கிறித்தவப் பாதிரியார் Histoire de I'Inde (இந்திய வரலாறு) என்ற தன் நூலில் குறிப்பிட்டிருக்கிறார்.

கி.மு. ஆறாயிரம் ஆண்டளவிலிருந்தே சைவ மதம் மத்திய தரைக்கடல் நாடுகளில் பரவியிருந்ததாகத் தெரிகிறது.

Alain Danielou என்ற அந்தப் பாதிரியார் மேலும் தொடர்ந்து ...

> கிறீஸ் நாட்டில் தியோனிசோஸ் வழிபாடும், ரோம பக்சூஸ் வழிபாடும் சைவத்தின் பிரிவுகள் என்று சொல்லப்படுகிறது. கிரேக்கர்களும் இந்தியா தான் தியோனிசோசின் புனிதப் பூமி என்கிறார்கள். கிரேக்கப் பேரரசனான அலெக்சாந்தரின் வரலாற்றாசிரியர்களும் இந்தியச் சிவனும், கிரேக்கத் தியோனிசோசும் ஒன்றே என்பர். இந்தியப் புராணங்களில் காணப்படும் கதைகளும், காலங்களும், தேதிகளும் தியோனிசோசைக் குறிப்பதாகச் சொல்கிறார்கள். அலெக்சாந்தர், தற்காலக் காபுல் பள்ளத்தாக்கிலுள்ள ஜெலலாபாத்தின் அருகில் இருந்த நிசா நகரில் தான் இந்தியச் சைவர்களின் தொடர்பைப் பெற்றார். ஓமர் என்ற கிரேக்கப் புலவரும் இந்த நிசா நகர் தான் தியோனிசோஸ் வழிபாட்டின் முக்கியத் தலம் என்று சொல்லியிருக்கிறார். அவர், லிகுர்கு ஏதோனியன் என்பவர் முற்காலத்தில் தியோனிசோசின் வளர்ப்புத் தாய்களை நிசா புனித மலைப் பகுதி வரை விரட்டி அடித்தார் என்று

குறிப்பிடுகிறார். இது சிவன், கந்தன், அவன் வளர்ப்புத் தாய்களைப் பற்றியது போல் இருக்கிறது. பொதுவாக மத்திய ஆசியா, கிரேக்க, ரோம நாடுகளில் சிவன், கந்தன் கதைகள் இருந்ததாகத் தெரிகிறது. தாலமி என்ற நிலநூல் ஆசிரியரும் நிசா நகரைத் தியோனிசோபொலீஸ் என்று குறிப்பிடுகிறார். இதிலிருந்து கிரேக்கர்களின் கடவுளான தியோனிசோஸ், நிசா நகரக் கடவுளாகத் தெரிகிறது.

மேலே கூறப்பட்ட செய்திகளிலிருந்து இந்தியத் திராவிடர்கள் மேற்கத்திய நாடுகளில் குடியேறி அங்கெல்லாம் தமிழ் மற்றும் திராவிட மதம், மொழிகளையும், பண்பாட்டையும் பரப்பினர் என்று தெரிகிறது.

# 3. திராவிட மொழிகளும் இந்தோ ஆரியம் அல்லாத மொழிகளும்

ஸ்டென் கொனோவ் (Sten Konnov) *1904*இல் திராவிட மொழிகள் எஸ்த்ருக்சன் மொழியுடன் தொடர்புடையவை என்றார். *1906*இல் H.B. Hubert இவை கொரிய மொழியுடன் ஒத்திருப்பதாகவும், J. Vinson, Lahovary *(1948)* போன்றவர்கள் இம்மொழிகள் பாஸ்க், மத்தியதரைக் கடல் நாட்டு மொழிகளுடன் ஒத்திருப்பதாகவும் கூறியிருக்கின்றனர். C.P.Brown *1930*இல் மித்தன்னி மொழியுடனும், Vives J. Quintana *(1944)*, H.S. David *(1954)*, A. Sadasivam *(1965)* போன்றவர்கள் திராவிட மொழிகளைச் சுமேரிய மொழியுடனும் தொடர்புபடுத்தி யிருக்கின்றனர். K.O. Shamsuddin *(1972)* இவைகளைச் செமித்திக் மொழியுடன் ஒப்பிட்டுக் காட்டியிருக்கிறார். J. Mayer *(1924)*, Tuttle *(1932)*, L. Homburger *(1950)* போன்றவர்கள், இம்மொழிகளை ஆப்பிரிக்க, இலிபியா மொழிகளுடன் இணைத்துக் காட்டியிருக்கின்றனர். வேறு சிலர் இவைகளை ஆஸ்திரேலிய மொழிகளுடனும் மற்றும் சிலர் எகிப்திய மொழியுடனும் ஒப்பிட்டுக் காட்டியிருக்கின்றனர். இப்பொழுது இவற்றை விவரமாகக் காண்போம்.

### அ. ஆப்பிரிக்க மொழிகளில் தமிழ்ச் சொற்களும் இலக்கணக் கூறுகளும்

### *3.1.* பேல் மொழியில் தமிழ்ச்சொற்கள்

பேல் மொழியும், எகிப்திய மொழியும் கி.மு. 4000 ஆண்டுகளுக்கு முன்பே ஆசிய மற்றும் எத்தியோப்பிய இடையர்கள் மூலம் தங்கள் மொழிகளில் தமிழ்ச் சொற்களைப் பெற்றன. திராவிடச் சொற்கள் குறிப்பாகத் தமிழ்ச் சொற்கள் எத்தியோப்பியாவிலிருந்து நைல் நதிக்கரை நாடுகள் வழியாக ஆப்பிரிக்க மொழிகளில் கலந்தன. மனிதனின் அடிப்படைத் தேவையான நெருப்பு, நீர், உணவு பொருட்களைப் பயிரிடும் நிலம்,

வீடு கட்டும் மரம், பால் பொருள்களைக் குறிக்கும் சொற்கள் ஆப்பிரிக்க மொழிகளில் தமிழ்ச் சொற்களாக இருக்கின்றன. இந்த ஒற்றுமை எப்படி ஏற்பட்டது என்பது பற்றிச் சற்று ஆராய்வோம்.

## 1. நெருப்பு

நெருப்பு என்ற சொல் நைல் நதிக் கரையிலிருந்து மேற்காப்பிரிக்காவுக்கும் பின்னர் எகிப்திலிருந்து பான்து மொழி வழியாகப் பிற ஆப்பிரிக்க நாடுகளுக்கும் பரவியது. நைல் நதிக்கரை நாட்டு மொழிகளில் நெருப்பு என்ற சொல் பின் வருமாறு ஆகிறது.

| | |
|---|---|
| நபி, ணவ்க் (g) (எகிப்து) | எரிதல் |
| நொப் (b) (நுபெ) | வேக வைத்தல் |
| நிப் (b) (பெழா) | வெப்பம் |
| நொக் (தெஸொ) | எரிதல் |
| நொக (பரி) | எரிதல் |
| நொக் (லொதுக்சோ) | எரிதல் |
| நியொப் (திங்க்க) | எரிதல் |

நெருப்பு என்ற சொல் மேற்காப்பிரிக்க நாடுகளில் பின்வருமாறு மாறுகிறது.

| | |
|---|---|
| நிப்புதெ (புலர்) | கருப்பாக்குதல் |
| நூக் (g) ஒலப்<br>நிபுகொ (கிழக்குப்புலர்) | கருப்பாக்குதல் |

பிற ஆப்பிரிக்க நாடுகளில் பின் வருமாறு மாறுகிறது.

| | |
|---|---|
| நுகொ (பழிர்மி) | எரிதல் |
| நியொன் (மொரெ) | எரிதல் |
| நியொக்கெ (வாம) | புல்லை எரித்தல் |

தமிழ் இடையர்கள் வரலாற்றுக் காலத்துக்கு மிக முன்பே கிழக்கு ஆப்பிரிக்காவிலிருந்து மேற்கு ஆப்பிரிக்க நாடுகளுக்குக் கொஞ்சங் கொஞ்சமாகப் பரவினர். நிப் என்ற ஆப்பிரிக்க வேர்ச்சொல் தமிழிலிருந்து வந்திருக்கலாம் என்று மொழியியல் அறிஞர் கருதுகின்றனர். காரணம் இது தமிழ் நெருப்பு, கன்னட நிப் (b), தோடா நெப் உடன் ஒத்திருக்கிறது. செமித்திய, அரபு நர் (நெருப்பு) தமிழிலிருந்து சுமேரியர் காலத்தில் கடன் வாங்கப்பட்டு ஆப்பிரிக்க நாடுகளில் பரப்பப்பட்டது. புலரில் நரு நெருப்பாகிறது.

நெருப்பு எரிக்க மட்டும் பயன்பட வில்லை. வேக வைக்கவும் பயன்படுகிறது. வேக வைத்தல் என்ற பொருளிலும் ஒற்றுமை காணப்படுகிறது என்பதைப் பின் வரும் எடுத்துக் காட்டுகள் மெய்ப்பிக்கின்றன.

செரேர் (b) பெல்- எகிப்திய பெர்பெர் - பெழா (b) பெலொல்- பகொ பொலொல் - கர (b) பல் - சொமாலி (b) பலெல் - (b) பச பெல்- தெகெ (b) பில், வேக வை என்ற பொருளைத் தருகின்றன.

இவ்வாறு செரேர், பேல், எகிப்திய, பான்து, திராவிட மொழிகளுக்குள் நெருப்பு என்ற சொல்லில் ஒற்றுமை காணப்படுகிறது. கோப்து ( ஃபிசி, கன்னட (b) பிஸ் வேக வை என்ற பொருளைத் தருகின்றன.

இவை தவிர, கன்னட பெ (b) பெயின் - தமிழ் வே (வெப்பம்)- தோடா வேக வை- ருந்தி (b) பெய (அனல், புக்கு வெய (நெருப்பு)- (b) பெத்தி (b) பெ (வேக வை) க்குள்ளும் ஒற்றுமை காணப்படுகிறது.

**2. நீர்**

கிழக்காப்பிரிக்க மொழிகளில் நீர் என்ற சொல் பின் வருமாறு வழங்குகிறது.

| | |
|---|---|
| பெய் (நந்தி, செம்வாய்) | மழை பெய் |
| பொய் (தெலுங்கு), தமிழ் | ஒழுகுதல், பெய்தல் |

தமிழ், கன்னட சொட்டு, பிராகுயி குட், (b) பாரி தொத் (சொட்டு) உடன் தொடர்புடையதாய் இருக்கிறது.

**3. காடு**

காடு என்ற தமிழ்ச்சொல் ஒலப்பில் (g) கொட ஆகி அதே பொருளைத் தருகிறது. பிற ஆப்பிரிக்க மொழிகளில் அச்சொல் மரம் என்ற பொருளில் சற்று மாற்றி உச்சரிக்கப்படுகிறது.

எ.டு.

| | |
|---|---|
| கெர் (திங்க்கா) | கிளை |
| கெட் (நந்த) | மரம் |
| ஹட் (எகிப்து) | மரம் |
| யட் (லெவொ) | மரம் |

மேலே கூறப்பட்ட சொற்கள் மட்டுமின்றி மாடு, பால் சம்பந்தப்பட்ட சொற்கள் பேல் ஆதிவாசிகள் மூலமாகத்தான் ஆப்பிரிக்க மொழிகளில் கலந்தன. இந்த மாடு சம்பந்தப்பட்ட சொற்கள் திராவிட ஆசியாவிலிருந்து ஆப்பிரிக்காவில் உள்ள செனேகால் நாடு வரையில் உள்ள மொழிகளில் ஒரே மாதிரியாக உள்ளன என்பதைப் பின்வரும் எடுத்துக் காட்டுகளால் அறியலாம்.

| | | |
|---|---|---|
| துளு | நக்கு | பெண் எருமை |
| கொட | நாக் | பெண் எருமை |
| வாம | நக்கோ | கால் நடைகள் |
| நதம் | நக்-பெ (b) | கால் நடைகள் |
| பெர்பா | நாப் | கால்நடைகள் |
| (g) குர்ம | ந | பசு |
| மொப (b) | நக்ப | பசு |
| பெதி | எ-ன்யக் | மாடு |
| bபஜ | ன்யக | பசு |
| எகிப்து | நக், நக்g | பசு |
| வொலப் | நக் | பசு |
| செரேர் | நக்g | பசு |
| சொனிங்கெ | ந | பசு |
| புலர் | நக்கேg | பசு |

ஷேக் திதியான் ந்தியாய் என்பவர் இச்சொற்கள் அனைத்தும் திராவிட மூலத்திலிருந்து வந்தவை என்று விளக்கிக் காட்டியிருக்கிறார். செனேகால் நாட்டு மொழியியல் வல்லுனரான இவர் மேற்கூறிய சொற்களைப் பழந்தமிழ்ச் சொல்லான நகுவாலும், துளுச் சொல்லான நக்குவாலும் விளக்கலாம் என்று கூறுகிறார். காரணம் ஒலப் மொழியில் நக்g-வி என்ற சொல் பசுவைக் குறிக்கிறது. ஆரம்பக் காலத்தில் இச்சொல் நக்g-வி அல்லது நகு-வி என்றிருந்து பிற்காலத்தில் நக-வி என்று மாறி இருக்க வேண்டும் என்று கூறுகிறார்.

புலர் மொழியிலும் மாடு சம்பந்தப்பட்ட சொற்கள் அனைத்தும் திராவிடச் சொற்களாகவே இருக்கின்றன என்பது குறிப்பிடத்தக்கது. புலரில் ங்கரி என்ற சொல் காளையைக் குறிக்கிறது. தெலுங்கு கெட, கன்னட கொண்டெ, கொலமி

கொண்டா, சுமேரிய ஊகுட் எருமையைக் குறிக்கிறது. புலரில் கொசம் என்றால் (பன்மை கொடெ). இது தமிழ் கற, தோடா கர் (பால் கறத்தல்) ஒடு தொடர்புடையதாக இருக்கிறது. எகிப்திய மொழியில் ஸ்ஹர் என்றால் பால் கற என்று பொருள். ஹர் உடன் ஸ் என்ற முன்னொட்டு சேர்க்கப்பட்டிருக்கிறது.

L. ஓம்பர்கர் தன் Le kanara - Bantou dans les langues negro - africaines என்ற கட்டுரையில் திராவிட மொழிகளும், பான்து மொழிகளும் -இஸ் என்ற முன்னொட்டைச் சேர்க்கும் மொழிகள் என்று கூறியிருப்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

ஷேக் அந்தா தியோப் என்ற மொழியியல் அறிஞர் ஓலப் ஊகிர் (பால் கறக்கும் பாத்திரம்) எகிப்திய ஸ்ஹர் உடன் ஒத்திருப்பதைச் சுட்டிக்காட்டுகிறார். பேல் bபிர் என்ற சொல் பிராகுயி, bபிர்தெ உடன் ஒத்திருக்கிறது. (பிராகுயி பலுசிஸ்தானத்தில் பேசப்படும் திராவிட மொழி)

இவ்வாறு திராவிட வேர்கள் ஆப்பிரிக்கச் சொற்களில் இன்றும் நிலைத்திருப்பது வியப்புக்குரியதல்ல. தமிழ் இடையர்கள் தங்கள் சடங்கு முறைகளை ஆப்பிரிக்க மொழிகளில் நிலைக்கச் செய்ததால்தான் தமிழ் வேர்ச்சொற்கள் இன்றும் ஆப்பிரிக்க மொழிகளில் எஞ்சியிருக்கின்றன. பேல் இனத்தில் நான்கு பிரிவுகள் உண்டு. அதில் ஒரு பிரிவினரான க இனத்தினர்தாம், தமிழ் இடையர் சடங்குகளை அறிந்தவர். அந்த இனத்தவர்தாம் மாடு சம்பந்தப்பட்ட சொற்களைப் பேல் மொழியில் நிலைக்கச் செய்தனர்.

இரண்டாவது பிரிவினர் ப என்ற சொல்லால் அழைக்கப்பட்டனர். தமிழில் அக என்றால் சடங்குகள் அறிந்தவன் - பிறரை ஓட்டிச் செல்பவன் அல்லது தலைவன் என்று பொருள்.

மாடு சம்பந்தப்பட்ட தமிழ்ச் சொற்கள் எத்தியோப்பியாவிலேயே தங்கிவிட்ட பேல் இனத்தவரிடையேயும், சொமாலி, அபார், சிதாமொ, பெஜா போன்ற இனத்தவரிடையேயும் கிடையா.

எத்தியோப்பியரிடமிருந்து தமிழ்ப்பண்பாட்டைப் பெற்ற பேல் இனம் எத்தியோப்பிய இனத்தினின்று வேறுபடுவதற்குக் காரணம் இடையர் சடங்கு முறைகளால்தாம். அக என்ற சடங்கு முறைகளைக் கைவிடாத எத்தியோப்பியப் பேல் இனத்தினர் அவ்வினத்தில் அதிகம் கலக்காமல் தனித்து இயங்கி முடிவில் பேல் என்ற இனமாக மாறினர். அப் பேல் இனத்தினர் தங்கள் சடங்கு

முறைகளைக் கைவிட்டிருந்தால் அவர்கள் சாதாரண எத்தியோப்பியர் அல்லது சொமாலி, பெழா போன்ற இனமாக இருந்திருப்பர் அல்லது பான்து இனமாக மாறியிருப்பர். மாடுகளுக்கும், கால்நடைகளுக்கும் முக்கியத்துவம் கொடுத்து அவைகளை உறவாக மதித்ததால்தான் எகிப்தியர்களும் க என்ற சொல்லால் காளையைக் குறித்தது தற்செயலால் ஏற்பட்டதல்ல.

பழங்கால இந்தியாவில் வாழ்ந்த திராவிடர் இனத்தவரிடையேயும் காளைக்கு முக்கியத்துவம் கொடுக்கும் பழக்கம் இருந்ததாக வரலாறு கூறுகிறது. அவர்கள் கடவுளும் காளை வடிவில் இரு கொம்புகளுடன் காட்சி அளிக்கிறார். அந்த மொகஞ்சதரோ மக்களிடமிருந்து இக்கருத்து யூத இனத்தவரிடையேயும் பரவியதாகத் தெரிகிறது. அதனால்தான் மோஸஸ் என்பவர் இரண்டு கொம்புகளுடனும், முகத்தில் ஒளியுடனும் காணப்படுகிறார்.

பண்டைய எகிப்திலும் காளைக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டிருந்தது. எகிப்திய மொழியில் க என்றால் காளை அல்லது உயர்ந்த அல்லது உறவு என்ற பொருள் உண்டு.

க அல்லது கன் பேல் இனத்தில் ஓர் ஆயர் (இடையர்) பிரிவினர். ப என்ற பெயர் எகிப்திய மொழியிலும் உண்டு. அப்படியானால் பேல் இனத்துக் க, ப எகிப்திய இனத்திலிருந்து தோன்றியவர்களா என்ற வினா எழுகிறது. அப்படி அவர்கள் எகிப்திய இனத்திலிருந்து தோன்றியிருப்பின் அவர்கள் பண்பாடும், மொழியும் எகிப்தியப் பண்பாடு, மொழியோடு ஒத்திருக்க வேண்டும். எகிப்தியரும் ஆயர் சடங்குகளைக் கைவிடாமல் இருந்திருப்பர். ஆனால் அப்படி இல்லை.

எகிப்திய மொழியில் க, ப என்ற பெயர்கள் எப்படி வந்தன என்பது புதிராக இருக்கிறது அல்லவா? அக்ந்த க, ப என்ற பெயர்கள் நைல் நதிக்கரை நூயர் என்ற ஆயர் (இடையர்) களிடமும் கன், பல் என்ற பெயர்களிலும் காணப்படுகின்றன. இவை பற்றிப் பின்னர் விளக்கப்படும்.

பேல் இன மக்களில் நான்கு பிரிவுகள் உண்டு. அதில் க என்ற பிரிவினர் ஆயர் இனத்தைச் சேர்ந்தவர். அவர்கள்தாம் சடங்குகளை அறிந்தவர் என்று பார்த்தோம். ப என்ற பிரிவினர் வீரர்கள்.

தமிழில் ஆயர் என்றால் தாய்மார் என்ற பொருளும் உண்டு. தமிழில் கோ அல்லது கோன் கடவுளைக் குறிக்கும்

சொற்கள். கோன் இன் பன்மையான கோனார் ஆயர்களைக் குறிக்கிறது. ஆயர் என்றால் கடவுளின் மக்கள் என்றும் கொள்ளலாம். இந்தக் கடவுள் மக்களான தமிழ்க் கோனார்கள் குளித்து விட்டுச் சடங்குகளைச் செய்பவர். அவர்கள் சோதிடம் அறிந்தவர். பேல் இனத்துக் கன் பிரிவினரும் தமிழ்க் கோனார் போல் குளித்து விட்டுச் சடங்குகளைச் செய்பவர். தமிழ்க் கோன், பேல் கன் ஆகியோர் தங்கள் சடங்கு முறைகளால் அக அல்லது தீட்சை பெற்றவர்கள் என்று அழைக்கப்படுகிறார்கள். நக் என்ற சொல் பேல் மொழியில் மாட்டைக் குறிக்கிறது என்று பார்த்தோம். இந்தச் சொல் தமிழிலும் பிற திராவிட மொழிகளிலும் உண்டு.

எகிப்திய மொழியில் க என்றால் காளை அல்லது உயர்ந்தது என்ற பொருள் என்றும் பார்த்தோம். பேல் இனத்தில் உள்ளது போல் எகிப்திய இனத்தில் க, ப என்ற பிரிவுகள் இல்லை. அதனால் க அல்லது கன் என்ற பேல் இனப் பிரிவினர் எகிப்து இனத்திலிருந்து வந்தவர் அல்லர் என்பது உறுதியாகிறது. ஆனால் க, ப என்ற பேல் இனப் பிரிவுகள் நைல் நதியின் மேற்குப் பகுதியில் வாழ்ந்த நூயர்களிடம் கன், பல் என்ற பெயர்களில் இருந்திருக்கிறது. அதனால் பேல் இனத்தவர் பண்பாடு, சமூக வாழ்க்கை முறைகள் மூலம்தாம் இதை விளக்க முடிகிறது.

பேல் மக்கள் வழக்கமாக எதையும் பத்துப்பத்தாக எண்ணும் முறையைக் கையாள்பவர். ஆனால் பேல் கன் பிரிவினர் சந்திரனை அடிப்படையாக வைத்து மாதத்தை எட்டுப் பிரிவுகளாகப் பிரிக்கின்றனர். இவ்வாறு பேல் கன் பிரிவினர் மாதத்தைப் பங்கிடும் முறை தமிழ்க் கோன் அல்லது கோனார் (சரியாகச் சொல்வதாயின் கணியன் அல்லது கணியர் - கணிப்பவர்) முறையைத் தழுவியதாக இருக்கிறது. ஒன்றை எட்டாகப் பிரிப்பது திராவிடர் முறை.

தீட்சை பெறுவதற்கு முன் பேல் கன் பிரிவினர் ஒரு சிங்கத்தை வெல்ல வேண்டும். பாரவன் காலத்துக்கு முற்பட்ட எகிப்திய அரசர்கள் காளை அல்லது சிங்க உருவில் தங்கள் எதிரிகளை நசுக்குவது அல்லது விழுங்குவது போல் பல படங்களில் சித்திரிக்கப்பட்டிருக்கிறார்கள்.

திராவிட அரசர்களின் கொடிகளில் காளை அல்லது சிங்கங்கள் பொறிக்கப்பட்டிருக்கின்றன. பல்லவர்கள் காளையைச் சின்னமாகக் கொண்டவர்கள். எகிப்தியக் காளைச் சின்னம் பழைய திராவிட முறையைத் தழுவியதாக இருக்கிறது. ஆனால் பேல் தீட்சை முறை இடையரான (ஆயரான) அவர்களைச் சிங்கத்துடன்

இணைக்கிறது. பேல் கன் இனத்தினர் திராவிட ஆயர்களின் புராதனச் சடங்குகளைத் தங்கள் இனத்தில் காலங்காலமாக நிலைக்கச் செய்தனர். ஆனால் இந்தியாவில் தங்கி விட்ட ஆயர்கள் இப்பழக்க வழக்கங்களைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கைவிட்டு நகர நாகரிகத்தை உருவாக்கினர்.

மேற்கூறிய விளக்கங்கள் மூலம் பேல் க அல்லது கன் பிரிவினர் வரலாற்றுக்கால ஆரம்பத்தில் ஆப்பிரிக்காவுக்குச் சென்று அங்கேயே தங்கி விட்ட தமிழ்க் கோனாரில் ஒரு பிரிவினர் என்று தெரியவருகிறது.

புலர் மொழியில் மாடு சம்பந்தப்பட்ட சொற்கள், தமிழ்ச் சொற்களாகவே இருக்கின்றன என்று முன்னரே பார்த்தோம். புலரில் ஃபெர்தெ, வெத்துதெ என்றால் எறிதல் துளைத்தல் என்று பொருள். இச்சொற்கள் தமிழ் வேல் (வேலன் - வேலெறிபவன், வேலையுடையவன்) உடன் தொடர்புடையதாய் இருக்கின்றன.

இதே போல் தமிழ், மலையாள வில் (வில்லவன், வில்லையுடையவன்), கன்னட (b)பில், தோடா பிஸ்(b) பில், பில் ஆகவும் பிஸ், பிட் ஆகவும் மாறக் கூடியது) எகிப்திய பித், கோப்த் பித்தெ-வுடன் தொடர்புடையதாகி வில்லைக் குறிக்கின்றன.

புலர் பிடவோ (வில் உடையவன், ஃபிடுகோ (வில்லெறிதல்), பித்தொ (வேடன், வில்லெறிபவன்), பிட்கி (வேட்டை), ஒலப் ஃபிட் (வில்) தமிழுடன் தொடர்புடையதாக இருக்கின்றன.

கன் என்ற பிரிவினர் தமிழ் வில்லவனாகவோ, ஆயர்களாகவோ இருக்கலாம். இவ்வாறு மாடுகள் மேய்த்தும், வேட்டையாடியும் வாழ்ந்த அந்த இனம் தங்கள் பால் பொருள்களையும் விற்று வாழ்ந்தனர். மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே மொகஞ்சதரோ தமிழ் வணிகர் வில்லால் குறிக்கப்பட்டனர் என்பது குறிப்பிடத் தக்கது.

தமிழில் வில் என்ற சொல் விற்றல் என்ற பொருளையும் தருகிறது. இதே போல் புலரில் பிதவொ என்றால் வேடன் (பித் என்ற வேர் வில்லிலிருந்து வந்தது), பிலவொ என்றால் வணிகர்.

தீட்சை பெற்ற பேல் இனத்துக் கன் என்ற ஆயர்களுக்கு முக்கியத் தொழில் ஆடு, மாடுகள் மேய்த்தல், பால் பொருள்களை விற்றல் ஆகும். இவ்வாறு கன் பிரிவினர் மட்டும் பால் பொருள்களை விற்பவராக இருந்ததால் அவர்கள் அப்பொருள்களைத் தமிழ்ப் பெயர்களாலேயே தொடர்ந்து விற்று ஆப்பிரிக்க மொழிகளில் தமிழ்ச்சொற்களைப் புகுத்தினர்.

பின்னர்ப் படிப்படியாக ஜெர்சே இனத்தில் கலந்த அந்தத் தமிழ்க் கோனார்கள் எகிப்திய நாகரிகத்தில் இணைந்தனர். மேற்கு நோக்கிச் சென்ற கன் பிரிவினர் ஆப்பிரிக்க மக்களுடன் ஆப்பிரிக்கச் சூழ்நிலையில் வாழ ஆரம்பித்தனர். கிழக்காப்பிரிக்காவிலிருந்து புறப்பட்ட அவர்கள் போகும் வழியில், நைல் நதி மக்களுடன் கலந்தனர். இதனால்தான் எகிப்திய மொழியிலும் தமிழ்க் கோனார்களின் சொற்கள் கலந்தன. பின்னர் இச்சொற்கள் அம்மொழிகளின் அமைப்புக்கேற்பச் சில மாற்றங்களைப் பெற்றன. இதுவே அத்தமிழ்ச் சொற்கள் திராவிட மொழிச் சொற்களிலிருந்து வேறுபடுவதற்குக் காரணம். மலை சம்பந்தப் பட்ட சொற்களை ஒப்பிட்டுப் பார்க்கும் போதும் இவ்வித ஒற்றுமைகளைக் காணமுடிகிறது.

ஆயர் சடங்கு முறைகளைக் கைவிட்ட எகிப்தியர் மலையைக் குறிக்கத் தொடர்ந்து தமிழ்ச் சொல்லையே உபயோகித்தனர். உயரத்தைக் குறிக்க எகிப்திய மொழி கவ் என்ற சொல்லைப் பயன்படுத்துகிறது. கயித் என்ற சொல் உயர்ந்த பூமி அல்லது பாரவனின் சிம்மாசனத்தைக் குறிக்கிறது.

தமிழில் கோ என்றால் மலை அல்லது அரசன் என்று பொருள். எகிப்திய பிரமிடு என்னும் கோபுரம் மெர் என்ற சொல்லால் குறிக்கப்படுகிறது. தமிழில் மேடு குன்று என்ற பொருளையும் தருகிறது.

தமிழ் கோ- புலரில் கொசரே (உயரே, ஒசரே) ஆகி மலைப் பிரதேசத்தைக் குறிக்கிறது. தமிழ் விடம் (இடம்), கொடகு bபெட், தோடா பொட், கன்னட bபெட்ட, பிராகுயி பிட் (மலை), புலரில் ஃபெல்லோ ஆகிறது. இவ்வாறு பசு, மலை சம்பந்தப்பட்ட பேல்மொழிச் சொற்கள் தமிழ்ச் சொற்களாகவே இருக்கின்றன. இந்தப் பண்பாட்டு ஒற்றுமைகளை ஒப்பிட்டுப் பார்க்கும் போது பேல் க, கன் பிரிவினர் தமிழ்க் கோனாரிலிருந்து வந்தவர் என்பது தெளிவாகிறது.

இப்போது இரண்டாவது பிரிவினரான பேல் ப இனத்தைப் பற்றிச் சற்று ஆராய்வோம்.

க, கன் என்ற பிரிவினர் ஆயர்கள் என்றும், ப, பல் என்ற பிரிவினர் வீரர்கள் என்றும் பார்த்தோம்.

தமிழில் வல் என்றால் வலிமையைக் குறிக்கிறது. வல்லவன் என்பது வலிமையுடையவனைக் குறிக்கிறது. வல் என்ற சொல் கன்னடத்திலும், சுமேரிய மொழியிலும் bபல் என்றாகி வலிமையைக் குறிக்கிறது. இதைக் கொண்டே ப பிரிவினர்

தமிழரோடு தொடர்புடையவர் என்று கூறலாம். இருப்பினும் அது பற்றித் தொடர்ந்து ஆராய்வோம்.

தமிழ்க் கோனார், பேல் கன் ஆகிய இருவரும் ஒரே மாதிரியான தொழில் செய்பவர். ஆடு மாடுகள் மேய்த்தல், வேட்டையாடுதல், பால் கறத்தல், வேட்டை பொருள்கள் மற்றும் பால் பொருள்களை விற்றல் போன்றவற்றிற்கு ஒரே மாதிரியான சொற்களைப் பயன்படுத்துபவர். இவர்கள் காற்று, மலை சூழ்நிலையில் வாழ்ந்தவர்கள். தமிழ்க் கோனார்கள், இந்திய மலைப் பிரதேசங்களை விட்டு விட்டுப் புல்வெளிகளைத் தேடி இடம் பெயர்ந்து ஆப்பிரிக்க நாடுகளில் வந்து சேர்ந்தனர்.

இப்பொழுது அந்தக் கோனார்கள் ஆப்பிரிக்க வாழ்க்கையில் எப்படி மாறினார்கள் என்பதை வீடு, உறவு முறைச் சொற்களைக் கொண்டு ஆராய்வோம்.

கன் பிரிவினர் தமிழ் உறவு முறைப் பெயர்களை ஆப்பிரிக்க மொழிகளில் பரப்பினர். தமிழில் மாமன் அல்லது மாமா, தாய் மாமனைக் குறிக்கிறது. புலரில் மாம் என்ற சொல் பாட்டனைக் குறிக்கிறது. ஒலப்பில் மாம்யி, தாய்வழி முன்னோர்களைக் குறிக்கிறது. குறிப்பாகத் தாய் மாமனைக் குறிக்கிறது. எகிப்திய மொழியில் த-மோம் முன்னோர்கள் பூமியைக் குறிக்கிறது. புலரில் தாய் மாமனைக் குறிக்கும் கவ் - எகிப்து, பம்பரா மொழிகளில் முன்னோர்களைக் குறிக்கிறது.

பேல் மொழியிலும், மசாய் மொழியிலும் யாய் என்ற சொல், தமிழ் ஆயைக் குறிக்கிறது. மொக்கா மொழி இன்ன, பெர்பர் மொழி யும்ம, தமிழ் அன்னையைக் குறிக்கிறது. ஒலப் யாயெ, குனம் யாய், தமிழ் ஆயைக் (தாய்) குறிக்கிறது.

பெண்பால் விகுதியான பெழா அத், எகிப்திய சத், தமிழ் அத்துடன் ஒத்திருக்கிறது. தமிழில் குயவனின் பெண்பால் குயத்தி, உழவனின் பெண்பால் உழத்தி. இவ்வாறு தமிழ் விகுதிகள் கிழக்காப்பிரிக்க மொழிகளிலும், செமித்திய மொழிகளிலும் இன்றும் நிலைத்திருக்கின்றன.

பேல் கன் இனத்தினர் தாய் வழி உறவு முறைகளைத்தாம் ஆப்பிரிக்க மொழிகளில் புகுத்தினர். காரணம் அவர்களும் தாய்வழி திருமண முறைகளைக் கடைப் பிடிப்பவர்.

இப்போது வீடு சம்பந்தப்பட்ட சொற்கள் மூலம் ஒற்றுமைகளைப் பார்ப்போம்.

ஆப்பிரிக்க மொழிகளில் கட்டடம் சம்பந்தப்பட்ட சொற்கள் தமிழ்ச் சொற்களாகவே உள்ளன. எகிப்திய ஹட் (வீடு), கோப்து கொட் - (கட்டுதல்), தமிழ்க் கட்டு என்ற சொல்லிலிருந்து வந்தது. இதிலிருந்து புதுக் கற்காலத்திலேயெ கருப்பு எகிப்தியர்கள் திராவிடர்களுடன் கலந்து விட்டனர் என்பது தெரிகிறது. அந்தத் திராவிடர்களில் கோனார் மட்டும் இல்லை. வேறு இனங்களும் இருந்தன என்று தெரிகிறது. காரணம் கோனார்களுக்கு மண்பாண்டங்கள் செய்யத் தெரியாது. அந்தக் காலத்தில் செங்கற்கள் செய்வதில் திராவிடர்கள்தாம் சிறந்தவர்கள். இதை மொகஞ்சதரோ கட்டடங்கள் மெய்ப்பிக்கின்றன. கருப்பு எகிப்தியர்களுக்குச் செங்கற்கள் செய்யத் தெரியாது. மேலும் தமிழகத்தின் தலைநகரான சென்னையிலிருந்து, செனேகால் நாட்டுத் தலைநகரான தக்கார் வரை கட்டடக் கலை சம்பந்தப்பட்ட சொற்களில் ஒற்றுமை காணப்படுகிறது.

எ.டு.

| | |
|---|---|
| எகிப்து | ஹட் (வீடு) |
| கோப்து | கட் |
| இக்கொலி, சில்லுக் | கெடொ (கட்டுதல்) |
| மசை, பரி | கெர் (கட்டடம்) |
| நூயர் | கொட் (இருப்பிடம்) |
| செரேர் | கிட் (இருப்பிடம்) |
| புலர் | கொட்டெ (வசித்தல்) |

இவை தமிழோடு தொடர்புடையதாக இருக்கின்றன. புலர் மொழியில் உரொ (பன்மை-குரெ) என்றால் ஊர். உர்தெ என்றால் வாழ்தல் என்று பொருள்.

| | |
|---|---|
| சோமாலி | குரி |
| குராழ் | கொர் |
| புலர் | குர்கள் |

இவை கூரையைக் குறிக்கின்றன. பேல் மொழியில் உர்பெ (பன்மை குர்தொ) என்றால் மக்கள், வசிப்பவர் என்று பொருள். எத்தியோப்பியக் கிளை மொழியான குரொழிலில் உருரொ என்றால் மனிதன் என்று பொருள். ப என்ற இனத்தில் ஒரு கீழ்ப்பிரிவு உருர்பெ என்ற பன்மைப் பெயரால் அழைக்கப்படுகிறது. இவ்வாறு ஊர், வீடு சம்பந்தப்பட்ட சொற்களிலும் ஒற்றுமை காணப்படுகிறது.

சுருக்கமாகச் சொல்லின் பேல் எத்தியோப்பிய மொழிகளில் நீர், கிணறு, மழை, பாட்டு, சண்டை போன்றவை சம்பந்தப்பட்ட சொற்கள் ஒரே மாதிரியாக இருக்கின்றன. பேல் மொழியில் இடையர் சம்பந்தப்பட்ட சொற்கள் எத்தியோப்பியச் சொற்களிலிருந்து வந்தவை. பேல் இனம் கிழக்கு ஆப்பிரிக்காவில் இருக்கும்போது, தமிழ்க் கோனார்களாலும், வில்லவர்களாலும், எத்தியோப்பிய வீர இடையர்களாலும் உருவாக்கப்பட்ட இனம். அதாவது தமிழ்க் க, எத்தியோப்பியப் ப இனங்களின் கலப்பே பேல் இனம். அவர்கள் பெரும்பாலும் புல்வெளி, சோலைகள் போன்ற இடங்களில் வசிப்பவர்கள். கையில் வேலுடன், இருப்பிடம், மந்தை போன்றவைகளைக் காவல் பார்ப்பவர். அந்தப் ப இன மக்கள், தமிழ்க் கோனார்களுடன் கலந்த பின் வடக்கு நோக்கிச் சென்றனர். அங்கிருந்து மேற்கே சென்று பின்னர்ச் சகாரா புல்வெளியை அடைந்தனர். போகும் வழியில் நைல் நதி மக்களுடனும் கலந்தனர். அந்த நைல் நதி மக்கள் பேல் இனத்தில் கலந்து செனேகால் நாட்டில் வந்த போது ஒலப் இனமாக மாறினர்.

தமிழ்க் கன் இனமும், எத்தியோப்பியப் ப இனமும் படிப்படியாக ஓரினமாக மாறின. ஆனால் அவ் இரு இனங்களும் தங்கள் பண்பாடுகளை விட்டுக் கொடுக்காமல் வாழ்ந்தன. க அல்லது கன் பிரிவினர் மாடுகள் சம்பந்தப்பட்ட சடங்குகளைத் தமிழ் முறைப்படி பேல் இனத்தில் நிலைக்கச் செய்தனர். அதே போல் ப அல்லது பல் இனத்தினர் தாங்கள் வாழ்ந்த சூழ்நிலை பற்றிய சொற்கள் மற்றும் நீர், கிணறு, புல்வெளி சம்பந்தப்பட்ட சொற்களைப் பேல் மொழியில் நிலைக்கச் செய்தனர். சொமாலி, ஒரொமோ, பெழா இனத்தவர்களிட மிருந்து பெற்ற வீர உணர்ச்சிகளையும் அந்தப் ப இனத்தினர் எகிப்திய இனத்தில் கலந்த போது எகிப்தியருக்கும் ஊட்டினர். அதனால் தான் எகிப்திய மொழியிலும் க, ப என்ற பிரிவுகள் ஆரம்பத்தில் இருந்து பின்னர் மறைந்து விட்டன. பேல் இனத்திலும் க, ப என்ற பிரிவையும் உருவாக்கினர். பிறகு அந்தக் க, ப இனத்தினர் நைல் நதி மக்களின் திருமண முறைகளைக் கடைப்பிடித்தனர். அதனால் தான் பேல் மொழியில் திருமணம் சம்பந்தப்பட்ட சொற்கள் தமிழ்ச் சொற்களாகவோ, எத்தியோப்பியச் சொற்களாகவோ இல்லாமல் நைல் நதி பிரதேசச் சொற்களாவே உள்ளன. வரலாற்றுக் கால ஆரம்பத்தில் சகாரா பகுதியில் வாழ்ந்த போது அந்தப் பேல் இன மக்கள், சொனிங்கே, செரேர், ஒலப் மக்களின் முன்னோர்களுடன் தொடர்பு கொண்டனர். பிறகு மேற்காப்பிரிக்க நாடுகளுக்கு வந்து வசிக்க ஆரம்பித்தனர். கி.பி. 900

அளவில் செனேகால் நாட்டுக்கு அருகில் வந்து சேர்ந்தனர். அதன் பின் தெக்ரூர் என்ற நாட்டு மக்களுடன் படிப்படியாகக் கலந்தனர். அப்போதுதான் புலர் மொழியைத் தங்கள் மொழியாகக் கொண்டனர். அந்தப் புலர் மொழியில் ஆயர் சம்பந்தப்பட்ட சொற்களைப் புகுத்திய தோடல்லாமல் அம்மொழிச் சொற்களைத் தமிழ் உச்சரிப்புக் கேற்றபடி மாற்றினர். புலர், பான்து மொழிகளின் அமைப்பு, பேல் மொழியின் அமைப்பிலிருந்து வேறுபட்டாலும் அம் மொழிகளுக்குள் மாடு அல்லது ஆயர் சம்பந்தப்பட்ட சொற்களில் ஒற்றுமை காணப்படுகின்றது. இதற்குக் காரணம் பேல் க, ப இனத்தின் ஒரு பிரிவினர் பான்து மொழியில் வரலாற்றுக்கால ஆரம்பத்தில் கலந்து விட்டதே.

பின் குறிப்பு : இப்பகுதி ஆப்பிரிக்க மூலத்திலிருந்து வந்த பிரஞ்சு ஆய்வாளர் Alain ANSELIN என்பவரின் Les gens de boeuf மாட்டு மனிதர்கள் (இடையர் அல்லது ஆயர்) என்ற நூலின் கருத்துக்களைச் சுருக்கித் தருகிறது.

### 3.2 பழைய எகிப்திய மொழியில் தமிழ்ச் சொற்கள்

பழைய எகிப்திய மொழிக்கும் திராவிட மொழிகளுக்கும் பல ஒற்றுமைகள் உள்ளன. அவைகளுள் சிலவற்றை ஆராய்வோம்:

- எகிப்திய மொழியில் ஆறாம் வேற்றுமை உருபு -ன். சில திராவிட மொழிகளில் அ, இன் ஆறாம் வேற்றுமை உருபுகள் (தமிழ் : தன், தன)
- சில திராவிட வேற்றுமை உருபுகள் எகிப்திய முன்னொட்டுக்குச் சமம்.
- மூன்றாம் வேற்றுமை (கருவி)

| எகிப்து | கன்னடம் |
|---|---|
| ம் | இம் |

- இறந்தகால த் என்ற இடைநிலையிலும் ஒற்றுமை உண்டு.

| எகிப்து | திராவிட மொழிகள் |
|---|---|
| ஸ்தம்த் | அவன் கேட்டான் |
| இலித்ன் | நான் இறக்கப்பட்டேன் (கன்னடம்) |
| கண்த் | கண்டேன் |

- பழைய எகிப்து மொழிகளிலும், திராவிட மொழிகளிலும் அ, இ, உ போன்ற மூன்று விதச்சுட்டுகள் உண்டு. அ தூரத்தையும், இ அருகாமையும், உ ஏற்கனவே அறியப்பட்ட பொருளையும் உணர்த்தக் கூடியன.

எழுத்து வடிவிலுள்ள சில திராவிட மொழிகளில் த், த்(d), ட், ட் (d) என்ற வேறுபாடுகள் உண்டு. ஆனால் பேச்சு வழக்கிலுள்ள சில மொழிகளில் இத்தகைய வேறுபாடுகளைத் தொடர்ந்து காண முடிய வில்லை. மேலும் எகிப்திய த், த்(d) கோப்தில் த் ஆகிறது. ஆனால் த், த்(d) சில சமயம் து ஆகவும், சில சமயம் க், க்(g) ஆகவும் மாறுகிறது. பின்வரும் எடுத்துக்காட்டுகள் அம்மொழிகளுக்குள்ள பொது ஒற்றுமையைக் குறிக்கின்றன.

| எகிப்து | கோப்து | திராவிட மொழிகள் | பொருள் |
|---|---|---|---|
| த்ர் | - | தரி (தெலுங்கு) | காலம் |
| த்ஹ் | தோக் | தகுல (தெலுங்கு) | தகி (த்தல்) |
| த்ஹ் | - | தக்கடி (கன்னடம்) | தராசு |
| ய்த் | எயோத் | அத்தன் | அப்பா |
| ஹ்த்த் | | கித்து (கன்னடம்) | பிடுங்கு |

முக்கொலியான ம், ன் பொதுவாகப் பல சொற்களில் முதலில் வருகின்றன. ஆனால் திராவிட மொழிகளில் அவைகள் சொல் இடையில் ங், ஞ், ண், ன் என்று மாறுகின்றன. இருந்தபோதிலும் அவைகள் தற்காலப் பேச்சு வழக்கு மொழிகளில் மறையத் தொடங்கிவிட்டன. முக்கொலியான ன் கோப்து மொழியில் ல் அல்லது ன் ஆகவும் மாறுகிறது. சில சமயங்களில் திராவிடமொழிகளில் ர், ல் ஆகவும் மாறுகிறது.

எ.டு.

| எகிப்து | திராவிட மொழிகள் | பொருள் |
|---|---|---|
| ம்ங்க் | முகி (mugi)-கன்னடம், முகி | முடி |
| ம்ன்ர்வ் | மர (கன்னடம்), மரமு (தெலுங்கு) | மரம் |
| ம்ல் | மான் (தமிழ்) | மான் |
| ம்ன்ஹ் | மென (குயி) | மெழுகு |
| ம்ன்த் | மூல் (தமிழ்) | வேர் |
| ம்ன் | மன் (தமிழ்) | தங்கு |
| ன்வ் | நால் (கன்னடம்) | நோக்கு |
| ன்னிய் | நோல் (கன்னடம்) | முன்னேறு |
| ன்வ் | நன், நனை (தமிழ், கன்னடம்) | |
| ன்ஸ்வ் | நா (தமிழ்) | நாக்கு |

| | | |
|---|---|---|
| லஸ் (கோப்து) நா (தமிழ்) | | நாக்கு |
| இன் | என், அன் (கன்னடம்) | சொல்லு |
| உன்ம் உண் | (தமிழ், கன்னடம்), நமலு (கன்னடம்) | மெல்லு |

திராவிட மொழிகளில் ஆறுவிதமான நாவொலிகள் இருந்ததாகத் தெரிகிறது. காரணம் தமிழில் ர், ற், ல், ள் போன்ற ஒலிகள் உள்ளன. ர், ல் தற்காலக் கன்னடத்தில் மறையத் தொடங்குகிறது. சில சமயங்களில் ற் ஆகத் தமிழில் ஒலிக்கப்படுகிறது. இந்த ஆறு வித நாவொலிகள் ஆஸ்திரேலிய மொழிகளிலும் காணப்படுவதால் இவை மிகவும் பழமையானவை என்று கருதப்படுகின்றன. இவை மொழி முதலில் வாரா. இந்த ற் எகிப்தியப் பட எழுத்தில் ட்ற் ஆகச் சித்திரிக்கப் பட்டிருக்கின்றது.

எ.டு.

| எகிப்து | திராவிட மொழிகள் | பொருள் |
|---|---|---|
| ப்ற் | பறு (கன்னடம்), பறி (கொந்த்) | பற |
| ப்ற் | பெறு (தமிழ்), பெற் (கன்னடம்) | பெறு |
| ப்ற் | பொற் (கன்னடம்) | கொண்டு போ |
| ம்ர்ஹ் | மறுகு (தமிழ்), தார் (குருக்) | கறித்தல் |
| ஹ்ற் | இழி, இறங்கு (தமிழ் திராவிட மொழிகள்) | |

திராவிட மொழிகளில் ர், ல் எகிப்திய ர் -எ -க்குச் சமம்.

| எகிப்து | திராவிட மொழிகள் | பொருள் |
|---|---|---|
| வ்ர் | ஓர் | ஒரு |
| ர்ல் | எல் | சூரியன் |
| ந்ல் | நல் (தமிழ்), நவ் (கன்னடம்) | நல்ல |

திராவிட மொழிகளிலுள்ள ள், ர் களும் எகிப்திய மொழியில் ஒரே பட எழுத்தால் அதாவது ர் - ற் ஆல் சித்திரிக்கப்படுகின்றன.

| எகிப்து | கோப்து | திராவிட மொழிகள் | பொருள் |
|---|---|---|---|
| ஹ்ர் | ஹில் | கேரி (கன்னடம்), கேரி(ଞ) தெலுங்கு | வழி, பாதை |
| வ்ர்த் | | உரு (கன்னடம்) | நாகம் |
| (d) த்ர் | | தீர் (தமிழ்) | தீர்த்தல் |

| | | | |
|---|---|---|---|
| (d) த்ர்த் | க்ள் | சேல், தேள் (கன்னடம்),தெலுங்கு, தமிழ்) | |
| ஷ்ர் | | கீர் (கன்னடம்), கீழ் | கீழே |
| ஹிர் | ஷிர் | கிறி (தெலுங்கு), சிறு (தமிழ்) | சிறிய |
| ஷிரஷ் | சூ | சார் (கோந்த்), ஆறு (தமிழ்) | ஆறு |

சில சமயங்களில் எகிப்திய ர் திராவிட மொழிகளில் தள்ளப்படுகின்றது.

| எகிப்து | திராவிட மொழிகள் |
|---|---|
| ப்ர்ய் | போ (தமிழ்) |
| ப்ர்த் | பூ |

சில சமயங்களில் திராவிட மொழிகளில் ர் பிராகுயியில் ஸ் ஆகவும், குயியில் ழ் ஆகவும் மாறுகிறது. பேச்சு வழக்கிலுள்ள திராவிட மொழிகளில் ஸ் அல்லது ச் இன்னும் பாதுகாக்கப்பட்டு வருகின்றது. ஆனால் எழுத்து வடிவிலுள்ள மொழிகளில் இவை மறைந்து விட்டன. எகிப்திய மொழியோடு ஒப்பிட்டுப் பார்க்கும் போது இவ்வொலிகள் குறைவதைக் காணலாம்.

| எகிப்து | திராவிட மொழிகள் | பொருள் |
|---|---|---|
| ச்ன்வ் | எனெ | இரண்டு |
| சிய் | யெ, எ | யார் |
| ச்ர்வ் | ஆறு | ஆறு |
| சிச்சி | எசெ (கன்னடம்) | பிரகாசி |

படவெழுத்தான h(ச்) திராவிட மொழிகளில் க் ஆகப் பின் வரும் சொற்களில் வருகிறது.

| எகிப்து | திராவிட மொழிகள் | பொருள் |
|---|---|---|
| hச | கொப்புள் (தமிழ்) | தொப்புள் |
| hசன | குர (கன்னடம்) | குழந்தை |
| hச | கேரி (கன்னடம்) | வழி |
| hச | கீர் (கன்னடம்) | கீழ் |

எகிப்திய மொழியில் இப்படவெழுத்து ஷ் அல்லது க் போன்ற எழுத்தையும் கொடுக்கிறது. சில சமயங்களில் எகிப்திய ஷ் திராவிட ஸ் -க்குச் சமமாகிறது.

| எகிப்து | திராவிடமொழிகள் | பொருள் |
|---|---|---|
| ஷ்ர் | சிறு (கன்னடம்) | சிறு |

| | | |
|---|---|---|
| ஷ்ன்த் | செனு (தெலுங்கு) | நிலம் |
| ஷ்வ்க் | ஜலு, த்சலு (தெலுங்கு) | ஓடை |

க்க, க, g க -வுக்குரிய படவெழுத்துகள் திராவிட மொழிகளில் க, g க -வுக்குச் சமமாகின்றன.

| எகிப்து | திராவிட மொழிகள் | பொருள் |
|---|---|---|
| க்ற் | க (கன்னடம், தமிழ்) | மனம், மனசு |
| க்ற்ப் | கப்பு (கன்னடம், தமிழ்) | மூடு(கூரை) |
| க்ன்ய் | கிரி (கன்னடம்) | அழை |
| | கே (தமிழ்) | அழை |
| ஸ்க்ற் | அகழ் (கன்னடம், தமிழ்) | அகழ்தல் |
| இக்ர் | ஏக்க (கன்னடம்) | சிறந்த, உயர்ந்த |
| க்ட்(d) கோப்து- கொட்) | குடி (கன்னடம்) | குடில், வீடு |
| க்க்ர்-(கோப்து-ஹகொ)குடில் | (தமிழ்) | குடில், வீடு |

க்ன் கோப்து-கெல்லெ-அகலி (தெலுங்கு)-கொழு-(தமிழ்)-கொழுப்பான பிரகுயி, கன்னட, தமிழ் ஈ.

ஸ (குயி, சி (பார்ஜி), தி (பிராகுயி), தமிழ் ஈ ஈதல், கொடுத்தல் போன்றவை எகிப்திய ர்த்ய், திய்- கோப்து தி போன்றவைகளை விளக்குகின்றன.

ஈமி-(கொடு), கோப்து மொய், தமிழ் மொய், கன்னட முய் பரிசளித்தல் என்ற பொருளைத் தருகின்றன.

எகிப்து மொழியில் தமிழ்ச் சொற்கள் எப்படி கலந்தன என்பது பற்றிச் சற்று ஆராய்வோம்.

கி.மு. 6000 ஆண்டுகளுக்கு முன்பிருந்தே திராவிட அல்லது மூலத்திராவிட இனங்கள் எகிப்து மக்களுடன் கலந்தன என்பதைப் புதைபொருள், இலக்கிய, புராண, மொழியியல் ஆராய்ச்சிகள் மூலம் கிடைத்த சான்றுகளும், ஆதாரங்களும் கூறுகின்றன. Comparison of Badarian and primitive Indian races என்ற நூலில் பிரெந்தர் ஸ்தொயெசிகர் என்பவர் 1927 இலேயே எகிப்தில் கிடைத்த மண்டை ஓட்டு ஆராய்ச்சி மூலம், அவை தமிழர்கள் மண்டையோடுகள் என்பதைச் சுட்டிக் காட்டியிருக்கிறார். பழங்காலத்திலேயே தமிழ் இடையர்கள் மூலம் எகிப்து மொழியில் ஆடு, மாடுகள் சம்பந்தப்பட்ட சொற்கள் பல புகுந்து விட்டன. மொழியியல் மற்றும் மானிடவியல் மூலம் தமிழர்கள் மற்றும் எத்தியோப்பியர்கள் எகிப்திய இனத்தில் மிகப் பழங்காலத்தி லிருந்தே கலந்து விட்டனர்என்று தெரிய வருகிறது.

மிகப்பழைய நாகரிகத்தைச் சேர்ந்த ஜெர்செயர் என்ற இனத்தினரும் நைல் நதி மேல் பகுதியில் வந்து குடியேறினர். அவர்கள் மட்பாண்டங்களிலும், கப்பல்களிலும் ஆசியச் சின்னங்கள் உள்ளன. ஒத்ரான் என்பவர் (Autran) அந்த ஜெர்சியர்கள் தமிழர் அல்லது மூலத் தமிழர்களிலிருந்து வந்தவர்கள் என்று கூறுகிறார். காரணம் அந்த மட்பாண்டங்கள், கப்பல்கள், அதன் கொடிகள் ஆப்பிரிக்காவில் எந்த நாட்டிலும் காணப்படாதவை. அவை இந்தியத் திராவிடரோடு தொடர்புள்ளவையாக உள்ளன என்று கூறுகிறார்.

பின் வரும் குறிப்புகளும் இந்தியத் திராவிடர்கள் எகிப்தில் குடியேறியதை உறுதிப்படுத்துகின்றன.

ஆங்கிலக் கீழ்த்திசை மொழி அறிஞர், Edward Pokoke *(1604-1691)* India in Greece என்ற நூலில் - Indus ஆற்றின் கழிமுகத்தில் இருந்த கடலோடிகள் மக்ரான் கரையோரமாகச் சென்று பெர்சிய வளைகுடாவைக் கடந்து Oman, Hadramont, Yeman கரை வழியாக வந்து எகிப்து, நூபியா, அபிசினியாவைக் கண்டனர். இந்த மக்கள் நாகரிகத்தை Hellas மற்றும் அதன் தீவுகளுக்குப் பரப்பிய அதே மக்களைச் சேர்ந்தவர் என்கிறார்.

Philostratus என்ற அறிஞர் எத்தியோப்பியர்கள் இந்திய மூலத்தை உடையவர்கள் என்றும், அவர்கள் தங்கள் அரசனைக் கொன்ற தீட்டின் காரணமாகத் தங்கள் நாட்டை விட்டுக் கிளம்பியவர்கள் என்கிறார்.

Eusebius என்ற கிரேக்க எழுத்தாளர், 18-வது வமிச எகிப்திய அரசன் Amenophis III காலத்தில் சிந்து வெளியிலிருந்து சென்ற எத்தியோப்பியர்கள் முதலில் எகிப்து அருகில் நைல்நதிப் பள்ளத்தாக்கில் வந்து குடியேறினார்கள் என்கிறார். இச்செய்தியை அவருக்கு முன் வாழ்ந்த வரலாற்றாசிரியர்கள் மூலம் அறிந்ததாகக் கூறுகிறார்.

எத்தியோப்பியா இந்துக்களின் காலனியாக ஆக்கப்பட்டது என்பது எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒன்று என்று Sir William Jones- Asiatic Researches (vol. I page *426)* என்ற பத்திரிகையில் கூறுகிறார்.

Adolf Erkman *(1854-1937)* Life in ancient Egypt and a hand book of egyptian religon என்ற நூல்களில் ஆசியாவிலுள்ள Punt (பாண்டிய நாடு) என்ற நாட்டிலிருந்து வந்தவர்களே எகிப்தின் உன்னத நாகரிகத்தை உருவாக்கியவர்கள் என்கிறார்.

Asiatic researchers (Vol. III. 1702)இல் வெளி வந்த கட்டுரை ஒன்றில் British Lt. colonel Wilford பல சான்றுகளைக் காட்டிப் பழங்கால இந்தியர்கள் எகிப்தில் குடியேறி அதைத் தங்கள் குடியேற்ற நாடாக்கினர் என்கிறார்.

Heinrich Karl Brugsh-History of Egypt என்ற நூலில் இந்தியாவிலிருந்து 8000 ஆண்டுகளுக்கு முன் எகிப்துக்குக் குடியேறிய மக்களே தங்கள் கலை, மற்றும் உன்னத நாகரிகத்தை அங்குப் பரப்பினர் என்று கூறுகிறார்.

Bengsch Bey என்னும் எகிப்து வரலாற்றாசிரியர், 8000 ஆண்டுகளுக்கு முன் இந்தியாவிலிருந்து குடியேறிய மக்களே தங்கள் கலைகளையும், உன்னத நாகரிகத்தையும் எகிப்துக்கு எடுத்துச் சென்றனர். அவர்கள் இந்தியாவிலிருந்து வரலாற்றுக் காலத்துக்கு முன் நைல் நதிக்கரையில் ஒரு தந்தை நாட்டைத் தேடிச்சென்றனர் என்று சொன்னதாக Henry Steel Olcot, Theosophist, (March, 1881-page 123) என்ற நூலில் குறிப்பிடுகிறார். மேலும் அவர் "எகிப்து ஆவணங்கள் எகிப்தியர்கள் இந்தியக் கடற்கரையில் உள்ள Punt என்ற புனித இடத்திலிருந்து வந்ததாகக் கூறுகின்றன. Dar-el-bahri என்ற இடத்தில், Hashtop என்ற அரசியின் கோயிலில் உள்ள ஏரோக்ளிப் எழுத்துக் கல்வெட்டு மூலம் Punt (பாண்டிய நாடு) என்பது இந்தியா என்று தெரிகிறது. அந்தச் சுவற்றில் உள்ள Punt நாட்டு அரசர்கள், தாவரங்கள், விலங்கினங்கள் பற்றிய குறிப்புகள் இந்தியாவைத்தான் குறிக்கின்றன. இதிலிருந்து எகிப்து நாகரிகம் பழங்கால இந்தியாவிலிருந்து தான் வந்தது என்று சந்தேகத்திற்கிடமின்றித் தெரிகிறது என்று கூறுகிறார். (Source: Theosophist March 1881 - page 123)

Louis Jacolliot (1837- 1890) என்னும் பிரஞ்சுக்காரர் La Bible dans I'Inde என்ற நூலில் எகிப்து இந்தியர்களால் உருவாக்கப் பட்டது என்பதை யாரும் மறுக்க முடியாது என்றும், இந்தியா எகிப்திலிருந்து எதையும் பெறவில்லை என்றும் கூறுகிறார்.

மேலும் அவர், எகிப்து இந்தியாவிலிருந்து தன் சமூக அமைப்பு மற்றும் சட்டங்களைப் பெற்றது. அதன் காரணமாக இந்தியச் சாதி முறை எகிப்திலும் பரவியது, என்கிறார்.

ஏரோதோத், பிளாட்டோ, சாலோன், பித்தகோரசு, பிலோஸ்த்ராத்துய் போன்றோர் எகிப்தின் மதம் இந்தியாவிலிருந்து வந்தது என்றனர்

நேய்பர், வலான்த்து, சாம்போலியன், வெடிங்கடன், எகிப்தின் மேற்பகுதிக்கும் கீழ்ப்பகுதிக்கும் அதிக வேறுபாடு இருப்பதாகவும், அங்குள்ள கட்டடங்கள் எகிப்தின் மதம் இந்தியாவிலிருந்து வந்தது என்று உறுதிப்படுத்துகின்றன என்றனர். அபிதோஸ், சாயீஸ், கோயில்களில் உள்ள வரலாற்று நிகழ்ச்சிகள் எகிப்திய மத முறை இந்திய முறையைத் தழுவியது என்று அபி மொஜெபஸ், சூலியஸ் ஆப்பிரிக்கானுய்ஸ், எஜிபியஸ் போன்றோர் குறிப்பிட்டிருக்கின்றனர்.

இந்தியாவின் மேற்குக் கரையைச் சேர்ந்த முசிறி, சோப்பரா போன்ற துறைமுகங்கள் எகிப்து நாட்டுடன் வாணிகத் தொடர்பு ஐந்தாம் வமிச பாரவன் காலத்திலிருந்து (கி.மு. 2458-2446) ஆரம்பித்துப் பதினோராவது வமிசத்து Mentuhotep III (2004-1992 B.C.) காலத்திலும், அதையடுத்து Hatshpsat இராணி காலம் வரை (கி.மு. 1458) கொண்டிருந்ததற்கான ஆதாரங்கள் உள்ளன. Liliane Hombergar என்ற பிரஞ்சு மொழியியல் அறிஞர், எகிப்தின் முதல் வமிசத்து மன்னன் சிந்துவெளிப் பகுதியிலிருந்து வந்தவன் என்கிறார்.

இந்தியாவிலிருந்து சென்ற திராவிடர்கள் எகிப்தின் கழிமுகப் பகுதியைச் சுமார் நூறு ஆண்டுகள் ஆண்டதாக (கி.மு. 1567 வரை) எகிப்து ஆவணங்கள் குறிப்பிடுகின்றன. எகிப்தியர்கள் அவர்களை அயல்நாட்டு அரசர்கள் (Hyksos) என்பர்.

## 3.3 நூபியன், கனூரி, திராவிட மொழிகள் ஒற்றுமைகள்

ஆப்பிரிக்க மொழிகளான நூபியன், கனூரி போன்ற மொழிகள் திராவிட மொழிகள் போல் ஒட்டுநிலை மொழிகள். இவை பின்னொட்டுகளைப் பயன்படுத்துகின்றன. இம் மொழிகளிலும் வினைச்சொற்களின் அமைப்பு திராவிட மொழிகளின் வினைகளின் அமைப்பைப் போன்று உள்ளது.

கனூரி, நூபியன் மொழியில் எதிர்மறைக்கு அ, ஆ போன்ற விகுதிகள் வினை வேருடன் சேர்க்கப்படுகின்றன. சில சமயங்களில் அவை இல்லை என்ற வினையையும் பயன்படுத்துகின்றன. திராவிட மொழிகளிலும் அ, ஆ, இல்லை போன்றவை எதிர்மறையைக் குறிக்கின்றன. திராவிட மொழிகளில் உள்ளது போல் நூபியன் மொழியிலும், தன்மைப் பன்மையில் நாம், நாங்கள் போன்ற இடப்பெயர்கள் உள்ளன.

திராவிட மொழிகளில் அர், இர் பன்மை விகுதிகள். நூபியன் மொழியில் ரி பன்மை விகுதி. கனூரியில் திராவிட மொழியில் உள்ளது போல் முன்னிலை ஒருமையில் நி

இடப்பெயர் உண்டு. திராவிட மொழிகளில் த், த, த் (d) இறந்த கால இடைநிலைகள். பேச்சு மொழிகளில் அந்த த், ச் ஆக மாறுகிறது. நூபியன் மொழியிலும் ச் (s) இறந்தகால இடைநிலையாக வருகிறது. (திராவிட ச் நூபியனில் (s) ஆகிறது).

**சில வேற்றுமை உருபுகளில் ஒற்றுமை**

| திராவிட மொழிகள் | நூபியன் |
|---|---|
| 4ஆம் வேற்றுமை கி, கு, கெ | வ, கி, (பழைய நூபியன்) |

கன்னட கெ(ge) -வும், பழைய நூபியன் கி (gi) -யும் ஒத்திருக்கின்றன.

திராவிட நான்காம் வேற்றுமை உருபான -ke. -ge. -ki. -gi. -ku நூபிய நான்காம், இரண்டாம் வேற்றுமை உருபான On-ka, nn-gi, kn-gi -க்குச் சமம்

5-ஆம் வேற்றுமை இன் (தமிழ்) ன், இன் தமிழ், நூபியன் இரண்டிலும் உடைமைக்கு ஒரே மாதிரியான முடிவுகள் காணப்படுகின்றன.

| | |
|---|---|
| தமிழ் | -n அல்லது -in |
| நைல் நூபியன் | n-, in |
| முச்தொபான் நூபியன் | n. nini |

| | | |
|---|---|---|
| 7ஆம் வேற்றுமை உள், இல், (தமிழ்) | | உள், ஒல் (கனூரி) |
| | லொ (தெலுங்கு) | லொ, ல (நூபியன்) |

**திராவிட நூபிய மூவிடப் பெயர்களுள் ஒற்றுமை**

| | தன்மை பன்மை | முன்னிலை பன்மை | படர்க்கை பன்மை |
|---|---|---|---|
| திராவிடம் | aan. na. | nam I, ni | tan, tam |
| நூபியன் | aani | ir, ur | tar ter |

திராவிட - நூபிய உம் -ku அல்லது -ko = சிறுமை, இம்மொழிகளில் சிறுமையைக் குறிக்க -ke அடிக்கடி உபயோகிக்கப்படும்.

எ.கா.

| | |
|---|---|
| Coptic | ke |
| Dravidian | kenne |
| Nubian | kina |

எண்ணுப் பெயர்கள்

| திராவிட மொழிகள் | நூபியன் |
|---|---|
| ஓர், ஒரு | வெர் |
| இர், இரு | ஒலெ |
| ஐ (ஐந்து) | இ-ஹ்றந்த் |
| எட்டு, எண்டு | எட்டி (eddi) |
| ஒன்பதில், ஒம்பது | வெட் (d). உவிட் (d) |
| பத்து | ஒர்த் (d) |

## சில பெயர்ச்சொற்கள்

| திராவிட மொழிகள் | நூபியன் |
|---|---|
| அன், என் (சொல்லுதல்) | அன், என் |
| ஆட், ஆடு | ஓட் (d) |
| அன்(அன்பு) | ஒன், அன் |
| அறை (அழை) | ஏறி |
| எட் (எடு) | எட் (d) |
| இல, எல்யக (எலி) | இரிஸ் |
| இனுமு (தெலுங்கு)-இரும்பு | நுமு (பம்பரா மொழி) |
| கம்மர (கருமான்) | கமர (வொலப்) |
| கொங்கிக (ஆயிகி)-கொக்கி | கொங்கொ (வொலப்) |
| குட்டி (தமிழ்), மலையாளம்) | குடி (வொலப்) மிருகங்களின் குட்டி |

| | | |
|---|---|---|
| அக்கா | அக்கா | keg |
| சொல் | அன, என் | onul |
| பெண் | asa | as |
| யானை | ஆனை | enugi anul |
| அவரை | avarri | ogod |
| அன்னை | ia | een |
| இரு | இர் | இன |
| உள்மை | olle | ale |
| பகல் | ulla | ul |
| மகன் | maga | ga |
| மலை | male | mule |
| மீன் | min | anissi |

| | | |
|---|---|---|
| தின் | தின் | ti, di |
| கல | கல | குலு |
| நாக்கு | na. nar | nad |
| காட்டு | kare | goar |

## 3.4 மாந்தே மொழியில் திராவிடச் சொற்கள்

மாந்தே மொழியிலும் திராவிட மொழிகளிலும் பெரும்பாலும் சாதாரண வேர்கள் மெய்- உயிர்- மெய் அடிப்படையில் இருக்கும். தெலுங்கு ஆரம்ப உயிர்களுடன் ய் அல்லது வ் சேர்த்து உச்சரிக்கும். இந்தோ-ஐரோப்பிய மொழிகளில் செமித்திக் மொழிகள் போல் அல்லாமல் சாதாரண வேர்கள் மாற்றம் அடைவதில்லை. வேரை அடுத்து வருபவைகளைக் கொண்டுதான் பெயர்ச்சொல்லுக்கும், வினைச்சொல்லுக்கும், குறிப்பாக ஏவல் ஒருமை வேறுபாட்டைக் காணமுடியும்.

எ.டு.

| | | |
|---|---|---|
| பம்பரா | அ-சிழி- ல | அவள் உட்கார்ந்திருக்கிறாள் |
| | நி- சிழி-ல | இந்த நாற்காலி |
| | சிழி | உட்கார் |
| தெலுங்கு | காண்- உ | பார் |
| | இ கண் -உ | இந்தக் கண் |

தெலுங்கு மாந்தே மொழிகளுக்குள் உள்ள ஒற்றுமைகள் சில கீழே கொடுக்கப்படுகின்றன.

தெலுங்கில் பன்மைக்கு லு என்ற விகுதி சேர்க்கப்படுகிறது. (தமிழில் கள்).

மத்திய மாந்தே மொழிகளில் லு, ரு, உ போன்ற விகுதிகள் சேர்க்கப்படுகின்றன.

எ.டு.

| | | | |
|---|---|---|---|
| தெலுங்கு | ஒருமை | மகடு | கணவன், மனிதன் |
| | பன்மை | மகளு | கணவர்கள், மனிதர்கள் |
| | ஒருமை | தெரே | திரை |
| | பன்மை | தெரெலு | திரைகள் |
| மலிங்கெ | மொகொ | | மனிதன், கணவன் |
| | | மொகொலு | மனிதர்கள், கணவர்கள் |
| | | ஃபுரு | வயல் |
| | | ஃபுரு-லு | வயல்கள் |

தெலுங்கில் பன்மைக்கு லு என்ற ஒரே விகுதிதான் உண்டு. பிற திராவிட மொழிகளில் உயர்திணைக்கு வேறு விகுதிகள் உண்டு. தெலுங்கிலும் மத்திய மாந்தேயிலும் விகுதி கிடையாது.

தெலுங்கில் ஒக அல்லது ஒக்க (வக, வக்க) அல்லது ஒன்-து (இலக்கிய நடையில்) அல்லது ஒன்தே பயன்படுத்தப்படுகிறது. பிற மாந்தே மொழிகளில் தொ என்பது ஒரு அல்லது தனித்த என்ற பொருளில் பயன்படுத்தப்படுகிறது.

பம்பரா

| | | | |
|---|---|---|---|
| ம் தொ | | ஒரு ஆள் (ஒருவர்) | |
| த்யெ கெலெ | | ஒரு மனிதன் (ஆள்) | |
| தொ ஓ தொ | | ஒவ்வொருவரும் | |
| மாந்தெ கெலெ | = | தெலுங்கு ஒகட்-உ | ஒரு (ஆண்பால்) |
| | | ஒகட்டெ | ஒரு (பெண்பால்) |
| | | ஒகடி அஃறிணை | ஒன்று-ஆண்பால், பெண்பால் |

இடப்பெயர் வினை வடிவங்களுக்குத் தெலுங்கு உயர்திணை ஆண்பால் ஒருமையில் வேறுபாடு காட்டுகிறது. உயர்திணைப் பெண்பால் மற்ற பெயர்ச்சொற்கள் போல் பாவிக்கப்படுகிறது. பன்மையில் அஃறிணை, உயர்திணையில் வேறுபாடுகள் காணப்படுகின்றன.

எ.கா.

| | | |
|---|---|---|
| ஒருமை | கொட்டு தன்ன-து | அவள் அடிக்கிறாள் |
| | கொட்டு துன்ன-தி | அவள், அது அடிக்கிறது |
| பன்மை | கொட்டு துன்னாரு | அவர்கள் அடிக்கின்றனர். (உயர்திணை) |
| | கொட்டுதன்ன வி | அவைகள் அடிக்கின்றன (அஃறிணை) |

மாந்தெயில் எழுவாய்க்கேற்ற விகுதி கிடையாது. தெலுங்கிலும் இறந்த காலத்தில் பால், இடம் காட்டும் விகுதிகள் படர்க்கையில் கிடையா.

எ.கா.

உண்டேனு (அவன், அவள், அது) அவர்கள் இருந்தார்கள். தெலுங்கில் முன்னிலையில் பால் காட்டும் விகுதிகள் இல்லை. படர்க்கையில்தான் பால் காட்டும் விகுதிகள் சில உள்ளன.

தெலுங்கு மாந்தேயில் தன்மை, முன்னிலை இடப்பெயர்களில் அதிக ஒற்றுமைகள் காணப்படுகின்றன.

தன்மை ஒருமை மலிங்கெ நெ, நி = தெலுங்கு ஏ

நேனு, நெ

முன்னிலை, ஒருமை மக இ = தெலுங்கு இ, நி

தன்மைப் பன்மை மலிங்கெ நெலு, நிலு = தெலுங்கு மேமு (மனமு)

முன்னிலைப் பன்மை மலிங்கெ இலு = தெலுங்கு இரு (ஈரு) - மீரு

ஒருமை இடப்பெயர்கள் பெரும்பாலான மாந்தெ மொழிகளில் ஒத்திருக்கின்றன. பன்மை இடப்பெயர்கள்தாம் வேறுபடுகின்றன. தெற்கத்திய குழுக்களில் தன்மைப் பன்மைக்கு முன் பயன்படுத்தப்படுகிறது.

பம்பராவில் அனு = நாம், நாங்கள்

ஆலு அலுரு, ஒ நீங்கள்

தெலுங்கில் உள்ள வேற்றுமை உருபுகள் மாந்தெ மொழிகளில் கிடையா.

மாந்தே மொழிகளில் உள்ள சுட்டுகள் தெலுங்கு இடப்பெயர் விகுதிகளில் காணப்படுகின்றன (அவைகளுக்குச் சமம் ஆகின்றன)

தெலுங்கு னெ, னி மாந்தே சுட்டுகளில் காணப்படுகின்றன. (ஏ-நான்) இ-நீ.

முன்னிலையில் பன்மை இடப்பெயர்களுக்கு ஒருமை இடப்பெயருடன் பன்மை விகுதி சேர்க்கப்படுகிறது. மாந்தேயிலும், தெலுங்கிலும் படர்க்கையில் சுட்டுகள் எழுவாய் இடப் பெயர்களாகப் பயன்படுத்தப்படுகின்றன.

தெலுங்கில் ஆ (சேய்மை)- இ (அண்மை) பெயர்ச் சொல்லுக்கு முன் வருகின்றன. தமிழிலும், பிற திராவிட மொழிகளிலும் உ ஆப்பிரிக்க ஒ, உ உடன் ஒத்திருக்கிறது. இந்த உ தெலுங்கில் இல்லை.

எ.கா.

| | |
|---|---|
| அ கதலு | அந்தக் கதை |
| அ கதாலு | அந்தக் கதைகள் |
| இ கத | இந்தக் கதை |
| இ கதாலு | இந்தக் கதைகள் |

மாந்தேயில் சுட்டு உரிச்சொற்கள் தெலுங்கில் உள்ளமை போல் பெயர்ச்சொல் முன் வருகிறது. இ, அ அல்லது இ, உ என்ற வேறுபாட்டை அ படர்க்கை ஒருமை எழுவாய் இடப்பெயராகப் பயன்படுத்தப்படும் போது காண முடிகிறது.

எ.கா.

| | |
|---|---|
| பம்பரா | நி, நின் |
| மக | ஒ, வொ |
| தியோலா | மி, மியொ |
| நந்திங்கொ | இன், ன்வொ |
| சுஸ்ஸுயி | ந, நொ, வை, நி, நு |
| மேந்தி | ஜி, ந |

அ எல்லா மாந்தெ மொழிகளிலும் காணப்படுகிறது. ஆனால் பம்பராவில் இலக்கியங்களில் இ, ஒ அல்லது வொ, அவன், இவன், அது, இது என்று மொழிபெயர்க்கும் போது, அ, இ, உ என்ற சுட்டுகள் தெலுங்கு தவிர வேறு ஒரு திராவிட மொழியிலிருந்து புகுத்தப்பட்டிருக்கலாம், குறிப்பாகத் தமிழிலிருந்து.

சில மாந்தே மொழிகளில் சுட்டெழுத்துக்களுக்கு முன் ன் என்ற முன்னொட்டு சேர்க்கப்படுகிறது. பழைய மொழிகளில் இம்முன்னொட்டு காணப்படவில்லை. தற்காலத் தெலுங்கிலும் இடப்பெயர்களின் முன் ன் என்ற முன்னொட்டுடன் இது ஒத்திருக்கிறது.

சில மாந்தே கிளை மொழிகளில் இடப்பெயர்களில் தெ-தன் சேர்க்கப்படுகின்றன. இவை தெலுங்கு தன்-உ (6 -ஆம் வேற்றுமை), தன் (தற்சுட்டு-தானே) அல்லது தமிழ்த் தன், தானே உடன் ஒத்திருக்கின்றன. எடுத்துக்காட்டாக, சுக மொழியில் ஸ்தன (நான்) என்பதில் ன் முன்னொட்டாக இயங்குகிறது. இ அல்லது இதன் (நீ) அ அல்லது அதன் (தமிழ் அவன், அது)....

மாந்திங்கொ மொழியில் ன், ன்தெ (நான்), இ, இதெ (நீ)...

சுசுவில் இதன் பகொரொமா என்றால் நீயே இறங்குவாய் (நீ தானே இறங்கு). தெலுங்கில் தானு ஒகட்டி தலஸ்தே (தானே முன் வருகிறான்)....

இப்பொழுது வினைகள் இடப்பெயர்களுக்கு ஏற்ப எப்படி மாறுகின்றன என்று பார்ப்போம்.

தமிழ், தெலுங்கு வினைகளுடன் காலங்காட்டும் உருபும் - இடப்பெயர்களுக்கு ஏற்ற விகுதியும் சேர்க்கப்படுகின்றன. மாந்தெ மொழியில் க என்ற இடைச்சொல் தமிழ், தெலுங்கு க (infinitive) உடன் ஒத்திருக்கிறது. இது பல பொருள்களில் பயன்படுத்தப் படுகிறது (infinitiveஐக் குறிக்கிறது).

**தமிழ்** ஆக (ஆகுதல்)

**தெலுங்கு** அக் வ உட (ஆகுதல்) ஆயின, ஆயி போன்ற வடிவங்களில் க குறைகின்றன.

| | | |
|---|---|---|
| முதலில் | அ கன்யி | அவன் அழகாய் இருக்கிறான் |
| தெலுங்கில் | காவலேனு | தேவைப்படுகிறது |

இந்தக் க தமிழ், தெலுங்கில் வியங்கோளுக்குப் பயன்படுத்தப் படுகிறது.

எ.கா.

| | | |
|---|---|---|
| தமிழ் | | அவள் வாழ்க |
| மாந்தே | ஆ-க-ன | அவள் வரட்டும் |

தெலுங்கில் -து என்ற பின்னொட்டு நிகழ்கால வினை எச்சமாகப் பயன்படுத்தப்படுகிறது. மாந்தே குழுவில் -தொ இதே தொழிலைச் செய்கிறது.

எ.கா.

| | | |
|---|---|---|
| தெலுங்கு | சேஸ்து | செய்து |
| மாந்தே | தெகெ | கட்டு |
| தெகெதொ | | கட்டி |
| பம்பரா | க்வந்த்தோ | சுடச் செய் (infinitive) -ஐக் குறிக்கிறது. |

திராவிட மொழிகளில் கெ :கெ க இரு செய் போன்றவை முதல் வினைகளாகப் பயன்படுத்தப்படுகின்றன.

எ.கா:

| | |
|---|---|
| ஒல (ஆள்)- | ஒல-கா (Domination) ஆதிக்கம். |
| ஒசெ | மகிழ்ச்சியாய் இருத்தல் |
| ஒசெ-கெ | மகிழ்ச்சி |
| நம்மு | நம்பு |
| நம்முக | நம்பிக்கை |

திராவிட -கெ மாந்தே வினையான செய் -யுக்குச் சமம். இது பெரும்பாலும் -ல என்ற பின்னொட்டுடன் வரும்.

எ.கா.

| | | |
|---|---|---|
| மாந்தே | செனே | பயிர்த்தொழில் |
| | செனெ-லி கெ-ல | பயிரிடுபவன் |
| | தொகி | சமை |
| | தொபிலி கெ ல | சமையற்காரன் |

மேலும் தெலுங்கில் கானி இல்லை. மாந்தெ கான -வுக்குச் சமம். இது கூடாது என்ற பொருளிலும் பயன்படுத்தப்படுகிறது.

தமிழில் வினை எச்ச விகுதி -து :து அல்லது -இ. தெலுங்கில் -இயும் -தி யும் உண்டு. திராவிட மொழிகளில் -து அல்லது -தி பின்னொட்டு. மாந்தே -தி அல்லது -திக்குச் சமம். இவை எதிர்மறை வாக்கியங்களுக்குப் பயன்படும்.

எ.கா. மாந்தே

| | |
|---|---|
| அ-ய | அவன் இங்கே இருக்கிறான் |
| அ-தி-ய அவன் | இங்கு இல்லை |
| அ.பெ. தா | அவன் வந்து கொண்டிருக்கிறான் |
| அதெதா | அவன் வந்து கொண்டு இருக்க வில்லை |

போமான் (Baumann) என்னும் இன நூல் வல்லுனர் சூடான், மாலி, கானா போன்ற அரசுகள் தெலுங்கர், கன்னடியர்களால் உருவாக்கப்பட்டவை என்கிறார். அதனால்தான் மாந்தே மொழியில் தெலுங்குச் சொற்களும் பான்த்து மொழியில் கன்னடச் சொற்களும் கலந்தாகக் குறிப்பிடுகிறார்.

Lake Victoria விலிருந்து Monbaza Melude துறைமுகங்கள் வரை கிறித்து சகாப்த ஆரம்பத்தில் ஒரு பெரிய பிரதேசத்தில் கன்னட மொழி பேசப்பட்டதாகவும், அந்த இராச்சியம் கன்னடியாகளால் தோற்று விக்கப்பட்டது என்றும் ஆய்வாளர்கள் கூறுகின்றனர்.

## 3.5 திராவிட -சொமாலி மொழி ஒற்றுமைகள்

திராவிட, சொமாலி ,மொழிகளுக்குள் இலக்கணக் கூறுகளில் பின்வரும் ஒற்றுமைகள் காணப்படுகின்றன.

திராவிட மொழிகளில் பன்மைக்கு -லு பின்னொட்டாகச் சேர்க்கப்படுகிறது. சொமாலியில் பன்மைக்கு -யொ சொற்களின் பின்னால் சேர்க்கப்படுகின்றன.

எ.கா.

| திராவிடம் | சொமாலி |
|---|---|
| பையன், மகன் | இனன்-க |
| மகன்கள் | இனம்-யொ |
| பெயர் | ம:க |
| பெயர்கள் | ம:கயொ |

திராவிட மொழிகளில் கெ : கெ -க போன்ற பின்னொட்டுகள் இரு என்ற வினைச்சொல்லாகப் பயன்படுத்தப்படுகின்றன. அவை பண்புப் பெயர்களுடன் பயன்படுத்தப்படுகின்றன.

எ.கா:

| | |
|---|---|
| ஒசெ | மகிழ்ச்சியாய் இரு |
| ஒசகெ | மகிழ்ச்சி |

இது சொமாலி பின்னொட்டான -கர (முடியும்) -வுக்குச் சமமாகிறது. ஆனால் இது வினை எச்சத்துடன் சேர்க்கப்படுகிறது.

எ.கா.

வாம் சமெயன் கருயெய்

நான் அதைச் செய்ய முடியும்

குறிப்பாகத் தெலுங்கில் என்னால் செய்ய முடியும்

பல திராவிட மொழிகளில் இறந்த காலம் -இ -ய -தி போன்ற பின்னொட்டுகளால் உருவாக்கப்படுகின்றது. திராவிட -ய பின்னொட்டு, சொமாலி இறந்த கால இடைச்சொல்லான -யெக்குச் சமம். சொமாலியில் -நய்ய, நிகழ்கால- கொண்டிருக்கிற என்பதற்குச் சமம்.

எ.கா.

| | |
|---|---|
| Sameey | செய் waan நான் |
| waan sameey | நான் செய்து கொண்டிருக்கிறேன் |
| waan samay yey | நான் செய்தேன் |
| அல்லது | |
| waan geeyyey | நான் எடுத்துக் கொண்டு வந்தேன் |

-yey யைப் பயன்படுத்தும் முறை தெலுங்கு -ஐ -ya வுடன் ஒத்துப் போகிறது.

சொமாலி -ii, இறந்த காலச் சார்புச் சொல்லை உருவாக்கப் பயன்படுகிறது.

எ.கா.

ninka faraska buu dilayya

மனிதன் குதிரையை அடித்துக் கொண்டிருக்கிறான்

ninki baa faraskii dilay

மனிதன் குதிரையை அடித்தான்

மேலே காட்டப்பட்ட எ.காட்டில் -ii எழுவாய்க்கும் ninkii (மனிதன்) செயப்படுபொருளுக்கும் faraskii (குதிரை) சேர்க்கப்படுகிறது. இந்த -ii சேர்க்கும் முறை திராவிட -ஐ யோடு ஒத்துப் போகிறது.

சொமாலியில் தொடர் நிகழ்காலத்துக்கு -ayya பயன்படுகிறது.

எ.கா.

waan furayya

நான் திறந்து கொண்டிருக்கிறேன்

நிகழ்காலப் பன்மை ஏவல் -a

எ.கா. fur திறத்தல்

fura திற

வினைச்சொல் இறந்த காலத்தில் இருந்தாலும் சொமாலி -a ஒரு பெயர்ச்சொல்லுடன் நிகழ்காலத்தைக் குறிக்கப் பயன்படுகிறது.

kitaab புத்தகம்

safari பயணம்

kitaabkanu safarkaygii buu

இந்தப் புத்தகம் நான் செய்த பயணத்தை விவரிக்கிறது.

இந்தச் சொமாலி -a, -ayya உபயோகம் தமிழ் நிகழ்கால விகுதியான ஆல், ஆன், ஒடு ஒத்துப் போகிறது. சொமாலி, திராவிட மொழிகளில் செயல் செய்பவன் பின் i-ii சேர்க்கப்படும்.

### திராவிட-சொமாலி இனச் சொற்கள்

| | | |
|---|---|---|
| தங்கு | dagha | deg |
| பெண் | mag-wa | naog-ta |
| தீ | ta-gula | dab-ka |

| | | |
|---|---|---|
| உடன் | -nnu | na |
| இர | இர | bari |
| மரம் | செத்து | :கெட் (ged) |
| இழ | இல | ballee |
| துன்பம் | அல்லல் | இல்மொ |
| நக்கு | nag-il | nug |
| பசி | gasi | kasi, gadzo |
| அல்குல் | அல்கு | அலோல் |
| இளமை | அல் | இல் |
| காது | காது | degg-ta |
| கன்னம் | கதுப்பல் | கதப்பு (laab-tab) |
| தாடை | gandu kanda | g-no |
| கழுத்து | குரல் | ganta lu-hunguru gaha |
| நெஞ்சு | karalu | kard wadu-ka |
| வயிறு | basaru, vayiru | alool (sha) |
| தாய், ஆய் | ma;ah | hooyo-do |
| அப்பா | அப்பா, அப்பன் | -aabbe-ha |
| சிந்து | siin- | hindis |
| ஊர் | uur | tuulo-da |
| விளை | bele | bey beer |
| உண் | un | |
| பரி | பரி | faras-ka |

### 3.6. திராவிட, செனேகால் மொழிகளுக்குள் ஒற்றுமை

செனேகால் நாட்டு மொழியியல் அறிஞரான இந்தியாய் சுமார் 500 செனேகால் மொழிச் சொற்கள் திராவிட மொழிகளோடு ஒத்திருப்பதாகக் கூறுகிறார்.

திராவிட- செனேகால் மொழிகளுக்குள் உள்ள ஒற்றுமைகளை ஷேக், இந்தியாய் 1972லும், உ.பி. உபாத்யாயா 1976லும் எடுத்துக்காட்டினர். அவைகளுள் சில:

ஃபுலானி இறந்த காலப் பெயரெச்ச விகுதியான -ஒ, -ஒவோ -திராவிட -அ, -அய -வுடன் ஒத்திருக்கிறது.

எ.கா.

| | |
|---|---|
| ஃபுலானி விந்துதோ | எழுதிய |
| விந்தோவோ | எழுதியவன் |

வொலப் -ஆய், தியாலா -அய் பண்புப் பெயர் ஒட்டு, திராவிட -அய்க்குச் சமம்.

வொலப்-பாக் (நல்ல), ஒலப் பாக்காய் (நன்மை)

திராவிட அப்லா (நண்பன்) ஒலப் பப்லாய் (நட்பு)-க்குச் சமம்

திராவிட hiri (பெரிய) ஒலப் hirine (பெருமை) -க்குச் சமம்

ஒலப் பண்புப் பெயர் பின்னொட்டுடனும் ஒற்றுமை காணப்படுகிறது.

ஒலப் - -it, itt திராவிட

வொலப் டொக் (வெட்டு) டொகிகட் (கூர்மை)

திராவிட hari (வெட்டு) harita (கூர்மை)

திராவிட மொழிகளில் சொல் இரட்டிக்கும் முறை செனேகால் மொழிகளிலும் உண்டு.

| | | |
|---|---|---|
| தியோலா | fan | அதிகம் |
| fanfan | மிக அதிகம் | |
| திராவிட | வேகம் | விரைவு |
| வேகவேக | | மிக விரைவு |

**சில சொற்களில் ஒற்றுமை**

| பொருள் | செனேகால் | திராவிடம் |
|---|---|---|
| மயிர் | வொலப் கவர் | உரு |
| தலை | தியோலா புக்கோ- | குக் குக்க |
| கண் | தியோலா கில், கண் | கண் |
| வாய் | தியோலா புடம், பாயி | வாய் |
| உதடு | வொலப் துன் தொண்டு, துடி | தொண்டு, துடி |
| இதயம் | வொலப் க்கொல், கொர் | கரலு |
| நாய்க்குட்டி | வொலப் குடி | குட்டி |
| வெண்கலம் | வொலப் கஞ்சர் | கஞ்சரா |
| தோல் | வொலப் தோல் | தோல் |
| தாய் | வொலப் யாய் | ஆயி |
| நெய் | வெலப் ஒனியு | நெய் |

## 3.7 நீக்ரோ ஆப்பிரிக்கரும் திராவிட இந்தியாவும்

போமான், வெய்டெர்மான் போன்ற அறிஞர்கள் மேற்கு ஆப்பிரிக்காவிலிருந்து அபிசினியா வரை பரவி இருக்கும் நவீனச் சூடான் பண்பாடு, கிழக்கத்திய பண்பாட்டால் உருவாகியது என்று கூறுகின்றனர். அவ்விருவரும் 'அந்நாடுகளில் நிலத்திற்கு எருவிடுதல், வீடுகட்டும் முறை, விவசாயக் கால்வாய்கள் போன்ற பல துறைகளில் திராவிடப் பண்பாடு காணப்படுகிறது. இவ்வொற்றுமைகள் திராவிடர்கள் தென்னிந்தியாவிலிருந்து எத்தியோப்பியா வழியாக அந்நாகரிகத்தை அவர்கள் சென்றவிடமெல்லாம் பரப்பினர் என்று அறிவிக்கின்றன' என்பர்.

கற்கால முடிவிலிருந்து உலோகக் கால ஆரம்பம் வரை திராவிடர்களுக்கும், ஆப்பிரிக்கக் கரைப்பகுதி மக்களுக்கும் போக்கு வரத்துத் தொடர்பு சர்வ சாதாரணமாய் இருந்தது. திராவிடர்கள், குறிப்பாக மேற்குக் கரைத் திராவிடர்கள் கடல் வாணிபத்தில் சிறந்தவர்களாயிருந்தனர். தற்காலக் கேரளாவைச் சேர்ந்த முக்குவர்கள், முத்துக் குளிப்பதிலும், கட்டு மரங்கள் செய்வதிலும், கடற்பயணங்களை மேற்கொள்ளுவதிலும் திறமைசாலிகள். முக்குவர்கள், தியாஸ், நாயர்கள் மிகப் பழங்காலத்திலிருந்தே ஆப்பிரிக்கா மற்றும் மத்தியதரைக் கடலோரப் பகுதி வரை சென்று இந்தியாவின் பெயரை நிலைநாட்டியவர்கள். அவர்கள்தாம் பெருங்கற்கால நாகரிகத்தை அந்தப் பகுதிகளில் புகுத்தியவர்கள். Jean Poujade என்ற பிரஞ்சுக்காரர் La route des Indes aboutit-elle en A.O.F. என்ற நூலில் இந்தியாவைச் சுற்றியுள்ள நாடுகளில் கப்பல் கட்டும் தொழிலில் சிறந்தவராயிருந்தவர் திராவிடரே என்றும் அவர்கள் மூலமாகத்தான் அத்தொழில் ஆப்பிரிக்கக் கடலோரப் பகுதியிலிருந்து, மேற்காப்பிரிக்காவைச் சேர்ந்த செனேகால் நாடுகள் வரை பரவியதாகக் கூறுகிறார்.

ஆப்பிரிக்காவுக்கும், இந்தியாவுக்கும் இடையில் இருந்த வியாபாரத் தொடர்பு பற்றி, கி.மு. 60இல் எழுதப்பட்ட பெரிபுளுசு என்பவரின் கடல் யாத்திரையில் காணப்படுகிறது. அந்நூலில் கட்சு, கத்தியவார், குஜராத் பகுதியிலிருந்து கப்பல்கள் ஆப்பிரிக்கக் கிழக்குக் கரைக்கு அரிசி, நெய், சர்க்கரை, துணி போன்ற பொருள்களைக் கொண்டு வந்து வியாபாரம் செய்தன என்று கூறுகிறது. தென்னிந்தியர் ஆப்பிரிக்காவுடன் வாணிகத் தொடர்புகள் கிறித்து பிறப்பிற்கு முன்பே வைத்திருந்தனர் என்று தெரிய வருகிறது. இத்தொடர்புகளாலேயும் ஆப்பிரிக்க மொழிகளில் தமிழ் மொழியின் இலக்கணக் கூறுகளும், சொற்களும் கலந்தன.

## ஆ. திராவிட மொழிகளும், ஊரால்-ஆல்த்தயிக் மொழிகளும்

திராவிட மொழிச்சொற்கள், ஊரால்-ஆல்த்தயிக் மொழிச் சொற்களுடன் நெருங்கிய தொடர்புடையதாக உள்ளன. இவ்விரு மொழிக்குடும்ப இலக்கண வடிவங்களும் ஒத்திருக்கின்றன. இவ்வொற்றுமைகளை 19ஆம் நூற்றாண்டிலேயே ரஸ்மஸ் என்ற தென்மார்க் நாட்டு அறிஞர் எடுத்துக் காட்டியிருக்கிறார். அவர் அம்மொழிகளைச் சீத்தியக் குடும்ப மொழிகள் என்று வகைப்படுத்தி இருக்கிறார். சீத்தியக் குடும்ப மொழிகளில் பின்னிசு, துருக்கி, மங்கோலியன், துங்குசியன் போன்ற குழுக்கள் குறிப்பிடத்தக்கவை. 1856இல் கால்டுவெல்லும் அம்மொழிகளைச் சீத்தியக் குடும்பத்துடன் இணைத்தார். அவரும் திராவிட மொழிகள் உக்ரோ-பின்னிஷ் மொழிகளுடன் தொடர்புடையவை என்றார். மாக்சுமுல்லர் (Max Mullar), ஹன்பல்வி (Hunfulvi) போன்றவர்கள் அம்மொழிகளைத் துரேனியக் குடும்ப மொழிகள் என்று வகைப்படுத்தினர். இம்மொழிகள் பெரும்பாலும் நாடோடி மக்களால் பேசப்பட்டு வந்ததால் அவைகளுக்கு எழுத்து வடிவங்களும், இலக்கியங்களும் இல்லை. அதனால் அம்மொழிகள் நாளடைவில் பல பிரிவுகளாகப் பிரிந்து சிதைந்த மொழிகளாகி விட்டன. அவைகளுக்குள் நிலையான இலக்கண விதிகளைக் காணமுடியவில்லை. சமோதிக், நொமாது, தர்த்தாரிக், உஸ்பெக், நொக்காயிஸ், உத்தொனியஸ் போன்ற மொழிகள் துரேனியக் குடும்ப மொழிகளைச் சேர்ந்தவையே. அவைகள் இந்தோ-ஐரோப்பிய மற்றும் செமித்திக் மொழிகளின் குடும்பத்தைச் சேராதவை. ஆனால் அவை திராவிட மொழிகளோடு தொடர்புடையவை. அவைகளுக்கிடையே உள்ள ஒற்றுமைகளை விரிவாகக் காண்போம்:

### சொற்கள் ஒற்றுமைகள்

- இம்மொழிகள் அனைத்தும் ஒரேமாதிரியான இலக்கண அமைப்பைக் கொண்டவை.
- இம்மொழிகளில் பெயர்ச்சொற்கள் மகத் (உயர்திணை), அகமத் (அக்றிணை) என்ற பாகுபாட்டைக் கொண்டவை.
- இம்மொழிகளில், படர்க்கை ஒருமையில்தான் ஆண்பால், பெண்பால், ஒன்றன் பால் என்ற பாகுபாடு உண்டு. பன்மையில் மரியாதைப் பன்மை, பலவின்பால் என்ற வகை உண்டு.

- அஃறிணைப் பெயர்களில் பன்மை வடிவங்கள் அதிகம் இல்லை. ஒருமை வடிவங்கள் பெரும்பாலும் பன்மையைக் குறிக்கின்றன.
- இம்மொழிகளில் வேற்றுமை உருபுகள் மிகவும் குறைவு. அவ்விகுதிகள் பன்மை விகுதிக்குப் பின் இணைக்கப்படுகின்றன. பெயர்ச்சொற்கள் வேற்றுமை உருபுகளை ஏற்காமல் தனித்த இடைச்சொற்களால் முடிகின்றன.
- கீழ்த்திசை துருக்கிய மொழி, பெகஸ்துன், பின்னிசு மொழிகளில் கு, கி நான்காம் வேற்றுமை உருபு.
- பெயர் உரிச்சொற்கள் வேற்றுமை உருபுகளை ஏற்பதில்லை. அவைகள் அவைகளுக்குப் பின் வரும் சொற்களின் பாலுக்கு ஏற்றபடி மாறுவதில்லை.
- வினைச் சொற்கள், பெயர்களாகவோ அல்லது வினையெச்சங்களாகவோ இருக்கும். அவை வினைச் சொற்களுக்கு முன் வரும்.
- இம்மொழிகளில் பிறவினை என்ற வகை கிடையாது. அதற்குப் பதிலாகப் படு என்ற துணைவினை அந்நப் பொருளைத் தருவதற்காகப் பயன்படுத்தப்படுகிறது.
- இம்மொழிகளில் எதிர்மறைக்குத் தனி விகுதிகள் உண்டு.
- இம்மொழிகளில் வாக்கியம் வினையால் முடியும்.
- இம்மொழிகள் இணைப்புப் பெயரடை (relative pronouns), பெயர் உரிச்சொல்லுக்குப் பதிலாகப் பெயரெச்சங்களைப் (relative participles) பயன்படுத்துகின்றன.
- இடைச் சொற்களுக்குப் பதிலாகச் சில வகை participles களைப் பயன்படுத்துகின்றன.
- இம்மொழிகளில் வளை நாவொலிகள் உண்டு.
- பல சீத்தியக் குடும்ப மொழிகளில் தன்மைப் பன்மையில் நாம், நாங்கள் என்ற பாகுபாடு உண்டு.
- அடிப்படை உச்சரிப்புகளில் ஒற்றுமை இருக்கின்றது என்பதை மென்ஜஸ் என்பவர் (Menges) 1964இல் கூறியிருக்கிறார்.
- சொல்லமைப்பிலும் (Morphology) நிறைய ஒற்றுமைகள் உள்ளன. இவ்விரு குடும்பங்களும் ஒட்டுநிலை

மொழிகளாகும். பெயர், வினைச்சொற்களில் பின்னொட்டுகள் வரும் முறையும் ஒரே மாதிரியாக உள்ளது. இவ்விரு மொழிகளிலும், சொற்கள் பெயர்ச்சொற்கள், வினைச்சொற்கள் என்ற இரண்டு பெரும் பிரிவுகளைக் கொண்டவை. வினைச் சொல் பெயர்ச்சொல்லின் பண்புகளைப் பெற்றிருக்கிறது. வினைவேர்களுடன், இடப்பெயர் விகுதிகள் இணைக்கப்படுகின்றன. ஏவல், வினைவேர்கள் போலிருக்கின்றன. சுருங்கக் கூறின் திராவிட வினைச்சொல், ஊரால், ஆல்த்தயிக் வினைச் சொற்களுடன் எல்லா வகையிலும் ஒத்திருக்கிறது.

இருமொழிகளிலும் வாக்கிய அமைப்புக்கள் ஒத்திருக்கின்றன: இரு மொழிகளிலும் எழுவாய், பயனிலை, வினைச்சொல் என்ற வரிசையில் வாக்கியம் அமைக்கப்படுகிறது. பெயரடை, வினையடைகள் இருமொழிகளிலும் முறையே பெயர், வினைச்சொற்கள் முன் வருகின்றன. வாசக் (Vacek) என்பவர் 1978-1986இல் திராவிட மொழிகளை மங்கோலிய மொழியுடன் தொடர்புடையதாகக் காட்ட முயற்சித்தார்.

பர்ரோ (Burrow) என்பவர் திராவிட மொழிகளிலும், உராலிக் மொழிகளிலும் உள்ள உடல் உறுப்பு சம்பந்தப்பட்ட எழுபது சொற்களை ஆராய்ந்து அவைகளுக்குள் இன ஒற்றுமை உண்டு என்றார்.

திராவிட, ஊரால்-ஆல்த்தயிக் மொழிகளில் உள்ள பல நெருங்கிய ஒற்றுமைகள் எதிர்பாராமல் ஏற்பட்ட ஒற்றுமைகள் அல்ல. இம்மொழிகள் ஒரு காலத்தில் ஒரே மொழிக் குடும்பத்திலிருந்து தோன்றியிருக்க வேண்டுமென்றார் கமில் ஜுவெலெபில் (Kamil Zvelebil ) என்ற செக்கோசுலோவாக்கிய அறிஞர். காலின் மசிக்கா (Colin Masica) போன்றவர்கள் இம்மொழிகள், கிழக்கு ஐரோப்பாவிலிருந்து மத்திய தெற்கு ஆசியா வரை பரந்து விரிந்து கிடக்கும் ஒரே மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த மொழியிலிருந்து தோன்றியவை என்றும், அம்மொழியின் மேற்குப் பிரிவு திராவிட மொழியும் ஊரால்-ஆல்த்தயிக் மொழிகளும், கிழக்குப்பிரிவு கொரியா, ஜப்பான் மொழிகளும் ஆகும் என்றனர்.

புடா (Bouda), பர்ரோ (Burrow), மெஞ்செஸ் (Menges) போன்றோரும் ஊரால்-ஆல்த்தயிக்-திராவிட மொழிகளின் ஒற்றுமை, மொழிக்குடும்ப ஒற்றுமையால் ஏற்பட்டது என்றும்,

அவ்விரு மொழிக் குடும்பங்களும் மிகப் பழங்காலத்திலேயே ஒரே மொழியிலிருந்து தோன்றியிருக்க வேண்டும் என்றனர்.

## துருக்கி மொழியில் தமிழ்ச் சொற்கள்

துருக்கி மொழியும் தமிழ் மொழியும் பல விதங்களில் ஒத்து இருக்கின்றன. இவ்விரு மொழிகளிலும் இடப்பெயர்களில் பின்வரும் ஒற்றுமைகள் காணப்படுகின்றன.

| | துருக்கி | தமிழ் |
|---|---|---|
| முதல் வேற்றுமை | ben sen o | நான் நீ தான் |
| 2ஆம் வேற்றுமை | beni seni<br>onu | என்னை, உன்னை<br>அவனை |
| 4ஆம் வேற்றுமை | bana sana<br>ona | எனக்கு, உனக்கு<br>அவனுக்கு |
| 6ஆம் வேற்றுமை | benim<br>senim<br>onum | எனது<br>உனது<br>அவனுடையது |

உடைமை மாற்றுப் பெயர்களிலும் (possessive pronouns) ஒற்றுமை காணப்படுகிறது.

| | |
|---|---|
| -im/in | என் |
| -in/-in | உன் |
| -un | தன் |

வினாப்பெயர்களின் உச்சரிப்பிலும் ஒற்றுமை காணப்படுகிறது.

| துருக்கி | தமிழ் |
|---|---|
| ne | என்னை |
| nereye | எங்கே |
| niye | ஏன் |

இவ் இருமொழிகளிலும் க-ச-த-ப இரட்டிக்கும் முறையிலும் ஒற்றுமை காணப்படுகிறது.

| | |
|---|---|
| எட்டி-பார்த்தான் | எட்டிப்பார்த்தான் |
| வீடு-கதவு | வீட்டுக்கதவு |
| மலை-பக்கம் | மலைப்பக்கம் |

இம்முறை துருக்கி மொழியிலும் உண்டு.

| | |
|---|---|
| மரம்-அடியில் | மரத்தடியில் |

தமிழில் ப-க-த போன்ற வல்லின எழுத்துக்கள் சொல் இடையில் வரும்போது மெல்லோசை பெறும். இம்முறை துருக்கி மொழியிலும் உண்டு.

| | |
|---|---|
| கள் | மரங்கள் |
| தலை | பதலை |
| பல் | ஒன்பது |

தமிழில் உயிர் எழுத்துக்களை நீட்டி உச்சரிக்கும் போது சொற்களின் பொருள் வேறுபடும். இம்முறை துருக்கி மொழியிலும் உண்டு.

**தமிழ்**

| | |
|---|---|
| அணி | ஆணி |
| ஒட்டு | ஓட்டு |

**துருக்கி**

| | |
|---|---|
| bākir | கைபடாத |
| bakir | செம்பு |
| od | தீ |
| ōd | பித்தம் |
| உஸ் | புத்திசாலித்தனம் |
| ஊஸ் | படைகள் தங்குமிடம் |

வேற்றுமை உருபுகளிலும் பின்வரும் ஒற்றுமைகளைக் காணலாம்.

| | | | |
|---|---|---|---|
| Ev | வீடு | ev-ler- | வீடுகள் |
| Evi | வீட்டை | evler-i | வீடுகளை |
| Ev-in | வீட்டின் | ev-ler-in | வீடுகளின் |
| Ev-e | வீட்டுக்கு | ev-ler-e | வீடுகளுக்கு |
| Ev-de | வீட்டில் | ev-ler-de | வீடுகளில் |
| Ev-den | வீட்டிலிருந்து | ev-ler-den | வீடுகளிலிருந்து |

சிந்துவெளி நாகரிகத்தின் ஆரம்பக் காலத்திலேயே திராவிடர்களுக்கும், தென் துருக்கிமேனியர்களுக்கும் இடையே தொடர்பு இருந்தமையால் இவ்வித ஒற்றுமைகள் ஏற்பட்டிருக்கலாம் என்று அறிஞர் நம்புகின்றனர்.

## இ - திராவிட மொழிகள், பின்னோ அக்ரேரியன் மொழிகள் ஒற்றுமைகள்

- இம்மொழிகளில் ஆறாம் வேற்றுமை உருபுகள் ந, நின, அல்லது இன்ன. திராவிட மொழிகளில் ந, அ, கன்னட, கோண்டி, பிராகுயி, தெலுங்கில் நி, அ போல் உள்ளன. இன்ன என்பதிலும் இன், ன என்ற இரு உருபுகள் உள்ளன.
- நான்காம் வேற்றுமை உருபுகளான இக்க, இக்கி போன்றவை திராவிட கு, கி, கத் போன்றவைகளுடன் ஒத்திருக்கின்றன.
- முன்னிலை ஒருமையான நி, திராவிட நி யுடன் ஒத்திருக்கிறது.
- கிர் என்ற எண்ணுப் பெயர் திராவிட ஓர் உடனும், தெலுங்கு ஒக உடனும் ஒத்திருக்கிறது.
- ஏவல் எதிர்மறை இடைநிலையான இன்னி, கொண்டி மின்னியுடன் தொடர்புள்ளதாக இருக்கிறது.

மேலே கூறப்பட்ட ஒற்றுமைகள் ஊரால்-ஆல்த்தயிக் மொழிகளிலும் காணப்படுகின்றன. இவைகளைக் கொண்டு கால்டுவெல் திராவிட மொழிகள் ஊரால்-ஆல்த்தயிக் மொழிக் குடும்பத்தைச் சேர்ந்தவை என்று கூறியிருக்கிறார். பின்னோ - அக்ரேரியன் மொழிகளுக்கும், திராவிட மொழிகளுக்கும் உள்ள பிற ஒற்றுமைகளாவன:

### சொல்லமைப்பில் உள்ள ஒற்றுமைகள்

திராவிட மொழிகளில் த் என்ற இடைநிலை அல்லது விகுதி, இறந்த காலத்தைக் குறிக்கும்.

பின்னோ-அக்ரேரியன் மொழிகளிலும் இறந்த காலத்தில் இந்த -த் காணப்படுகிறது.

எ.டு.

| | | |
|---|---|---|
| தமிழ் | செய்தேன் | த்-ஏன் |
| மலையாளம் | செய்து | த்-உ |
| கன்னடம் | கெய்தேன் | த்-ஏன் |
| தெலுங்கு | சேசிதினி | த்-இனி |
| கோண்டி | வந்தான் | த்-ஆன் |
| குயி | வத்தே | த்-ஏ |
| தோடா | அத்ச்சி | த்-ஏ |
| | கேர்த்தம் (நான் கேட்டேன்) | |

இது கன்னட கேள்டம், தமிழ் கேட்டோம் உடன் ஒத்திருக்கிறது. பின்னிசு மொழியில் இ இறந்த கால இடைநிலை.

எ.டு.

| | |
|---|---|
| ஓதின் | நான் எடுத்தேன் |
| ஓதித | நீ எடுத்தாய் |
| ஒத்தி | அவன் எடுத்தான் |

பிற பின்னோ அக்ரேரிய மொழிகளிலும் இ. இறந்த கால இடைநிலையாகப் பயன்படுத்தப்படுகிறது.

| | | |
|---|---|---|
| சாமி | மொலின் | நான் போனேன் |
| மொர்த்லியன் மணி-அம் | | |
| | நலி-அம் | நான்கொண்டு வந்தேன் |
| மரி | முனி | நான் போனேன் |
| கோமி | முனின் | நீ போனாய் |

எதிர்கால இடைநிலைகள்

பெரும்பாலான பின்னோ அக்ரேரிய மொழிகளில் க் எதிர்காலத்தைக் குறிக்கும் இடைநிலை. திராவிட மொழிகளிலும் க்க், க் (g), ப்ப, ப் (b) வ், உ எதிர்கால இடைநிலைகள்.

| | | |
|---|---|---|
| சாமி | இம்லெ-க் | நான் இல்லை |
| மொர்த் வினியன் | எஜின்ரம-க் | நான் வாங்க வில்லை |
| | ங்மினிஸ்கி | நான் போக வில்லை |
| கோமி | ஒக்முன் | நான் போக வில்லை |

பின்னிசு குடும்ப மொழிகளில்,

| | | |
|---|---|---|
| சாமி | குல்லப்ப | அவர்கள் கேட்கிறார்கள் |
| மரி | அக்னிஸ்கெப் | அவர்களுக்கு வேண்டாம் |

இம் மொழிகளில் ப், வ் போன்ற இடைநிலைகள் நிகழ்கால, எதிர்கால இடைநிலைகளாகப் பயன்படுத்தப்படுகின்றன.

பன்மை விகுதிகள்

பின்னோ - அக்ரேரிய மொழிகளில் க் பன்மை விகுதி,

| | ஒருமை | | பன்மை |
|---|---|---|---|
| அங்கேரியன் | குதிரை | லொ | லோவக் |
| | கை | கை | கைகள் |
| சாமி | அது | த | தக் |
| பின்னிசு | வீடு | முனு | முனுக் |

திராவிட மொழிகளிலும் க், கள், போன்றவை பன்மை விகுதிகள்.

எ.டு.

| | |
|---|---|
| நகம் | நகங்கள் |
| ஆண் | ஆண்கள் |
| குளம் | குளங்கள் |

மத்திய, வடக்கு திராவிட மொழிகளிலும் க் பன்மை விகுதிகள்,

எடுத்துக் காட்டுகள் :

| | ஒருமை | பன்மை |
|---|---|---|
| கோண்டி | கை (கை) | கையிக் (கைகள்) |
| குயி | காஜு (கை) | காஜுக் (கைகள்) |
| பிராகுயி | பு (புழு) | புக் (புழுக்கள்) |

## பெயர்ச் சொற்களில் ஒற்றுமை

| திராவிட மொழிகள் | பின்னிசு மொழிகள் |
|---|---|
| அக்கா (தமிழ், கன்னடம்) | உக்கோ (வயோதிகன்) |
| அத்தன் (தமிழ்) | அத்த (அப்பா) |
| அத்தை (அம்மா) | அதி (அம்மா) |
| அன்னை (அம்மா) | அன்ய (அம்மா) |
| அப்பன் (தமிழ், கன்னடம்) | அப்பி (அப்பா) |
| அம்மை (தமிழ், கன்னடம்) | எம (அம்மா) |
| அரு (தமிழ்)- அரிய | அல (தடை) |
| அலு (தமிழ், கன்னடம்) அவை | அல்லக் (அலை) |
| உள் (தமிழ், கன்னடம்) இரு, உள | ஒலென் (இருக்கிறேன்) |
| எறுது (எழுது) | கிர் (எழுது, கிறுக்கு) |
| கட்டு (தமிழ்) கன்னடம் - கட்டு | கெட் (கட்டு) |
| ஹடகு (கன்னடம்) - படகு | ஹல்த (படகு, கப்பல்) |
| கால் | ஜால் |
| கல் (கன்னடம்-தமிழ்)-கல் | கல்லியொ (கல்) |

இவை தவிர உடல், உறவு முறை, இடப்பெயர்கள் போன்றவற்றிலும் பல ஒற்றுமைகள் இருக்கின்றன என்று பர்ரோ என்பவர் எடுத்துக்காட்டியிருக்கிறார். இவ்வொற்றுமைகள் மிகப் பழங்காலத்திலிருந்தே இக்குழு மொழிகளில் காணப்படுவதாகத் தெரிகிறது.

## ஈ. திராவிட மொழிகளும் - சப்பானிய மொழியும்

பல மொழியியல் வல்லுனர்கள் சப்பான் மொழி ஆல்த்தயிக் மொழிக் குடும்பத்தைச் சேர்ந்தது என்று கூறுவர். சுசுமோ ஓனோ என்ற சப்பானிய மொழியியல் வல்லுனர் சப்பான் மொழி தமிழ் மொழியோடு நெருங்கிய தொடர்புடையதாகக் கூறுகிறார். அவருக்கு முன்னரே சுசுமு ஷிபா (1973-74), அகிரா புஜிவாரா (1971-80), மினோரு கோ (1979-1980) போன்றவர்கள் சப்பான் மொழி திராவிட மொழிகளுடன் ஒத்திருப்பதாகக் கூறியிருக்கின்றனர்.

சுசுமோ ஒனொ 1980இல் Sound correspondences between Tamil and Japanese / Loss of initial c - in Tamil and s' in Japanese (1983)-Intervocalic stops in the two languages (1980) போன்ற கட்டுரைகளை வெளியிட்டிருக்கிறார். இவர் சப்பான் மொழியின் வளர்ச்சியை 5 நிலைகளில் விளக்கிக் காட்டுகிறார்.

- முதல் நிலையில் தொல் சப்பான் மொழி திராவிட - ஆல்த்தயிக்-சப்பான் மொழிகளின் அடிப்படை ஒலிகளைக் கொண்டிருந்ததாகக் குறிப்பிடுகிறார்.
- அடுத்த நிலையில், திராவிட மொழிகளின் அடிப்படைச் சொற்களையும் முக்கிய இலக்கண அமைப்புக்களையும் கொண்டிருந்ததாகக் கூறுகிறார்.
- மூன்றாவது நிலையில் ஆல்த்தயிக் மொழிக்குடும்ப அமைப்பைப் பெற்று அம்மொழியின் எழுத்தையும் பண்பாட்டுச் சொற்களையும் கொண்டதாகக் குறிப்பிடுகிறார்.
- நான்காவது நிலையில் சீன மொழியின் கலைச்சொற்களைப் பெற்றதாகக் குறிப்பிடுகிறார்.
- கடைசி நிலையில் புதிய சப்பான் மொழி மேலே குறிப்பிட்ட மொழிகளின் கலப்பு மொழியாக மாறியதாகக் கூறுகிறார்.

அவர் 1980 லேயே சுமார் 350 சப்பான் சொற்களில் தமிழ் வேர்கள் இருப்பதாகக் கூறியிருக்கிறார். சப்பான்-தமிழ் மொழிகளின் சொல்லமைப்பில் ஐந்து விதமான இலக்கண ஒற்றுமைகள் இருப்பதாகச் சொல்கிறார்.

- பழைய சப்பான் மொழி தமிழ் மொழி போல் ஒட்டு நிலை மொழி.
- பழைய சப்பான் மொழி பெயர் உரிச்சொற்களைப் பெயர்ச் சொல்லுக்கு முன் பயன்படுத்துகிறது.
- பழைய சப்பான் மொழி வினையுரிச்சொற்களை, வினைச் சொற்களுக்கு முன் உபயோகிக்கிறது.

- சப்பான் மொழி பின்னொட்டுகள், இடைநிலைகள், துணை வினைகள் தமிழில் உள்ளது போல் இருக்கின்றன.
- சுட்டுப் பிரதிபெயர்ச்சொற்கள் தமிழில் உள்ளது போலத் தூரத்திற்கேற்றபடி இருக்கின்றன.
- சப்பான் மொழியிலும், தமிழ் மொழியிலும் காலம் முற்றுப்பெற்றது, முற்றுப்பெறாதது என்ற வகைகள் உண்டு.
- சப்பான் மொழியிலும் தமிழ் வினையெச்சம் போன்ற வடிவம் உண்டு.
- சப்பான் வினைகளின் முடிவு இடப்பெயர்களுக்கு ஏற்றபடி மாறுவதில்லை. (இது வேறுபாடு).

தொல் திராவிட மொழியிலும் வினைகள் இடப்பெயர்களுக்கு ஏற்றபடி மாறுவதில்லை. பழந்தமிழிலும் தொழிற்பெயர் அகம். 143 நோவோ யானே - அகம். 212 நோவல் யானே போன்ற அமைப்புகள் உள்ளன.

தமிழுக்கும் சப்பான் மொழிக்கும் பின் வரும் ஒற்றுமைகள் காணப்படுகின்றன.

**உயிரெழுத்துக்கள்**

| தமிழ் | சப்பான் |
|---|---|
| அ, ஆ | அ, ஒ |
| இ, ஈ | இ |
| உ, ஊ | உ, ஒ |
| எ, ஏ | இ |
| ஒ, ஓ | அ (ஒ) |

எ.டு.

| | | |
|---|---|---|
| அ | அ | பொருள் |
| அகல் | அகரு | பரவுதல் |
| ஆ | அ | |
| யாறு | யற | ஆறு |
| ஆ | ஒ | ஆண் எறுமை |
| கடவு | கொடொபி | ஆண் எறுமை |
| இ | இ | |
| இர | இரஃபு | கடன் வாங்கு |
| ஈ | இ | |
| நீங்கு | நிகு | அகலுதல் |

| | | |
|---|---|---|
| உ | உ | |
| உகு | உகு | shed |
| ஊ | உ | இடையில், உள்ளே |
| உது | உது | இடையில் |
| உ | ஓ | பெருத்தல் |
| உப்பு | ஒபு | பெருத்தல் |
| எ | இ | |
| செப்பு | இஃபு | சொல் |
| ஏ | இ | |
| ஏகு | இகு | செல், போ |
| ஓ | அ | |
| ஒப்பு | அஃபு | சம்மதி |
| ஓ | அ | |
| நோய் | நய | நோயுறு, அசதியாயிரு |
| ஓ | ஓ | |
| ஒற்று | ஒசு | பிழி |
| ஓ | ஓ | |
| போது | போதோ | சமயம் |

**வினை எச்சம் - (Conjunctive participle)**

தமிழ் வினை எச்சம், சப்பான் வினை எச்சங்களிலும் ஒற்றுமை காணப்படுகிறது.

| | |
|---|---|
| தமிழ் து, இ | ஜப்பான் - தெ, இ |
| செய்து | ஷி, தெ |
| தொட்டு | து-கெ (துக்-அ-இ) |

இவ் எடுத்துக்காட்டுகளில் சப்பான் தெ, தமிழ் து உடனும் - ஜப்பான் இ, தமிழ் இ உடனும் ஒத்திருக்கின்றன.

**- conditional இன்**

பழந்தமிழில் இன் நிபந்தனையைக் குறிக்க அதிகம் பயன்பட்டது. சப்பான் மொழியில் இன் - னின் தலைகீழ் வடிவமான னி (ன்-இ) நிபந்தனையைக் குறிக்கிறது.

| **தமிழ்** | **சப்பான்** | |
|---|---|---|
| செல்-இன் | - | |
| வர்-இன் | - | |
| பெய்-இன் | ஃபுரு-னி | மழை பெய்யின் |

- ஏவல் ஒருமை

தமிழ் ஏவல் ஒருமை ஆய், ஏசப்பான் ஏவல்-எ

செய்

செய்யாய் இக்-இ-அ யுக்கெ (போ)

செய்யாதே

- வேற்றுமை உருபுகளிலும் ஒற்றுமை காணப்படுகிறது.

**இரண்டாம் வேற்றுமை**

| | | |
|---|---|---|
| தமிழ்- ஐ | சப்பான் | வொ |
| பால்- ஐ | கனொஜொ-வொ (அவளை) | |

படம்-ஐ (படம் பார்த்தான்)

பழந்தமிழில் அம் 2ஆம் வேற்றுமை

இதிலிருந்து தோன்றியதாகச் சொல்லப்படுகிறது.

சப்பான் மொழியிலும் அம்- அவ்- அவ்-லொ ஆக மாறியதாகச் சொல்லப்படுகிறது.

**மூன்றாம் வேற்றுமை**

தமிழில் 3ஆம் வேற்றுமை உடனிகழ்ச்சி ஒடு, ஓடு, (சப்பான் மொழியில் தொ உடனிகழ்ச்சியைக் குறிக்கிறது)

| | | |
|---|---|---|
| தம்பியொடு | அனத தொ | உன்னோடு, உன்னுடன் |
| தம்பியோடு | கண்ணன்-தொ | கண்ணனோடு |

**ஆறாம் வேற்றுமை**

தமிழில் இன், அது ஆறாம் வேற்றுமை உருபு உடைமையைக் குறிக்கிறது.

சப்பான் மொழியில் -நொ உடைமையைக் குறிக்கிறது.

| தமிழ் | சப்பான் |
|---|---|
| ஊரின் பெயர் | - |
| மீனின் கண் | - |
| உனது புத்தகம் | அனத-னொ ஒன் |
| | யம துமி மலையினது |
| | குனிதுகமி ஊரினது கடவுள் |

தமிழ் இன், அது சப்பான் நொ, து உடன் ஒத்திருக்கிறது. பிற ஒற்றுமைகள்:

- சப்பான் சொ, தமிழ் தான் உடன் ஒத்திருக்கிறது.

| தமிழ் | ஜப்பான் |
|---|---|
| கண்ணன் தான் வந்தான் | கண்ணன் சொ கிடறு |
| தமிழ் த சப்பான் ஸ வுடன் | ஒத்திருக்கிறது |
| ஆ, அ | சப்பான் ஒ வுடன் ஒத்திருக்கிறது. |

2-சப்பான் க தமிழ்க் கொல்லுடன் ஒத்திருக்கிறது. இவை வினாவைக் குறிக்கும் சொற்கள்.

கண்ணன் கொல் இங்கு வந்தது — கண்ணன் க கொக்கொனிகிதறு

3- சப்பான் ய தமிழ் ஏ வுடன் ஒத்திருக்கிறது. இவை இரண்டும் வினாவைக் குறிக்கும் சொற்கள்

கண்ணனே இங்கு வந்தான் — கண்ணன் ய கொக்கொனி கிதறு

4- தமிழ் உம் சப்பான் மொ வுக்கும் ஒற்றுமை காணப்படுகிறது.

கண்ணனும் இங்கு வந்தான் — கண்ணன் மொ கொக்கொனி கிதறு

தமிழ் தான், கொல், ஏ, உம் முறையே சப்பான் கொ, க, ய, மொ, உடன் ஒத்திருப்பதாலும் இவ்விரு மொழிகளும் ஒரு பொது மொழியிலிருந்து தோன்றியிருக்கலாம் என்று அறிஞர் நினைக்கின்றனர். இவை தவிர, தமிழ், சப்பான் சுட்டு, வினாச் சொற்கள் உருவாக்கும் விதங்களிலும் ஒற்றுமை காணப்படுகிறது.

1. இரு மொழிகளிலும் பெயர்ச்சொல் வடிவங்களும் வேற்றுமை உருபுகளை ஏற்கும் வடிவங்களும் மாறுவதில்லை.

2. | | | |
|---|---|---|
| தமிழ் | கல்-இன் | கல்லின் |
| ஜப்பான் | இஸி-னொ | இஸினொ |
| தமிழ் | கல்-ஒடு | கல்லொடு |
| ஜப்பான் | இஸி-தொ | இஸிதொ |

2. இரு மொழிகளிலும் வாக்கியத்தின் எழுவாய் முதலிலும், பயனிலை அதனை அடுத்தும் வரும்.

தமிழ் — வேனில் போயிற்று

ஜப்பான் — பரு ஸரினு

3. இரு மொழிகளிலும் பெயரடைகள் பெயர்ச் சொல்லுக்கு முன் வரும்

தமிழ் கருமலை

ஜப்பான் குரொ யம

4. வினையுரிச் சொற்கள் வினைச் சொல்லுக்கு முன் வரும்

**தமிழ் சப்பான்**

மெல்ல நட யுக்குரி அருகே

சிறுத்துத் தோன்றும் சிபிஷு-கு மியு

5. செயப்படு பொருள் வினைக்கு முன் வரும்.

கல்லின் நாட்பலி யூட்டி இஸி-னொ
சஸகொமொனொ சித்த

6. இந்தோ - ஐரோப்பிய மொழிகளிலே உபயோகிக்கப்படும்

தொடர்பு இணைச் சொற்களுக்குப் பதிலாகப் பெயரெச்சங்கள் பயன்படுத்தப்படுகின்றன.

அவர் இருந்த என் நெஞ்சு கர-க ஸு தெஇரு

வதஷினொ கொகொரொ

7. தமிழ்-சப்பானிய மொழிகளில் காலங்காட்டும் இடைநிலைகள் வினைச்சொல்லுக்குப் பின் வரும்

மழை பெய்யும் அமெ புரமு

8. இரு மொழிகளிலும் இடைச்சொற்கள் பெயர்ச்சொல் அல்லது வினைச்சொல்லுக்குப் பின் வரும்.

அருளும் அன்பும் அறனும்

மெகுனிமொ அஇமொ துதொமெமொ

9. வினாவிடைச்சொற்கள் பெரும்பாலும் வாக்கியத்தின் முடிவிலே சேர்க்கப்படுகின்றன.

ஓரிகொல்லோ அல்லன் கொல்லோ

ஓரிக னொ கிததொ க

இப்பொழுது சப்பான் மொழியில் தமிழ்ச் சொற்களும், இலக்கணக் கூறுகளும் எப்படி வந்தன என்று பார்ப்போம்.

கடைசிப் பனி ஊழிக் காலத்தில் (சுமார் 15,000 ஆண்டுகளுக்கு முன்) சப்பான் நாடு சீனாவைச் சேர்ந்த தாய்வான் தீவுடன் ரியுகியு தீவால் இணைக்கப்பட்டிருந்தது. அது போலவே கியுசு தீவால் தென் கொரியாவுடன் இணைக்கப்பட்டிருந்தது.

பிலிப்பின் தீவுகளும், இந்தோனேசிய தீவுகளும் பல நிலப் பாலங்களால் ஆசியாவுடன் இணைக்கப்பட்டிருந்தன. இதனால் சீனா, கொரியாவிலிருந்தும், போர்னேயோ தீவு, பிலிப்பின் தீவுகளிலிருந்தும் ஆதி மனிதர்கள் சப்பானுக்குக் குடியேற முடிந்தது.

36% விகித சப்பானிய ஆண்களும், 30% விகித சப்பானியப் பெண்களும் D2 அப்லோகுருப்பை (மரபணு) உடையவர்கள். இந்த மரபணு உள்ள மக்கள் அந்தமான் தீவுகளிலும், இந்தோனேசியத் தீவுகளிலும், ஓரளவு திபேத் நாட்டிலும் காணப்படுகின்றனர்.

ஐம்பதாயிரம் ஆண்டுகளுக்கு முன் D மரபணு உள்ள ஆப்பிரிக்க மக்கள் இந்தியா, இந்தோனேசியா, பிலிப்பீன் தீவுகள் வழியாகச் சப்பானில் குடியேறினர். அதனால் D2 மரபணுவும் சப்பானில் குடியேறிய மக்களால் கொண்டு வரப்பட்டது. சப்பானியரிடையே C1 மரபணுவும் ஓரளவு காணப்படுகிறது. இந்தோனேசிய, பிலிப்பீன் தீவுகளின் மூல மக்கள் தென்னிந்தியத் திராவிடர்களுடன் தொடர்புடையவர்கள். C1 மரபணு உள்ள மக்கள் கேரளாவிலும், போர்னியோ தீவிலும் காணப்படுகின்றனர். அவர்கள் மூலம்தான் சப்பான், கொரியா, இந்தோனேசியா, பிலிப்பீன் நாட்டு மொழிகளில் ஆரம்பத்தில் மூலத்திராவிட மொழியின் சொற்களும், பல்லவர், சோழர் காலத்தில் தமிழ்ச் சொற்களும் கலந்தன. இந்தோனேசிய, மலேசிய, சப்பான் மொழிகளுக்குள்ளும் பல ஒற்றுமைகள் காணப்படுகின்றன.

பிலிப்பீன் மொழி எழுத்துக்களும் தமிழ் எழுத்துக்களை ஒத்திருக்கின்றன. அந்நாட்டுக் கிளைமொழிகளும் திராவிட மொழிக்குடும்பத்தைச் சேர்ந்தவை என்று ஆய்வாளர்கள் கூறுகின்றனர். Alfred Louis Kroebber (1876-1960) என்ற அமெரிக்க Anthropologue பெரும்பான்மையான folklore இந்து மதத்தைத் தழுவியவை என்கிறார். Tavera et Ppaterno போன்ற அறிஞர்கள் 25% பிலிப்பீன் மொழிச் சொற்கள் தமிழ் மூலத்தை உடையவை என்று கூறுகின்றனர்.

### உ. கொரிய மொழியில் திராவிடச் சொற்கள்

Homar B. Hulbert என்பவர் A comparative grammar of the korean language and dravidian language of India (1905) என்ற நூலில், திராவிட-கொரிய மொழிகளுக்கிடையில் உள்ள ஒற்றுமைகளை எடுத்துக் காட்டுகிறார். கொரியா, வடகொரியா, தென்கொரியா என்ற இரு பிரிவுகளை உடையது. தென் கொரியாவிலும், மற்றும்

அதை அடுத்துள்ள பசிபிக் தீவுகளிலும் கி.மு. 5 அல்லது 6ஆம் நூற்றாண்டிலேயே திராவிடர்கள் குடியேறியதாகத் தெரிகிறது. அதனால்தான் அப் பசிபிக் தீவு மொழிகளிலும் திராவிடச் சொற்கள் காணப்படுகின்றன.

## திராவிட மொழிகள், கொரிய மொழி ஒற்றுமைகள்

கொரிய மொழியும், திராவிட மொழிகளும் ஒட்டு நிலை மொழிகளைச் சேர்ந்தவை. அவ்விரு மொழிகளிலும் வேர்ச்சொற்கள் அதிகம். அவ்வேர்கள் வினையாகவோ அல்லது பெயராகவோ இயங்கக் கூடியவை.

### உயிரெழுத்துக்கள் ஒற்றுமை

இரு மொழிகளிலும், அ, இ, உ, எ, ஒ போன்ற உயிர்களிலும் ஐ, ஔபோன்ற ஈருயிர் ஒலிகளும் உள்ளன. உயிர்கள் குறில், நெடில் என்ற பாகுபாட்டையும் கொண்டவை. திராவிட மொழிகளில் உள்ளது போல் கொரிய மொழியிலும் மெய்யெழுத்துக்களில் ஒலிப்புள்ளவை, ஒலிப்பில்லாதவை ஆகிய இரு வகைக்குள்ளும் அதிக வேறுபாடுகள் இல்லை. அவை ஒரெழுத்துக்களால் எழுதப்படுகின்றன. அவை சொல் முதலில் ஒலிக்கப்படா. சொல் இடையில் ஒலிக்கப்படும். ஆனால் சொல் இடையில் இரட்டித்து வரும்போது ஒலிக்கப்படா.

### பெயர்ச்சொல்

திராவிட மொழிகளிலும், கொரிய மொழியிலும் வேற்றுமை உருபுகள் ஒருமையிலும், பன்மையிலும் ஒரே மாதிரியாக இருக்கும். பன்மை விகுதி, பெயர்ச்சொல்லுக்கும் வேற்றுமை உருபுக்கும் இடையில் வரும். இரு மொழிகளிலும் வேற்றுமை பல வகைப்படும். அவைகளின் விதி முறைகளிலும் ஒற்றுமை உண்டு. இரு மொழிகளிலும் முதல் வேற்றுமைக்கு உருபு கிடையாது.

### பன்மை விகுதிகள்

| | |
|---|---|
| திராவிட மொழிகள் | மார், கள், ப |
| கொரிய மொழி | முரி, தென்ல் |

திராவிட மொழிகளில் க், ள் பன்மை விகுதிகளாக வரும். சில திராவிட மொழிகளில் க் மட்டும் வருவதுண்டு. கொரிய மொழியில் இந்த க், த் ஆகவும் ல, ன்ல் ஆகவும் மாறித் தென்ல் ஆகிறது. தெலுங்கிலும் க்- த் ஆக ஒலிக்கப்படுகிறது.

## இடப்பெயர்

இரு மொழிகளிலும் தன்மை, முன்னிலை இடப்பெயர்களிலும் ஒற்றுமை காணப்படுகின்றது.

| | திராவிட மொழிகள் | கொரிய மொழி |
|---|---|---|
| தன்மை ஒருமை | நான், நா | நா, ன் |
| முன்னிலை | நீ | நு |

இதே ஒற்றுமைகள் கொரியாவை அடுத்துள்ள பசிபிக் தீவு மொழிகளான பொலினேசியன், ஆஸ்திரேலியப் பழங்குடி மொழி, மலேசிய மொழி மற்றும் பப்புவன், அபாத் போன்ற மொழி களிலும் காணப்படுகின்றன.

| | தன்மை | முன்னிலை |
|---|---|---|
| தமிழ் | நான் | நீ |
| தெலுங்கு | நே | நீ |
| கன்னடம் | நா | நீ |
| கொட | அனெ | நி |
| கோண்டி | அன்ன | நி |
| கொடகு | நான் | நீன் |
| மலையாளம் | ஞான் | நி |
| துளு | யான் | நீனு |
| தோடா | ஆன் | நி |
| குயி | ஆனு | நி |
| மல்தொ | என் | நின் |
| பர்மா | நா | - |
| மிகிர் | நே | - |
| தெதெங்கி | நே | - |
| கர்னிகொ | நி | - |

**பசிபிக் தீவு மொழிகள்**

| | | |
|---|---|---|
| ஆஸ்திரேலிய மொழி | ங்க, ங்கையி ஞ்கத்ச, | ங்கட்லு ங்பி |
| எபாத் | - | நிங்கொ |
| மலாயா | அன | - |
| பபுவன் | நன் | நின்னொ |
| பொலினேசியன் | வான் | ங்க |

மேலே கூறப்பட்ட மொழிகளில் தன்மையில் ந். அ -வும் முன்னிலையில் ந், இ -யும் நிலைத்திருப்பது குறிப்பிடத்தக்கது.

**சுட்டுச் சொற்கள்**

திராவிட மொழிகளில் உள்ளது போல் கொரிய மொழியிலும் அ, இ, உ போன்ற மூன்று சுட்டுகள் உள்ளன. திராவிட மொழிகளில் உ மறையத் தொடங்குகிறது. ஆனால் கொரிய மொழியில் அந்த உ இன்னும் வழக்கில் உள்ளது. அம்மொழியில் அ தூரத்தையும், இ அண்மையையும், உ இரண்டிற்கும் இடைப்பட்ட தூரத்தையும் குறிக்கின்றன.

எல்லாத் திராவிட மொழிகளிலும் த தற்சுட்டாக வரும். கொரிய மொழியில் இந்த த, த்யு என்று மாறுகிறது.

எ.டு.

| | திராவிட மொழிகள் | கொரிய மொழி |
|---|---|---|
| சேய்மை | அ (அந்த) | த்யு (அந்த) |
| | அ-து | த்யு-குத் (gut) |
| | அவன் | த்யு-சரம் |
| அண்மை | இ (இந்த) | இ (இந்த) |
| | இ-து | இ- குத் (gut) |
| | இவன் | இ- சரம் |
| இடைப்பட்டது | உ (உந்த) | கெயு (உந்த) |
| | உ-து | கெயு குத் |
| | உவன் | கெயு சரம் |

**எண்ணுப் பெயர்கள்**

திராவிட மொழிகளில் எண்ணுப்பெயர்கள் பெயர்ச்சொல்லாகவும், பெயருரிச்சொல்லாகவும் பயன்படுத்தப்படுகின்றன. இதே முறை கொரிய மொழியிலும் முதல் ஐந்து எண்ணுப் பெயர்களில் உண்டு.

| | திராவிட மொழிகள் | கொரிய மொழி |
|---|---|---|
| பெயர்ச்சொல் | ஒன்று | h அன் |
| பெயருரிச் சொல் | ஒரு | அன |
| பெயர்ச்சொல் | மூன்று | - |
| பெயருரிச்சொல் | மூ | - |
| பெயர்ச்சொல் | நால் | நகல் |
| பெயருரிச்சொல் | நா | நா |

| | | |
|---|---|---|
| பெயர்ச்சொல் | ஏழு | இழ் |
| பெயருரிச்சொல் | எழு | |

**வினைச்சொல்**

திராவிட மொழிகளிலும் கொரிய மொழியிலும் வினைச் சொற்கள் ஒட்டு நிலை வினைகளாகவே இருக்கின்றன. காலம், எதிர்மறை, பிறவினைகள் போன்றவைகளை உருவாக்க வேர்ச் சொல்லுடன் இடைநிலை விகுதி சேர்க்கப்படுகின்றது. இரு மொழிகளிலும் வினைவேர் ஏவலாகவும் பயன்படுத்தப்படுகிறது. பின்வரும் எடுத்துக் காட்டுகள் பெயர்ச்சொற்களில் உள்ள ஒற்றுமையைக் காட்டுகின்றன.

| திராவிட மொழிகள் | கொரிய மொழி |
|---|---|
| குடில் (வீடு) | குடுல் |
| அப்பா | அபி (b) அப்யி |
| தலை | துல் |
| கிவி (செவி, காது) | கிவி |
| கால் | பால் |
| நாயிறு (சூரியன்) | நல் |
| வான் (வானம்) | (h) ஆன் |
| தீ (நெருப்பு) | தீ |
| மலை | முயி |
| ஊர் | ரொ |
| பாம்பு | பாம் |
| இரு (நில்) | இர் |
| மெய் (உடல்) | மன் |
| பெய் (மழை) | பி |
| காய் (எரிதல்) | க்யு |
| கொருமை (கொழுமை) | கிரெயும் |
| பகு (பிரித்தல்) | பக் |
| முன் | முங்கு |
| படர் | பட |
| படகு | பட |
| அன், அணை (தொடு) | அன் (பிடி) |
| ஒன்று | அன் (hun) |

இதுவரை காட்டப்பட்ட ஒற்றுமைகள் மூலம் இருமொழிகளுக்கும் உள்ள தொடர்பை அறிய முடிகிறது.

**ஊ-ஆஸ்திரேலியப் பழங்குடிகள் மொழியில் தமிழ்ச் சொற்கள்**

தென் இந்தியாவும் ஆஸ்திரேலியாவும் பல ஆயிரக் கணக்கான மைல்கள் இடைவெளி தூரத்தில் இருப்பினும், ஆஸ்திரேலியப் பழங்குடி மக்கள் மொழிக்கும், திராவிட மொழிகளுக்கும் பல ஒற்றுமைகள் இருக்கின்றன. இதை 1847 லேயே J.C. Prichard என்ற ஆஸ்திரேலிய அறிஞர் கூறியிருக்கிறார். அடுத்து வில்லியம் பிளேக், நோரீஸ், திராம்பெட்டி (Trambetti) போன்ற அறிஞர்களும் இதே கருத்தைத் தெரிவித்து இருக்கின்றனர்.

இந்தியாவிலிருந்தும், சிரி லங்காவிலிருந்தும் 15000 ஆண்டுகளுக்கு முன் புலம் பெயர்ந்து சென்றவர்களின் வழித் தோன்றல்களே ஆஸ்திரேலியப் பழங்குடி மக்கள் என்று டக்லஸ் லாக்வுட் (Douglass Lockwood) என்பவர் We, the Aborigines (1963) என்ற நூலில் கூறுகிறார். R.M.W. Dixon ஆஸ்திரேலியப் பழங்குடி மக்கள் மொழிகள் திராவிட மொழிகளுடன் தொடர்புடையன என்று, The languages of Australia என்ற நூலில் குறிப்பிடுகிறார். திராவிடர் உறவு முறை (Dravidian kinship) என்ற நூலில் ஆர். ட்ராட்மன் அவர்கள் (ஆத்திரேலியப் பழங்குடிகள்) மொழிகளில் உள்ள பல அடிப்படைச் சொற்கள் தூய தமிழ்ச்சொற்களாக இன்றளவும் இருக்கின்றன. அவரிடையே திராவிடருடைய மைத்துனன்-மைத்துனி மணம் போன்ற உறவு முறையும் உள்ளது. ஆஸ்திரேலியப் பழங்குடியினர் திராவிடரிடமிருந்து பிரிந்தவர்களாகவோ, உறவு கொண்டவர்களாகவோ இருந்திருந்தால் தான் இது ஏற்பட்டிருக்க முடியும் என்கிறார்.

பின்வரும் எடுத்துக்காட்டுகள் இவ்விரு குழு மொழிகளுக்கிடையே உள்ள ஒற்றுமைகளை விளக்குகின்றன.

| | திராவிட மொழிகள் | ஆஸ்திரேலிய மொழிகள் |
|---|---|---|
| **இடப்பெயர்கள்** | | |
| தன்மை ஒருமை | நான், யான், நா<br>வான்து | ன்க, ன்கயி<br>ன்கத்ச |
| தன்மைப் பன்மை | நாங்கள், வாண்லு | ன்கட்லு,<br>ங்க்லி,<br>ன்கலத |

பன்மையில் நெருங்கிய தொடர்புகளைக் காணலாம்

| | | |
|---|---|---|
| முன்னிலை ஒருமை | நின், நீ, நின்ன, | ன்கின்ன ன்கிண்டோ, நின்க்டே |
| முன்னிலைப் பன்மை | நீம், நிம், நீர் நும் ஆயிவு | நிமெது, நுர நீவ, ன்குர்ல நீ |

பன்மை விகுதியான ம், ர், வ் போன்றவை நெருங்கிய தொடர்பைக் காட்டுகின்றன.

| 2ஆம் வேற்றுமை | தமிழ் | ஆஸ்திரேலிய மொழி |
|---|---|---|
| தன்மை-ஒருமை | என்னை | எம்மொ |

## இலக்கணத் தொடர்புகள்

ஆஸ்திரேலிய மொழியும் திராவிட மொழிகளும் பின்னொட்டுகள் உள்ள மொழிகள். வாக்கிய அமைப்புகள் இரு மொழிகளிலும் ஒரே மாதிரியாக உள்ளன. இரு மொழிகளும், பிறவினைக்கு வேர்ச்சொல்லுடன், சில இடைச் சொற்களைச் சேர்க்கின்றன. இரு மொழிகளிலும் தன்மைப் பன்மையில் நாம், நாங்கள் வேறுபாடு உண்டு.

## சொற்களில் ஒற்றுமை

| ஆத்திரேலிய மொழி | தமிழ் |
|---|---|
| ஞஞ்ஞா | தாய் |
| இறைய | தந்தை |
| இனையரு | இளைஞர் |
| பள நாளி | பழங்காலம் |
| மன்றோ | மன்று |
| பூய் | போ |
| கலம் | கட்டுமரம் |

## எ-தென்னமெரிக்க மொழிகளில் தமிழ்ச் சொற்கள்

ஆர்சியோ நன்ஸ் (Arcio Nuns) என்ற பிரேசில் நாட்டு அறிவியல் விஞ்ஞானி, ஆசியாவிலிருந்து திராவிடர்கள் தென்னமெரிக்காவுக்கு 11,000 ஆண்டுகளுக்கு முன்பே வந்ததாகக் குறிப்பிடுகிறார்.

டாக்டர் ஃபெல் (Dr. Fell) என்ற அமெரிக்க அறிஞர் (epigraphist) தென் கிழக்காசியாவில் வந்து குடியேறிய தமிழ்

வணிகர்கள் மெக்சிக்கோவிற்கும் வந்ததாகக் குறிப்பிடுகிறார். காரணம் அங்குக் கண்டெடுக்கப்பட்ட கல்வெட்டு ஒன்று கி.பி. 845 ஜுலை மாதத்தில் எழுதப்பட்டதாகவும் அது சக ஆண்டைக் குறிப்பதாகவும் கூறுகிறார். சக ஆண்டு பல்லவர் காலக் கணிப்பு முறை.

மெக்சிக்கோ நாட்டு அருங்காட்சியகப் பாதுகாவலரான ராமன் மேனா என்பவர் மாயா எழுத்து முறை கீழ்த்திசை மூலத்திலிருந்து வந்தது என்கிறார். ஓராக்ஜோ வி பெர்ரா என்பவர் மாயா எழுத்துக்கள் சமஸ்கிருத மூலத்தை உடையவை என்கிறார்.

அமெரிக்க மிக்சிகன் மாகாணப் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த உய்கோ ஃபாக்ஸ் (Hugo Fox) என்ற பேராசிரியர், சில ஆயிர் ஆண்டுகளுக்கு முன் தமிழ்ச்சொற்களும் உள்நாட்டு மொழியும் கலந்த மொழிகள் மெக்சிக்கோவில் பேசப்பட்டதாகக் கூறுகிறார். பிரேசில் நாட்டுப் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த ஆர்சியோ நன்ஸ் என்பவர் தென் அமெரிக்காவில் பிராகுயி மொழி வடிவத்தில் கொராணி மொழி பேசப்பட்டதைக் கண்டார்.

### ஏ-எத்ருஸ்கன் மொழியில் திராவிடக் கூறுகள்

உரோமர்களுக்கு முன் இத்தாலி நாட்டில் வசித்த மக்கள் எத்ருஸ்கர் எனப்படுவர். இவர்களின் மொழி எத்ருஸ்கன் எனப்படும். இம்மொழி திராவிட மொழிகளுடன் தொடர்புடையது என்று சில அறிஞர்கள் கூறுகின்றனர்.

கி.மு. 3000 அளவில் வடக்கு மெசொப்பொத்தாமியாவின் துருக்கிய, ஆர்மேனியன் ஏரிப்பகுதிகளை ஆக்கிரமித்துக் கொண்டிருந்த அர்ரியர்கள் சுமேரிய, திராவிட மொழிகளை ஒத்த ஒரு மொழியைப் பேசிக் கொண்டிருந்தனர். அவர்கள் பின்னர், சிரியா, பாலத்தீனப் பகுதிகளுக்கும் பரவினர். பின்னர் கி.மு. 2000 அளவில் அங்கிருந்து கிளம்பி, காக்கேசியாவின் தெற்குப் பகுதிக்கு (உரார்து) வந்தனர். அவர்கள்தாம் தற்கால Georgians-களின் முன்னோர்கள். உரார்து பகுதியைச் சேர்ந்த வெண்கலப் பொருள்கள் எத்ருஸ்கர்களின் கல்லறைகளில் காணப்பட்டன. எத்ருஸ்கர்கள் Troie நகரச் சண்டைக்குப் பின் கி.மு. 900 அளவில் லிதியாவிலிருந்து இத்தாலிக்கு வந்தவர்கள். அவர்கள் காக்கேசிய, ஸ்பெயின் நாட்டு இபேர், சிசிலித் தீவின் முதல் மனிதர்கள் போன்றவர்கள். அவர்கள் ஸ்பெயின் நாட்டிலிருந்து லிகுய்ர் என்ற ஆரிய இனத்தால் விரட்டப்பட்டனர். அவர்கள் ஆரியருக்கு முற்பட்ட இனம்.

ஸ்டென் கொனோவ் என்ற நார்வே நாட்டவர் 1904 லேயே திராவிட, எத்ருஸ்க மொழிகளுக்கிடையில் உள்ள ஒற்றுமை பற்றிக் கட்டுரை எழுதியிருக்கிறார். அவர் காணும் ஒற்றுமைகளாவன:

- எத்ருஸ்கன் பால் பகுப்பு முறை தமிழில் உள்ள பால் பகுப்புடன் ஒத்திருக்கிறது.
- தமிழில் 'இ' என்ற ஒட்டு பெண்பாலைக் குறிப்பது போல் இம்மொழியிலும் 'இ' பெண்பாலைக் குறிக்கிறது (தமிழ் : உழவன் - உழத்தி).
- இரு மொழிகளிலும் பன்மை விகுதிகள் ஒரே மாதிரியாக உள்ளன. தமிழ், திராவிட மொழிகளில் : அர், கள், லு பன்மை விகுதிகள். இம்மொழியிலும் அம்மாதிரியே உள்ளது.

எ.டு.

- clen (க்ளென்)- clen-ar (க்ளென்-அர்), மகன்கள்.
- cepen (செப்பென்) ceppar (செப்பர்)
- aisar (ஐசர்)
- திராவிட மொழிகளில் ஒருமையே சில சமயங்களில் அஃறிணையில் பன்மையாக இயங்கும். இம்முறை எத்ருஸ்கன் மொழியிலும் உண்டு.
- தமிழில் பெயரெச்சத்திற்குப் பயன்படும் அம், கு, அல் போன்ற விகுதிகள் இம்மொழியிலும் உண்டு.
- வேற்றுமை உருபுகள், மூவிடப் பெயர்கள் ஆகியவற்றிலும் ஒற்றுமை உண்டு. எத்ருஸ்கன் வேற்றுமை உருபுகள் : த, த், தி, கொலமியில் த், துளுவில் : த், து, த் - கொண்டியில் தெ, னெ, இ. பிராகுயிவில் த்தி.
- மூவிடப் பெயர்களிலும் ஒற்றுமை இருப்பதாகக் கூறுகிறார்.
- வினைச்சொற்களில் ஏவல் வினை, இறந்தகாலம், செய்வியென் ஏவல், எதிர்மறை வினை போன்றவற்றிலும் ஒற்றுமை காணப் படுகிறது.
- மலையாள மொழியில் வினைச்சொற்கள் பால் காட்டா. இம்முறை இம்மொழியிலும் உண்டு.

## ஐ-திராவிட மொழிகளும், பாஸ்க் மொழியும்

சுமார் 8000 ஆண்டுகளுக்கு முன் ஐரோப்பாவின் தென் பகுதி, ரஷிய நாட்டின் காக்கேசியப் பகுதி, வட ஆப்பிரிக்காவின்

கடலோரப் பகுதிகளில் பேசப்பட்ட மொழிகள் பாஸ்க் மொழியும், காக்கேசிய மொழியும். இவை ஒரே குடும்பத்தைச் சேர்ந்த மொழிகள்.

தமிழ் மொழியில் உள்ள ரகர, றகர வேறுபாடுகள் இம்மொழியிலும் இருக்கின்றன.

- பாஸ்க், திராவிட மொழிகளில் ர், ல் மொழி முதலில் வருவது, வராதது என்ற வகைகள் உண்டு.
- ப், ப் (b) வேறுபாடு பாஸ்க், லிகுரியன் மற்றும் திராவிட மொழிகளில் உண்டு. பாஸ்க் மொழியில் ப் (b) -க்கு முக்கியத்துவ(மும்), திராவிட மொழிகளில் ப் (p)க்கு முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது.
- பாஸ்க், நூபியன், திராவிட மொழிகளில் சொல் முதலில் மெய்யெழுத்துக்கள் இரட்டித்து வாரா.
- திராவிட மொழிகளிலும், பாஸ்க் மொழியிலும் இரட்டித்த மெய்களில் இரண்டாவது மெய் முதல் மெய்யின் சாயலைப் பெற்று நீண்டு ஒலிக்கிறது.
- திராவிட மொழிகளில் சொல் முதலில் ஒலி அழுத்தம் வருகிறது. இபேரிய, லிகுரிய மொழிகளிலும் ஒலி அழுத்தம் சொல்லின் முதல் சீரில் தான் இருக்கும். பாஸ்க் மொழியிலும், ஆரம்பக் காலத்தில் இவ்வாறு இருந்து, பிற்காலத்தில் அது மாறி விட்டது என்று மர்த்தினே (Martinet) என்பவர் கூறுகிறார்.
- திராவிட, பாஸ்க் மொழிகளில் ஆரம்பக் காலத்தில் ஓரசைச் சொற்களே இருந்தன.

மேலே கூறப்பட்ட மொழிகளில் வாக்கிய அமைப்புக் களிலும் பின் வரும் ஒற்றுமைகள் காணப்படுகின்றன. பாஸ்க், நூபியன், திராவிட மொழிகள் பின்னொட்டுக்களைப் பயன் படுத்தும் மொழிகள்.

- ஆரம்பக் காலத்தில் திராவிட, பாஸ்க் மொழிகளில் பெயர் வேர்களும், வினைவேர்களும் ஒரே மாதிரியாக இருந்தன. பிற் காலத்தில் தான் அம்மொழிகளில் பெயர்ச் சொல்லும், வினைச் சொல்லும் தனித்தனி அமைப்பைப் பெற்றன.
- பாஸ்க், திராவிட மொழிகளில் வினையில்லா வாக்கிய முறையும் உண்டு. அவ்விரு மொழிகளிலும் இறந்த காலம், இறந்த காலம் அல்லாதது என்ற பாகுபாடே இருந்தது.

- திராவிட மொழிகளிலும், பாஸ்க் மொழியிலும் வினையெச்சம், பெயரெச்சம் போன்றவை அதிக அளவில் பயன்படுத்தப் படுகின்றன. வினை வடிவங்களுக்குப் பதிலாக வினையில்லா வாக்கியங்கள் பயன்படுத்தப் படுகின்றன.
- இரு மொழியிலும் வாக்கியங்கள் வினையால் முடிகின்றன. வினை வேருடன், இடைநிலை, விகுதிகள் சேர்க்கப் படுகின்றன.

மேலும் சில ஒற்றுமைகள் கீழே கொடுக்கப்படுகின்றன.

- இவ்விரு மொழிகளிலும் மெய்யெழுத்துக்களில் வல்லினம், மெல்லினம், இடையினம் என்று மூன்று பிரிவுகள் உண்டு. திராவிட -ள், -ற் இந்த மொழிகளிலும் காணப்படுகின்றன.
- தமிழிலும், திராவிட மொழிகளிலும் வல்லெழுத்துக்கள் சொல் முடிவில் வாரா. பாஸ்க் மொழியிலும் வல்லெழுத்துக்கள் சொல் முடிவில் வாரா.
- சொற்கள் தொடங்கும் விதமும் பாஸ்கு, திராவிட மொழிகளில் ஒரே மாதிரியாக இருக்கின்றன.
- இவ்விரு மொழிகளின் சொல் அமைப்பிலும் ஒற்றுமை இருக்கிறது.
- காலங்காட்டும் இடைநிலைகளிலும் ஒற்றுமை உண்டு.
- பாஸ்க் மொழியில் வினைச் சொற்கள் எண், பால்களை ஒட்டுக் களால் உணர்த்துகின்றன.
- பழந்தமிழில் இருப்பது போல, காலம் இறந்த காலம், நிகழ்காலம் என இரண்டு வகைப்படும்.
- பாஸ்கில் இறந்தகால ஒட்டாக னகரமும், தகரமும் வருகின்றன. தமிழில் த், ட், ற், ன் இறந்த கால இடைநிலைகள். வினை எச்சங் களிலும் தகர ஒற்று இறந்த காலம் காட்டும் (தமிழில் வந்து, செய்து போன்றவற்றில் உள்ளது போல).
- சில எண்ணுப் பெயர்களிலும் ஒற்றுமை இருக்கிறது.
- பத்து, பதி போன்ற தமிழ் எண்களைப் போல் பெத் (bed) என்ற சொல் பயன்படுவதாக லாகோவரி என்பவர் கூறுகிறார். இவ்வித ஒற்றுமைகள் அக்கேடியன், சுமேரியன் ஏலமித் ஹேமித்தோ-செமித்திக் மொழிகளிலும் இருப்பதாக அவர் கூறுகிறார்.

## இடப்பெயர்கள்

- தெற்குத் திராவிட மொழிகளிலும், பாஸ்கு, செமித்திக் மொழிகளிலும் தன்மை ஒருமையில் ன, ன் ஒத்திருக்கின்றன. செமித்திக் மொழிகளிலும் தன்மை ஒருமை வடிவங்கள் திராவிட வடிவங்களுடன் ஒத்திருக்கின்றன. பழைய ஏஜியன் மொழியிலும் -ன் ஒத்திருக்கிறது. திராவிட மொழிகளிலும், பாஸ்க் மொழியிலும் தன்மை ஒருமை பன்மையில் -ன், -நம் ஒத்திருக்கின்றன. பாஸ்கு, வடக்குத் திராவிட மொழிகளிலும், கொக்காசிய மொழிகளிலும் த், த் (d) தன்மை ஒருமையில் சில சமயங்களில் பயன்படுத்தப்படுகின்றன.
- முன்னிலை ஒருமையில், இ, நி தெற்குத் திராவிட மொழிகளிலும் ஏலமித், நூபியன், பாஸ்கு மொழிகளிலும் காணப்படுகின்றன.
- படர்க்கை ஒருமை இடப்பெயர்களுக்குப் பதிலாக த், த்(d) தன், தன் (dan) போன்றவை பயன்படுத்தப்படுகின்றன.

**வினா**

திராவிட மொழியிலும், பாஸ்கு மொழியிலும் -ஆ வினாவைக் குறிக்கும் விகுதி.

எ.டு.

வந்தான் வந்தானா?

கொக்காசியன்

இக்குசி (பார்) இக்குசி-துக்-ஆ (அவைகளை நீ பார்த்தாயா?)

துக் (முன்னிலை ஒருமை) - ஆ வினா எழுத்து.

ஜோர்ஜிலன்

வர-ஆ (இருக்கிறேனா)

கெக்கொ-ஆ (அவன் வந்தானா)

**சுட்டுப் பெயர்கள்**

தெற்குத் திராவிட மொழிகள் படர்க்கையில் சுட்டுப் பெயர்களை இடப்பெயர்களாகப் பயன்படுத்துகின்றன.

எ.டு.

அ- வ்-அன் அவன் (அன் ஆண்பால் விகுதி)

பாஸ்கு மொழியும் இதே முறையைக் கையாளுகிறது

பழங்காலச் செமித்திக் மொழி தமிழ் -அ வுக்குப் பதிலாக - ஹ வை உபயோகித்தது. பாஸ்கு, கொக்காசியன் மொழிகள் சுட்டு இடப்பெயர்களுக்கு -த் உபயோகிக்கின்றன. நூபியன், திராவிட மொழிகள் படர்க்கை இடப்பெயர்களுக்குப் பதிலாக, -த், -த் (d) போன்றவற்றைப் பயன்படுத்துகின்றன.

திராவிட மொழிகளில் சுட்டெழுத்துக்களான அ சேய்மையையும், இ அண்மையையும், உ இரண்டிற்கும் இடைப்பட்ட தூரத்தையும் குறிக்கின்றன.

பாஸ்க், கொக்காசியன் மொழிகளும் தூரத்தைக் குறிக்க உ வையும், அண்மையைக் குறிக்க அ வையும் பயன்படுத்துகின்றன.

மத்திய திராவிட மொழிகளில் இ மிக அருகாமையையும், எ அருகாமையையும், அ தூரத்தையும், ஓ மிக தூரத்தையும் குறிக்கின்றன.

### பால்

திராவிட மொழிகளைப் போல், பாஸ்கு, நூபியன், கொக்காசியன், எத்ருஸ்கன், சுமேரிய மொழிகளிலும் சொற்கள் ஆண்பால், பெண்பால் என்று பிரிக்கப்படுவதில்லை. இம்மொழிகளில் பெயர்ச்சொற்கள் மகத் (உயர்திணை), அகமத் (அஃறிணை) என்று பிரிக்கப்படுகின்றன. இம்மொழிகளில் மரியாதைப் பன்மை என்ற வகையும் உண்டு. பாஸ்கில் முன்னிலையில் மரியாதைப் பன்மை என்ற வகையும் உண்டு. ஆயினும் படர்க்கை ஒருமையில் பால் வேறுபாடு உண்டு தொ என்ற சுட்டு ஆண்பாலையும், சொ என்ற சுட்டு பெண்பாலையும் குறிக்கின்றன. பாஸ்க் மொழியிலும் ன, அன் உடன் த்த், த், தி, தொ, அத் போன்ற முன் அல்லது பின்னொட்டுகள் பெண்பாலைக் குறிக்கின்றன. தெற்குத் திராவிட மொழிகளில் தி, த்தி போன்றவை பெண்பால் விகுதிகளாக வருகின்றன.

### பெயரெச்சங்கள் - Relative participles

திராவிட மொழிகளிலும், பாஸ்கு மொழியிலும் இணைப்புப் பெயரடைகள் (relative pronouns) கிடையா. அதற்குப் பதிலாகத் திராவிட மொழிகள் பெயரெச்சங்களைப் பயன்படுத்துகின்றன. பாஸ்கு மொழியில் திராவிட அ வுக்குப் பதிலாக ன் அல்லது என் பயன்படுத்தப்படுகிறது. அவ்விகுதிகள் இணைப்பு மாற்றுப் பெயர்கள் (relative pronouns) இடத்தை நிரப்புகின்றன.

எ.டு.

தொ-த்தொர்-என் முதிலா (வந்த பையன்)

திராவிட மொழிகளில் உள்ளது போல் சுமேரிய மொழியிலும் - அ பெயரெச்சத்தைக் குறிக்கிறது.

**பன்மை**

பாஸ்கு, நூபியன், சுமேரியன், எத்ருஸ்கன், கொக்காசியன் மொழிகள் பன்மைக்குப் பன்மை விகுதியைப் பெயர்ச் சொல்லுடன் சேர்க்கின்றன. அதனால் சொற்கள் மாற்றம் அடைவதில்லை. பன்மை விகுதிகளாகத் திராவிட மொழிகள் அர், க், கள், கள் (gal) களையும், சுமேரியன், எத்ருஸ்கன், கொக்காசியன் மொழிகள் கு, கு (gu) களையும் பயன்படுத்துகின்றன.

திராவிட மொழிகளில் அர், ரு, ர், உடன் கள், கள் (gal), குலு (gulu), அலு போன்ற விகுதிகள் பயன்படுத்தப்படுகின்றன.

தெற்குத் திராவிட மொழிகளில் அர், ரு மரியாதைப் பன்மையைக் குறிக்கின்றன. பாஸ்கில் அர், அர்ரொ, அரன் தொகுப்பைக் குறிக்கும் விகுதிகள். கொக்காசியன், எத்ருஸ்கன் மொழிகளில் அர் அஃறிணை, உயர்திணை இரண்டிற்குமே பன்மை விகுதியாக வரும்.

பிராகுயி, கொண்டியில் அக், க பன்மை விகுதிகள். பாஸ்கில் அக், க், கெ, கெ (ge) பன்மை விகுதிகள். அர்மினியன், சுமேரியனில் அக் பன்மை விகுதி. கொக்காசியனில் க் (kh) பன்மை விகுதி. கள், கள் (gal) பழங்கால -க், -ல் களின் கூட்டால் ஏற்பட்ட விகுதிகள்.

திராவிட இன் -னுக்குப் பதிலாகப் பாஸ்கு, நூபியன், செமித்திக் மொழிகள் என், இன், அன் போன்ற உருபுகளை ஆறாம் வேற்றுமைக்குப் பயன்படுத்துகின்றன. பாஸ்கு, கொக்காசியன் மொழிகள் திராவிட மொழிகளைப் போல் இரண்டு உருபுகளைப் பயன்படுத்துகின்றன.

**வேற்றுமை உருபுகள்**

**முதல் வேற்றுமை**

திராவிட மொழிகள் போல் பாஸ்கு, கொக்காசியன் மொழிகளில் முதல் வேற்றுமைக்கு உருபுகள் கிடையா.

**ஆறாம் வேற்றுமை**

பாஸ்கு, கொக்காசியன், எத்ருஸ்கன் சுமேரியன், திராவிட மொழிகளில் ஆறாம் வேற்றுமையில் அத்து என்ற சுட்டுடன் -இன் என்ற உருபு சேர்க்கப்படுகிறது.

எ.டு.

மர-அத்து -இன் மரத்தின்

பகுதி சுட்டு வேற்றுமை உருபு.

திராவிட இன்னுக்குப் பதிலாகப் பாஸ்கு, நூபியன், செமித்திக் மொழிகள் என், இன், அன் போன்ற உருபுகளை ஆறாம் வேற்றுமைக்குப் பயன்படுத்துகின்றன.

தமிழ் ஆறாம் வேற்றுமை உருபுகளான -இன், -ன் பாஸ்கு ஆறாம் வேற்றுமை உருபான என் உடனும், ஏழாம் வேற்றுமை உருபான (அ)ன் உடனும் ஒத்திருக்கின்றன. திராவிட ஆறாம் வேற்றுமை உருபுகளான அன், இன் மிகப் பழைய வடிவங்களின் கூட்டால் ஏற்பட்டவை என்று தெரிய வருகிறது. காரணம் கன்னடத்தில் -அ வும், தெலுங்கில் -ன வும், கொண்டியில் -என -வும், மால்டோவில் -நொ -வும் காணப்படுகின்றன. பாஸ்கு மொழியிலும் -அன் என்ற உருபு ஆறாம் வேற்றுமைக்கு உண்டு. தெற்குத் திராவிட மொழிகளில் -ன் இந்த வடிவங்களிலும் உண்டு.

பின் வரும் மொழிகளிலும் இம்மாதிரியான அமைப்பு ஆறாம் வேற்றுமையில் காணப்படுகிறது.

| | | |
|---|---|---|
| அசீரியன் | -இன | பின்னொட்டு |
| பெர்பெர் | இன | முன்னொட்டு |
| ஹௌசா | ன | |
| நூபியன் | -இன், -ன், -நொ | |

பின் வரும் திராவிட மொழிகளிலும் இந்த உருபுகள் காணப்படுகின்றன.

| | | |
|---|---|---|
| கோண்டி | இன் | ந |
| மல்த்தொ | நொ | அ |
| குருக் | நு | |

தமிழ் ஏழாம் வேற்றுமை உருபான இன், ஆறாம் வேற்றுமை உருபான -அது போன்றவைகளைப் பாஸ்கு மொழியிலும், கொக்காசியன் மொழியிலும் காணலாம்.

**நான்காம் வேற்றுமை**

திராவிட மொழிகளில் கு, க, கெ, கி நான்காம் வேற்றுமை உருபுகள். பாஸ்கில் இந்தக் கி வினைகளில் சேர்க்கப்படுகிறது.

எ.டு.

தொ தொர் - கி - த் அவன் என்னை நோக்கி வந்தான்.

மத்திய திராவிட 'ஐந்தாம் வேற்றுமை உருபான -த்த், சுமேரிய -த வுடன் ஒத்திருக்கிறது.

கன்னட, குயி, ஆறாம் வேற்றுமை உருபான -அ சுமேரிய, எத்ருசிய ஆறாம் வேற்றுமை உருபான -அ -வுடன் ஒத்திருக்கிறது.

தெற்குத் திராவிட மொழிகளில் மூன்றாம் வேற்றுமை உருபான -ஆல் பாஸ்கு -லெ, -ல உடனும், -ஒடு சுமேரிய -ட வுடனும் ஒத்திருக்கின்றன.

பாஸ்கு, செமித்திக், பெர்பெர், திராவிட மொழிகளில் ஏழாம் வேற்றுமை உருபுகளாக அந்த், எந்த், உந்த், ந்த, ந்தொ போன்றவை வருகின்றன.

தமிழ், கன்னடத்தில் அண்டை -அண்மையையும், அண்டு -நெருங்கி வருதலையும் குறிக்கின்றன.

மேற்குத் திராவிட மொழிகளில் -அனி- யும், மத்திய திராவிட மொழிகளில் -ந்தொ- வும் நெருங்கி வருதலைக் குறிக்கின்றன.

**வினைச் சொற்கள்**

திராவிட மொழிகளிலும், பாஸ்கு மொழியிலும் இறந்த காலம், எதிர்காலம் என்ற இரு காலங்கள் உள்ளன. திராவிட மொழிகளில் -இ இறந்த காலத்தை உணர்த்துகிறது. இந்த -இ இன்றும் தமிழ், கன்னடம், மலையாளம், தோடாவில் வழக்கில் உள்ளது. தெலுங்கு -ஈ, பார்ஜி, கோண்டியில் -இ வினை எச்சத்தைக் குறிக்கிறது. தெலுங்கில் -த் -இ, குயி -யில் -த் இறந்த காலத்தையும், பிராகுயியில் -இ இறந்த காலத்தையும் குறிக்கின்றன. பழைய பாஸ்கிலும் -இ இறந்த கால வினை எச்சத்தைக் குறிக்கிறது.

பழைய செமித்திக், அக்காடியன், பெர்பேர், அராமியன் மொழிகளிலும் -இ இறந்த காலத்தைக் குறிக்கிறது. பெர்பெரில் -த் இறந்த காலத்தைக் குறிக்கிறது. (தமிழிலும் -த் இறந்த காலத்தைக் குறிக்கிறது).

திராவிடத் தி, த்தி, தெ, தொ போன்ற உருபுகள் பெயரடை, பண்புப்பெயர், இறந்த கால வினை எச்சம் போன்றவைகளை உருவாக்கப் பயன்படுகின்றன. இதே கருத்தைத் து, தொ, த் ஜு உருபுகளும் தெரிவிக்கின்றன.

எ.டு.

அறி அறிந்த (தமிழ்)

நெகல் + தெ = நெகல்த்தெ

## எதிர்காலம்

திராவிட மொழிகளில் -கு, -க்கு, து போன்றவை வினையுடன் சேர்க்கப்பட்டு எதிர்காலத்தைக் குறிக்கின்றன. பாஸ்கிலும் இதே முறை உண்டு.

எ.டு.

படி- படித்து- படிக்கு

எதிர்கால இடைநிலைகளாக -வ், -உ, -உவ்- களும் வருகின்றன. தமிழிலும் குயி-யிலும் -வ் எதிர்கால இடைநிலை, சில திராவிட மொழிகளிலும் -ஒ இறந்த காலம் அல்லாததைக் குறிக்கும் இடைநிலை. பாஸ்கிலும் இந்த -ஒ நிபந்தனை வினையைக் குறிக்கிறது. அந்த -க் பாஸ்கிலும் உண்டு. திராவிட மொழிகளிலும், பாஸ்கு மொழியிலும் வினைவேர்கள் இடப்பெயர்கள் விகுதிகள் அல்லது காலங்காட்டும் இடைநிலைகளை ஏற்கும்போது எவ்வித மாற்றமும் அடைவதில்லை.

திராவிட மொழிகளில் எதிர்மறையை உருவாக்க வினைவேருடன் இடப்பெயர் விகுதி சேர்க்கப்படுகிறது. பாஸ்கு திராவிட மொழிகளில் (indicative mood) இறந்த கால முற்று வினை, எதிர்காலம் அல்லது முடிவு பெறாத காலத்தைக் குறிக்கும்.

## பண்புப்பெயர் உருவாக்குதல்

தெற்குத் திராவிட மொழிகளிலும் பண்புப் பெயர்களை உருவாக்க -ம, -மை, -அம் என்ற விகுதிகள் வினைவேருடன் அல்லது பெயரடையுடன் சேர்க்கப்படுகின்றன.

பசுமை = பசுமை

தூங்கு - தூக்கு + ம் = தூக்கம்

ஆழ் - ஆழ் + அம் = ஆழம்

பாஸ்கிலும் இதே போன்று உள்ளது.

எ.டு.

இகஸ் = படி

இகஸ்மென் = படிப்பு

செமித்திக் மொழியில் வினையடையை உருவாக்க -அம் உபயோகிக்கப்படுகிறது. ஆப்பிரிக்க மொழிகளில் -ம், -அம் பண்புப் பெயர்களை உருவாக்கப் பயன்படுகின்றன. சுமேரியனில் -நம் என்ற முன்னொட்டு பண்புப் பெயரை உருவாக்கப் பயன்படுகிறது.

பாஸ்கில் -தெ என்ற விகுதி வினையிலிருந்து பெயரடை உருவாக்கப் பயன்படுகிறது.

எ.டு.

லொ = தூங்கு

லொ-த்தெ = தூக்கமான

இந்த -த் -ஐ, தமிழ் -தி, கன்னட -தெ -வுடன் ஒப்பிடலாம்.

திராவிட மொழிகளிலும், பாஸ்கு மொழியிலும் -இ பண்புப் பெயரை உருவாக்கப் பயன்படுகிறது. திராவிட மொழிகளில் பண்புப் பெயரை உருவாக்கப் -பு என்ற விகுதி பயன்படுத்தப்படுகிறது. பாஸ்கில் -ப பயன்படுகிறது.

எ.டு.

ஒத்ஸ் = மூக்கு

ஒஸ்ப்ப = வெற்றி, புகழ்

திராவிட மொழிகளில் -த என்ற விகுதி பெயரடையிலிருந்து பண்புப் பெயர் உருவாக்கப் பயன்படுகிறது.

எ.டு.

நல் + த = நல்த (நல்ல)

பாஸ்கில் -த பண்புப் பெயரை உருவாக்கப் பயன்படுகிறது.

எ.டு.

அர்ரி - த

# 4. மேற்காசிய மொழிகளில் தமிழ்ச் சொற்களும், இலக்கணக் கூறுகளும்

## *4.1 சுமேரிய மொழியில் திராவிடச் சொற்கள்*

*சுமேரிய நாகரிகம் திக்ரிசு, எப்ராத் நதிகளுக்கிடையில் உருவாகிய நாகரிகம். மெசொபொதாமியா என்றழைக்கப்பட்ட அந்தப் பகுதி இப்பொழுது ஈராக் எனப்படுகிறது. சுமேர் நாகரிகம் கி.மு. 5000 அளவில் தோன்றிக் கி.மு. 4000 அளவில் உன்னத நிலையை அடைந்தது. மெசோபொதாமிய நாகரிகத்தை உருவாக்கிய சுமேரியர் பாபிலோனிய சமவெளியின் பூர்விகக் குடிகள் அல்லர். அவர்கள் அந்தச் சமவெளியில் வந்து குடியேறியவர்கள். புதைபொருள் ஆராய்ச்சியில் கண்டெடுத்த பொருள்கள் மூலம் உபெய்தியர்கள்தாம் தெற்கு மெசொபொதாமியாவின் பழங்குடிகள் என்று தெரியவருகிறது. காரணம் சுமேரியர் வருகைக்கு முன் தெற்கு மெசோபொதாமியா உபெய்தியர்களால் வசிக்கப்பட்டது.*

*அவர்கள் உபெய்து என்ற மலைப் பிரதேசத்திலிருந்து வந்தவர்கள். உபெய்து பகுதியில் செய்த ஆராய்ச்சியின் மூலம் சுமேரிய நாகரிகம் தோன்றிய இடம் அது தான் என்று தெரியவருகிறது. உபெய்தியர்கள்தாம் தெற்கு மெசொபொதாமியாவில் சுமேரிய நாகரிகத்துக்கு அடிப்படை போட்டவர்கள். உபெய்து எரிது என்ற நகரத்திற்கு அருகில் எப்ராத் நதி பாரசீக வளைகுடாவில் கலக்கும் இடத்தில் இருந்தது. அங்கிருந்த போதுதான் அவர்கள் நாகரிக வளர்ச்சி பெற்றுக் கடல் வாணிபத்தில் ஈடுபட்டிருந்தனர். சில காலம் கழித்து அந்தத் துறைமுகம் மண்ணால் மூடப்பட்டதால், அந்த இடத்தை விட்டு விட்டு, தெற்கு மெசொபொதாமியாவில் வந்து குடியேறி உலக முதல் நாகரிகத்தை உருவாக்கினர். அதே நேரத்தில் சுமேரியாவுக்கும், ஈரானிலுள்ள ஆஷாலுக்கும் இடையில் இருந்த தில்முன் என்ற பகுதியிலிருந்து சுமேரியர்கள் சுமேரியாவில் வந்து குடியேறினர். பின்னர், அவர்கள் உபெய்தியர்களைத் தோற்கடித்து அவர்கள் வாழ்ந்த பகுதியைத் தங்கள் வசமாக்கிக் கொண்டனர்.*

இந்தியாவில் பல இடங்கள் ஊர் என்ற பெயரால் முடிகின்றன. திராவிட மொழிகளில் ஊர் என்றால் கிராமம் அல்லது மனிதர் வாழும் பகுதியைக் குறிக்கிறது. உபெய்தியில் உள்ள சுமார் முப்பதுக்கு மேற்பட்ட இடங்கள் ஊர் என்று முடிகின்றன. அது போலவே பல ஆறுகளின் பெயர்களும் ஆறு என்று முடிகின்றன. திராவிட மொழிகளில் கல் என்ற சொல் பாறையையும் குறிக்கும். பாறைகள் மிகுந்த இடங்கள் உபெய்து பகுதியில் கல் என்று முடிகின்றன. சுமேர் வட்டெழுத்துக் கல்வெட்டுகளில் குறிக்கப்படும் இடிக்ளட் திக்ரீஸ் நதியைக் குறிக்கிறது. இந்த இடிக்ளட் சிந்து நதியுடன் தொடர்புடையதாய் இருக்கிறது. (சிந்த்- இந்த்-இத்) சிந்த் என்றால் நீர் என்று பொருள். இடிக்ளட்டில் உள்ள இடம் நீரைக் குறிப்பதாக இருக்கலாம். அது போலவே தொழிலைக் குறிக்கும் சொற்களும் திராவிட விகுதிகள் பெற்றிருக்கின்றன.

எ.டு.

உபெய்து மொழியில் கர் என்ற விகுதி தொழிலைக் குறிக்கிறது. திராவிட மொழிகளில் கர் தொழிலைக் குறிக்கும் விகுதி. தமிழில் வணிகர் என்றால் வாணிகம் செய்பவரைக் குறிக்கும். மேற்கூறிய ஒற்றுமைகளிலிருந்து உபெய்தியர்கள் திராவிட மொழியைப் பேசியவர்கள் என்றும், அவர்கள் தற்கால ஈரான், ஈராக் பகுதிகளில் வாழ்ந்தவர்கள் என்றும் தெரியவருகிறது. இந்தத் திராவிடர்கள்தாம் சுமேரிய நாகரீகத்தை உருவாக்குவதில் அதிக பங்கேற்றவர்கள்.

சுமேர் என்ற சொல் திராவிடக் குமேருடன் தொடர்புடையதாய் இருக்கிறது. துளு மொழியில் குமேரு என்றால் தரிசு நிலத்தைப் பயிரிடுதல் என்று பொருள். தமிழ், தெலுங்கு, கன்னடம் மற்றும் பிற திராவிட மொழிகளிலும் இந்தச் சொல் அதே பொருளைத் தருகிறது. பயிர்த்தொழில் செய்து வாழ்ந்த சுமேரியர்கள் உபெய்து மக்களை வென்ற பின் உபெய்தியர்களின் உதவியால் நாகரிக வளர்ச்சி பெற்று நகர வளர்ச்சியில் ஈடுபட்டு மெசொபொதாமியாவின் வடக்குப் பகுதி வரை பரவினர். பின்னர் அந்த வடக்குப் பகுதியில் வாழ்ந்து வந்த செமித்திக் இனத்தைச் சேர்ந்த அக்காடியர்களை வென்றனர். அதிலிருந்து அக்காடியர்களும் சுமேரிய நாகரிகத்தை ஏற்றுக் கொண்டு சுமேரியர் ஆட்சிக்குட்பட்டு வாழ்ந்தனர். சுமேரிய நாகரிகத்தால் வளர்ச்சியடைந்த அக்காடியர் முதலில் சுமேரியரை கி.மு. 2500-2300 அளவில் வென்று தங்கள் அரசைத்

தோற்றுவித்தனர். சுமேரிய அரசு அழிந்ததால் சுமேரிய மொழி வழக்கிழந்தது. அக்காடியர் சுமேரிய கலைகளைத் தங்கள் கலைகளாக ஏற்று அதை வளர்த்தனர். பின்னர் அக்காடியர்களை பாபிலோனியர் வென்றனர். அவர்களும் சுமேரிய நாகரிகத்தைத் தொடர்ந்து வளர்த்தனர். இவ்வாறு சுமார் ஆயிரம் ஆண்டுகள் சுமேரிய நாகரிகம் மெசொபெத்தாமியா முழுவதும் பரவி இருந்தது.

**சுமேரிய மொழியில் தமிழ்ச்சொற்கள்**

தமிழ்மொழிக்கும் சுமேரிய மொழிக்கும் பலவித ஒற்றுமைகள் காணப்படுகின்றன. அவைகள் பற்றிச் சற்று ஆராய்வோம்.

- திராவிடமொழியான தெலுங்கு உயிரெழுத்துக்களின் உச்சரிப்பும், சுமேரிய மொழியின் உயிரெழுத்துக்களின் உச்சரிப்பும் ஒரே மாதிரியாக உள்ளது.
- தமிழில் உள்ளது போல் உயர்திணை, அஃறிணைப் பாகுபாடு சுமேரிய மொழியிலும் உண்டு. அஃறிணைக்கும், உயர்திணைக்கும் தனித்தனிப் பன்மை உருபுகள் உண்டு.
- நான்கு, ஆறாம், ஏழாம் வேற்றுமை உருபுகள் இரு மொழியிலும் ஒரே மாதிரியாக உள்ளன. அவ்விரு மொழிகளிலும் ஆறாம் வேற்றுமை உடைமையைக் குறிக்கிறது.
- தன்மை, படர்க்கை இடப்பெயர்கள் ஒரே மாதிரியாக உள்ளன.
- இருமொழிகளும் ஒட்டு நிலை வகையைச் சேர்ந்தவை.
- வேற்றுமை உருபுகள் ஒருமையில் பெயர்ச் சொல்லுக்குப் பக்கத்திலும், பன்மையில் பன்மை உருபுக்குப் பக்கத்திலும் போடப் படுகின்றன.
- பெயர்ச்சொல்லுடன் வேற்றுமை உருபையும், வினைச் சொல்லுடன் காலங்காட்டும் இடைநிலைகளையும் சேர்க்கும் போது ஒரே மாதிரியான மாற்றங்கள் ஏற்படுகின்றன.
- பல வேர்ச்சொற்கள், பெயர்ச் சொற்களாகவும், வினைச் சொற்களாகவும் பெயரடைகளாகவும் பயன்படுத்தப் படுகின்றன.
- பெயரடைகள் மிகவும் குறைவு. அவைகள் வேற்றுமை உருபுகளை ஏற்கா.

- இருமொழிகளிலும் சொல்லமைப்பும், வாக்கிய அமைப்பும் ஒரே மாதிரியாக உள்ளன.
- இருமொழிகளிலும் வினை எச்சங்கள் ஒரே மாதிரியாக உள்ளன. வினைகளில் இறந்த காலம், இறந்த காலம் அல்லாதது என்ற பாகுபாடு உண்டு. வினையில் செயப்படுபொருள் குன்றாவினை, செயப்படுபொருள் குன்றிய வினை போன்ற வகைகளும் உண்டு.
- நிகழ்காலம், இறந்த காலம், வினை எச்சம் போன்றவை ஒரே மாதிரியாக உள்ளன.
- வினைச்சொற்கள் தன்மை ஒருமையில் ஒரே மாதிரியாக முடிகின்றன.
- எதிர்மறைக்கும் துணை வினை பயன்படுத்தப்படுகிறது.
- இருமொழிகளிலும் வாக்கியம் வினைமுற்றால் முடிகிறது. வினைவேர்களுடன் காலங்காட்டும் உருபுகளும் இடப்பெயர் விகுதிகளும் சேர்ந்தால் வினைமுற்று உண்டாகிறது.
- இவை தவிரப் பின் வரும் ஒற்றுமைகளையும் குறிப்பிடலாம்.

### உயிரெழுத்துக்கள்

சுமேரிய மொழியில் நான்கு உயிரெழுத்துக்களும், திராவிட மொழிகளில் ஐந்து உயிரெழுத்துக்களும் உள்ளன.

சுமேரியன் : அ, இ, எ, உ

திராவிட மொழிகள் : அ, இ, எ, உ, ஒ

திராவிட மொழிகளில் உள்ள குறில், நெடில் முறை சுமேரியன் மொழியில் இல்லை.

### மெய்யெழுத்துக்கள்

இருமொழிகளிலும் சொல் முதலிலும், இடையிலும் க, ப, த போன்ற மெய்கள் ஒரே மாதிரியாக உச்சரிக்கப்படும். க, ப க, த - ப b-ப வேறுபாடுகள் பிற்காலத்தில் ஏற்பட்டவை.

எ.டு.

| | |
|---|---|
| சுமேரியன் - | கட் |
| தமிழ் | கந்தை |
| தெலுங்கு | கந்துவ |
| கன்னடம் | கந்தெ |
| பார்ஜி | கந்த் |

சுமேரிய திராவிட உச்சரிப்பு முறைகள் ஒரே மாதிரியானவை.

| | |
|---|---|
| சுமேரியன் | து, துக் (g) துக், துகுல் |
| தமிழ் | துகில், துயில் |
| கன்னடம் | துகல, dukula (dugula) |

சுமேரிய மொழியில் ஆரம்பத்தில் து (tu) ஆக இருந்த வேர் பின்னர் துக், துக் (g) ஆகப் பேச்சு மொழியில் மாறுகிறது. பிற்காலத்தில் அது துகும் (tugum). துகல் (tugul) என்று மாறியது. மேலேயுள்ள திராவிடச் சொற்களின் இடையில் வரும் க, ப க் கள் ஒரு காலத்தில் சுமேரியன் சொற்களில் வரும் க் (துக் - ktuk), க்துக் g(tug) போன்று ஒலித்திருக்கலாம், என்பதைக் காட்டுகிறது.

## இடப் பெயர்கள்

| சுமேரியன் | | | திராவிட மொழிகள் |
|---|---|---|---|
| ஞ்க | தன்மை | ஒருமை | நா, யா, ஞா |
| எனெ | படர்க்கை | ஒருமை | தான், அவன் |
| அனெ | | | தன், அவன் |

வேற்றுமை உருபுகள்

இரு மொழிகளிலும் நான்காம் வேற்றுமைக்குப் பதிலாக சில சமயங்களில் ஏழாம் வேற்றுமை பயன்படுத்தப்படும்

4-ம் வேற்றுமை

| சுமேரியன் | திராவிட மொழிகள் |
|---|---|
| க, அக் | க், க்கு, கெ |

ஆரம்பக் காலத்தில் சுமேரியனில் வேர்கள் ஓரசையில் இருந்தன. இலக்கணமும் எளிமையாக இருந்தது. பிற்காலத்தில் தான் வினைச்சொற்கள் கடினமான அமைப்பைக் கொண்டிருந்தன. வினைச்சொல் இறந்த காலம், இறந்த காலம் அல்லாதது நிகழ்காலம், எதிர்காலம் என்ற பிரிவைக் கொண்டிருந்தது. சுமேரியனில் காலம் காட்ட உருபு அல்லது இடைநிலைகளை வினா முன் அல்லது பின் சேர்க்கப்படும். திராவிட மொழிகளில் உருபுகள் வினச்சொல்லுக்குப் பின்னர் சேர்க்கப்படும். இரு மொழிகளிலும் பேசுவோரை விகுதிகளால் அறியலாம். எதிர்மறை தனி உருபுகளால் அல்லது இடைநிலைகளால் காட்டப்படுகிறது

சுமேரியன் : ன (ல), னு (லு) : னி (லி), ன், ல் க்குள் வேறுபாடு இல்லை.

திராவிட மொழிகள் : அன் (அல்), இன் (இல்), : ஒன்று மற்றொன்றுக்கு வரும்.

## இடப் பெயர் முடிவுகள்

| சுமேரியன் | திராவிட மொழிகள் |
|---|---|
| தன்மை ஒருமை என | என் |

இரு மொழிகளிலும் இணைப்பு மாற்றுப் பெயர்கள் (relative pronouns) கிடையா-relative participles கள் பயன்படுத்தப் படுகின்றன.

## வினை எச்சம் உண்டாக்குதல்

சுமேரியன் நிகழ்காலம், எதிர்காலம் வினை + இடைநிலை+அ

இறந்த காலம் வினை + எத்+ எத்த

திராவிட மொழிகள் : நிகழ்காலம், எதிர்காலம் வினை + இடைநிலை + அ

இறந்த காலம் வினை+அத+அத்த

## சில சொற்கள் ஒற்றுமை

| சுமேரியன் | திராவிட மொழிகள் |
|---|---|
| அம்மா | அம்மா |
| அப் (b) | ஆன் (பசு) |
| | ஆரு (தெலுங்கு) |
| | ஆவ் (கோத்தா) |
| அபா (aba) | அப்பன் |
| அர | அரை (த்தல்) |
| ஆர் | ஆர் (ஆர்ப்பரித்தல்) |
| அள் | ஆள் (ஆளுதல்) |
| இர் | ஈ (இது) |
| ஊடு | ஆடு |
| ஊர் | ஊர் |

| | |
|---|---|
| குட் (d) | கட்டு |
| கஜ் | கச்சு (வெட்டு, கடி) |
| குத் (d) | குத்து |
| : குட் | கூடு |
| குருன் | குருதி |
| குர் | குர்ரம் (குதிரை) |
| கிபுர் | கோபுரம் |
| துகுக் | துகில் |
| பகர் | பாகன் (ஓட்டுபவன்) |
| பர் | பறி (கிழித்தல்) |
| b புரு | புற்று |
| மிலி | மிடறு (கழுத்து) |
| முஸ் | மறி (குட்டி) |
| முக | மேகே (ஆடு) |
| முர் | முதுகு |
| முஸ் | மூன்று |
| முக் g | முடி (உச்சி) |
| பிட் (d) | வீடு |
| துப் (b) | துப்பு |
| தும் | தும்பி |

## 4.2 திராவிட மொழிகளும், மைத்தன்னி மொழியும்

G.B .Brown, Ferdinand Bork போன்றவர்கள் திராவிட மொழிகளுக்கும் மைத்தன்னி மொழிக்கும் ஒற்றுமைகள் இருப்பதாகக் கூறினர். இம்மொழி கி.மு. 15ஆம் நூற்றாண்டளவில் மத்திய தரைக் கடல் பகுதியில் எஃப்ராத் நதிக்கரையில் வழங்கிய மொழியாகும். மைத்தன்னி என்ற ஆரியரல்லாத இனத்தினர் எப்ராத் நதியின் மேல் பகுதியில் (தற்போதைய ஈராக்) கி.மு. 15ஆம் நூற்றாண்டில் வசித்தனர். அந்நதிக்கு மேற்கே ஹித்தீத் என்ற மக்களும், அதற்குக் கிழக்கே அசீரியர்களும் வசித்தனர். சுதந்திரமாக இருந்த மித்தன்னி மக்கள், எகிப்துக்கு அடிமையாகிப் பின்னர் ஹித்தீத் மக்களில் கலந்தனர். மித்தன்னியர்கள் திராவிடர்களுடன் நெருங்கிய தொடர்புடையவர்களாக இருக்கின்றனர். அவர்கள் மொழியும் திராவிட மொழிகளும் பல ஒற்றுமைகளைக் கொண்டிருக்கின்றன. Brown இம்மொழிகளுக்

குள் பின் வரும் ஒற்றுமைகளைக் காட்டுகிறார்.

- இவ்விரு மொழிகளும் ஒரே மாதிரியான ஒலி அமைப்பு, சொற்கள், இலக்கணக் கூறுகளை உடையனவாக உள்ளன.
- திராவிட மொழிகளிலுள்ள ஐந்து உயிர்கள் இம்மொழியிலும் உண்டு.
- இவ்விரு மொழிகளிலும் மெய்யெழுத்துக்களில் ஒற்றுமை காணப்படுகிறது.
- மைத்தன்னி மொழியிலும் திராவிட மொழிகளிலுள்ள, சில நாமடி ஒலிகள் உண்டு.
- திராவிட மொழிகளில் எச்சங்களிலிருந்து பல வகை வினைச் சொற்கள் உருவாக்கும் முறை இம்மொழியிலும் உண்டு.
- இம்மொழியில் எதிர்மறையைக் காட்டும் முறை திராவிட முறையைப் போல் இருக்கிறது. இம்மொழியில் இணைப்புப் பெயரடைகள் (relative pronouns) கிடையா. அவைகளுக்குப் பதிலாக வினையெச்சங்கள்தாம் உண்டு.
- இரு மொழிகளிலும் உயர்திணை அஃறிணைப் பாகுபாடு உண்டு.
- இரு மொழிகளிலும் 'அன், ஆனல் ஆண்பால் விகுதிகளாக வரும். 'ல' இரு மொழிகளிலும் பெண்பால் விகுதி. திராவிட மொழிகளிலும், மைத்தன்னி மொழியிலும் 'ம்' அஃறிணைப் பெயர்களின் முடிவாக இருக்கும்.
- திராவிட மூவிடப் பெயர்களும், மைத்தன்னி மூவிடப் பெயர்களும் ஒரே மாதிரியாக உள்ளன.

| | திராவிட மொழிகள் | மைத்தன்னி |
|---|---|---|
| தன்மை ஒருமை | என், ஏன் | எனி |
| முன்னிலை ஒருமை | நீ, உன் | என்னி |
| படர்க்கை ஒருமை | அன் | அன், ஆன் |
| அஃறிணை | அது | அதி |
| | அதன் | அதினி |

- இவ்விரு மொழிகளிலும் சில வேற்றுமை உருபுகள் ஒத்திருக்கின்றன. இரண்டாம் வேற்றுமை : ஐ, ன், - நான்காம், ஆறாம் வேற்றுமைகள் : கு, கி, கு.
- இரு மொழிகளிலும் வினைச்சொல்லில் செய்வினை, செயப்பாட்டு வினை என்ற பாகுபாடு உண்டு.

## 4.3 - திராவிட மொழியும் ஏலமித் மொழியும்

ஏலம் என்ற நாட்டின் மொழி தமிழ் மற்றும் திராவிட மொழிகளுடன் தொடர்புடையதாக இருக்கிறது. ஈரான் நாட்டின் திக்ரீஸ் ஆற்றுக்குக் கிழக்கில் தற்போது குர்திஸ்தான் என்று அழைக்கப்படும் நாடு ஒரு காலத்தில் ஏலம் என்று அழைக்கப்பட்டது. சுமேரிய நாகரிகத்தைப் போன்று இதுவும் சிறந்த நாகரிகம் வாய்ந்த நாடாக ஒரு காலத்தில் இருந்தது. அந்த ஏலத்து மக்களுக்கும், சிந்துவெளி திராவிட இனத்திற்கும் மத்திய தரைக் கடல் நாட்டு மக்களுக்கும் நெருங்கிய ஒற்றுமைகள் இருந்தன. அதனால் சில ஆராய்ச்சியாளர்கள் திராவிட இனம் அந்த ஏல இனத்து மக்களைச் சேர்ந்தவர்கள் என்று கூறுகிறார்கள். தியா என்ற ஆசிரியர் Language of ancient Asia minor என்ற தன் நூலில் திராவிட மொழியும், ஏலமித் மொழியும் ஒரே மாதிரியான இலக்கண அமைப்பைக் கொண்டவை என்று சுட்டிக் காட்டுகிறார். இந்த ஒற்றுமை கடன் வாங்கலால் ஏற்பட்டதில்லை என்றும், அந்த இரு மொழி மக்களும் ஒரு காலத்தில் ஒரே இடத்தில் வசித்தவர்களாக இருக்க வேண்டும் என்றும் கூறுகிறார்.

சோவியத் மொழிநூல் வல்லுனர் ஐ. டயக்கனாவ் என்பவரும், பண்டைய ஆசியா மைனரின் (சிற்றாசியா) தொன்மொழிகள் என்ற நூலில் - ஏலம் மொழியும், திராவிட மொழிக் குடும்பமும் உறவுடையன - என்று கூறுகிறார். அவர் கொடுக்கும் சில எடுத்துக் காட்டுகளாவன:

திராவிட மொழிகளில் கெடு என்னும் சொல் அழி, இல்லாததாதல் என்ற பொருள் தரும். ஏலம் மொழியில் இச்சொல் இல்லாததாதல் என்ற பொருளைத் தருகிறது. ஏலம் மொழியில் நான் என்ற சொல், நாள் என்ற பொருள் தரும். திராவிட மொழிகளில் இச்சொல் காலை, வைகறை, நாள் என்ற பொருள்களைக் குறிக்கும். ஏலம் மொழியில் பறி என்றால் சேர்தல் என்று பொருள். திராவிட மொழிகளில் இச்சொல் தோற்றோடு, தட்டிக்கழி போன்ற பொருள்களைத் தரும். மேலும் அவர் ஏலம் மொழி மற்றும் திராவிட மொழிகளுக்கும் இலக்கண அமைப்பிலும் ஒற்றுமை உள்ளது என்றும் இவ்விலக்கண ஒற்றுமைகளைக் கடன் பெற முடியாதென்றும், இவ்விரு குழு மொழிகளிடையே நீண்டகாலத் தொடர்பு இருப்பதாகவும் கூறுகிறார். ஒலியியல், சொல்லியல், சுட்டுச் சொற்கள் ஆகியவற்றிலும் நெருக்கமான தொடர்பு இருப்பதாகக் கூறுகிறார்.

ஐக்ரோஸ் மலையிலிருந்து (மொசபொதாமியாவிலிருந்து) பலுசிஸ்தானம் வரை பரவியிருந்த ஏலம் பிற்காலத்தில் ஏக்கமினிட்

பெர்சிய ராஜ்யத்துடன் இணைக்கப்பட்டது. ஏலமித் மொழி இருவிதமான எழுத்துக்களில் எழுதப்பட்டிருக்கிறது. மூல ஏலமித் என்ற மொழி கி.மு. 4000 விருந்து கி.மு. 2200 வரை வழக்கிலிருந்தது. (அதாவது சுமேரிய மொழிக்கு எழுத்து வடிவம் ஏற்பட்டதிலிருந்து). இந்த மூல ஏலமித் எழுத்துக்கள் சிந்து வெளி எழுத்துக்களைப் போல் இருக்கின்றன. கி.மு. 2500 விருந்து ஏலம் மொழி மொசபொதாமிய எழுத்துக்களில் எழுதப்பட்டது. கி.மு. 2200இல் எழுதப்பட்ட ஒரு கல்வெட்டு பழைய ஏலமித் மொழியில் உள்ளது. கி.மு. 1300 கி.மு. 640 வரை வழக்கத்தில் இருந்து வந்த மொழி மத்திய ஏலமித் எனப்படும். கி.மு. 500 விருந்து வழக்கிலிருந்த மொழி ஏக்கமினித் ஏலமித் என்று அழைக்கப் படுகிறது. இம்மொழி பெர்சிய அரசு மொழியாகக் கல்வெட்டுகளில் காணப்படுகிறது. இம்மொழியில் பழைய பெர்சிய மொழிச் சொற்கள் அதிகம் உள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

இம்மொழி திராவிட மொழிகளுடன், குறிப்பாக மூலத்தமிழ் மொழியுடன் தொடர்புடையதாக இருப்பதாக அமெரிக்க மொழியியல் அறிஞரான மக். ஆல்ப்பின் (Mc. Alpin) 1973 லேயே கூறினார். அவருக்கு முன் பல அறிஞர்கள் அவ்விரு மொழிகளுக்கிடையில் உள்ள ஒற்றுமைகளைக் கூறியிருக் கின்றனர் : எட்வின் நோரிஸ் 1853-1855லும், கால்டுவெல் 1856லும், அதை அடுத்து H. Pedersen, V. Thomsen, A. Trombetti, F. Borrk போன்றவர்கள் ஏலமித் - திராவிட மொழிகளுக்குள் உள்ள ஒற்றுமைகளை எடுத்துக் காட்டியிருக்கின்றனர்.

மக்ஆல்ப்பின், 1969இல் Hallock என்பவர் வெளியிட்ட Persepolis Fortification Tablets என்ற நூலிலிருந்து சுமார் 50 சொற்களை Burrow/Emeneau வெளியிட்ட Dravidian Etymological Dictionary, இல் உள்ள சொற்களுடன் ஒப்பிட்டுப் பார்த்து அவைகளுக்குள், உச்சரிப்பு ஒற்றுமை மற்றும் சில வேற்றுமை உருபுகளிலும் ஒற்றுமை இருப்பதாகக் கூறினார். இந்த ஆய்வின் முடிவை Toward Proto/Elamo/Dravidian என்ற கட்டுரையில் வெளியிட்டார். இக்கட்டுரை 1974இல் Language 50 என்ற பத்திரிகையில் வெளியிடப்பட்டது. 1973இல் வினை வேர்களிலும் ஒற்றுமை இருப்பதாகத் தெரிவித்தார். 1981இல்; Proto-Elamo-Dravidian: The evidence and its implication என்ற கட்டுரையில் இவ்விரு மொழிகளுக்கிடையில் உள்ள ஒற்றுமைகளை மிகத் தெளிவாக விளக்கிக் காட்டியிருக்கிறார். அவர் குறிப்பிடும் சில சொற்களின் ஒற்றுமைகள் கீழே கொடுக்கப்படுகின்றன.

| மத்திய ஏலம் | ஏக்கமினிட் ஏலம் | தமிழ் திராவிடம் |
|---|---|---|
| | ஆஸ் | ஆன், ஆ |
| ஆய் (இடைச்சாதி) | | கன்னட ஆ, ஆவு, (பசு), தெலுங்கு ஆவு, குருக்: ஓய், மால்தோ : ஓயு |
| ரிஷ (பெரிய) | இர்ஷ | தமிழ்-இறை (பெரியோர், சான்றோர், அரசன், தலைவன்) கன்னட - எரே (தலைவன்) - பழைய தெலுங்கு) |
| கப் (மூடு) | கப் (மூடு) | கப்பு (தமிழ்)- கவி (கன்னடம்)- மூடு-மறைத்தல் |
| பறி (இழு) | | பறி (தமிழ்-கன்னடம்) |
| பரி (போ) | பரி (போ) | பரி (தமிழ்-கன்னடம்)-ஓடு, ஓடிப் போ. |
| தள்ளு (எழுது) | தள்ளி (எழுது) | தள்ளு (தமிழ், கன்னடம்-தள்ளினி, துளு-எழுது) |

இது போன்ற சுமார் 81 சொற்கள் மூலத்திராவிடச் சொற்களோடு ஒத்திருப்பதாகக் கூறுகிறார். அவர் மேலும் கூறுவதாவது:

சுருங்கக் கூறின் எல்லா அடிப்படை வேற்றுமை உருபுகளிலும் (மூன்றாம் வேற்றுமை, கருவி, sociative - ஐந்தாம் வேற்றுமை தவிர) ஒற்றுமை காணப்படுகிறது.

இதே போல் அடிப்படை பின்னொட்டுகளிலும் ஒற்றுமை காணப்படுகிறது.

திராவிட மொழி மூலத்திராவிட மொழியுடன் நெருங்கிய தொடர்புடையது. ஆனால் ஏலமித் அதினின்று சற்று விலகிப் பிற மொழியின் அமைப்பைப் பெற்றிருக்கிறது.

இடப்பெயர்களில் இவ்வித ஒற்றுமைகளைக் காண முடியவில்லை. திராவிட மொழியில் -ம் இடப்பெயர்களின் முறையான பன்மையைக் குறிக்கிறது. ஆனால் ஏலமித்தில் அது முன்னிலை பன்மையைக் குறிக்கிறது.

முன்னிலை இடப்பெயர்களில் அதிக ஒற்றுமைகள் உள்ளன.

| மூலத் திராவிடம் | மூல ஏலம் | | மூலத் திராவிடம் |
|---|---|---|---|
| நி | நி | நீன் | பிராகுயி நீ (முன்னிலை ஒருமை) |
| நிம் | நும் | நீம் | பிராகுயி நும் (முன்னிலை பன்மை) |

பன்மை வடிவங்கள் இ, உ ஆகின்றன.

எதிர்மறை வினை அல், மற்றும் இறந்த கால இடைநிலை infinitive லும் ஒற்றுமை இருக்கிறது.

மூலத் திராவிட மொழியில் விவசாயம், கால்நடை சம்பந்தப்பட்ட சொற்கள் ஏலம் மொழியோடு தொடர்புடையதாக இருக்கிறது.

| ஏலம் | தமிழ் |
|---|---|
| உறு | உழு |
| கலம் | களம் (நெல் அடிக்குமிடம்) |
| வயல் | வயல் |
| கெய் | கொய் (அறுவடை செய்தல்) |

மூலத் திராவிட மொழியில் குறிப்பிட்ட பயிர்களுக்கென்று தனிப் பெயர்கள் கிடையா. உள்ள பெயர்கள் அனைத்தும் ஏற்கெனவே ஏலமித்தில் உள்ள பெயர்களின் கீழ்ப்பிரிவுகளே. ஆனால் வீட்டு மிருகங்களுக்குக் குறிப்பிட்ட பெயர்கள் உண்டு.

எ.டு.

| ஏலமித் | தமிழ் |
|---|---|
| ஆய் | ஆய் (பசு) |
| கன்று | கன்று |
| யாடு | யாடு (ஆடு) |

மூலத் திராவிட மொழிச்சொற்கள் மேய்ப்புத் தொழிலை அடிப்படையாகக் கொண்ட மக்களின் சொற்களாகவே உள்ளன. மேற்காசிய மக்களின் சொற்களோடு அதிகத் தொடர்புடையனவாக உள்ளன. அந்த மேற்காசிய மக்கள் கோதுமை, பார்லி பயிர் செய்பவர்களாகவும், ஆடு, மாடு மேய்க்கும் இனமாகவும் இருந்தனர். ஆனால் தெற்காசிய மக்கள் அரிசி பயிரிட்டு, எருமை, கோழி வளர்ப்பு போன்றவைகளில் ஈடுபட்ட மக்களாய் இருந்தனர். தென்னிந்தியாவில் கோதுமை பார்லி விளைவிப்பது கடினம். அதனால் அத்தொழில் பற்றிய சொற்கள் மூலத்திராவிட மொழியில் மிகக் குறைவாக இருக்கின்றன. மேற்கு ஆசியத்

திராவிடர்கள் இந்தியா வந்ததும், அப்பயிர்களை விளைவிக்க முடியாமல் அத்தொழிலைக் கைவிட்டனர். அதனால் தான் பயிர்கள் பற்றிய சொற்களை அவர்களிடையே அதிகம் காண முடியவில்லை. ஏலமித் மக்கள் மொழியில் மேய்ப்புத் தொழில் பற்றிய சொற்கள் அதிகம் உள்ளன. மூலத் திராவிட மொழியிலும் இச்சொற்கள் காணப்படுகின்றன. ஆனால் ஏலம் மக்களிடையே விவசாயம் சம்பந்தப்பட்ட சொற்கள் மிகக் குறைவு.

மேற்கூறிய மொழிகளின் சொற்களில் ஒற்றுமை இருப்பதால் அம்மொழிகள் எழுத்து வடிவம் பெறுவதற்கு முன்பே பிரிந்து விட்டன என்று தெரிய வருகிறது.

### 4.4. அக்கேடிய மொழியில் தமிழ்ச்சொற்கள்

கால்டுவெல் என்பவர் திராவிட மொழிகள் ஊரால்-ஆல்த்தயிக் அல்லது பின்னோ தர்த்தாரிக் மொழிக் குடும்பத்தைச் சேர்ந்தவை என்கிறார். இந்த மொழிகளின் குடும்பத்தில் சமோதிக், பின்னிசு, துருக்கி, மங்கோலிய, துங்குசி மொழிகள் அடங்கும். மிகத் திருந்திய மொழியான அக்கேடியன் மொழியும் இக்குடும்பத்தைச் சேர்ந்தது. அசிரியா, கல்தையா, சுசியானா, மெதியா போன்ற நாடுகளில் வசித்த மிக நாகரிகமடைந்த துரானிய இன மக்கள் பேசிய மொழி இது. அக்கேடிய மொழி, திராவிட மொழிகளின் இலக்கணத்தையும், சொற்களையும் ஒப்பிட்டுப் பார்த்த கால்டுவெல், அம்மொழிகளுக்குள் பின்வரும் ஒற்றுமைகளைக் காண்கிறார்.

அக்கேடியன் மொழிகளின் மண் தட்டுகளில் த், :த், ன் போன்ற எழுத்துக்கள், ஆறாம் வேற்றுமை உருபுகளான அ, ன, நின, இன், ன, நான்காம் வேற்றுமை உருபான இக்க, இக்கி, (தமிழ் கு) எண்ணுப் பெயரான இம் (தமிழ் ஆம்) முன்னிலை இடப் பெயர் நி, நின் (தமிழ் நீ, நின்) காணப்படுகின்றன. தமிழுக்கும் ஆல்த்தயிக் மொழிகளுக்குள்ள பிற ஒற்றுமைகளையும் கால்டுவெல் விரிவாகத் தம் நூலில் காட்டுகிறார். தமிழ்ச் சொற்களும் செமித்திக், ஆல்த்தயிக் மொழிச் சொற்களும் பல நிலைகளில் ஒத்திருக்கின்றன என்பதைப் பின்வரும் சொற்கள் மூலம் விளக்கலாம்.

| தமிழ் | பிற மொழிகள் | பொருள் |
|---|---|---|
| அக்கா | இகன் | அக்கா |
| அன்னை | அன்ய (பின்னிசு) | தாய் |
| அப்பன் | அப்பி (பிப்-இப்ப) | தந்தை |
| அம்மா | அம்மா (சமோய்) | தாய் |

| | | |
|---|---|---|
| அத்தல் | அத்த (பின்னிசு) | தாய் |
| ஆம் | அம் (வொகுல்) | ஆம் |
| அவ்வை | அவ (மோர்ட்வின்) | தாய் |
| கட்டு | கொட் (அங்கே) | கட்டு |
| கேள் | குள் -என் (பின்னிசு) | கேள் |
| கோ | கோ (அக்டீக்) | அரசன் |
| கோழி | கோரி (ஊகல்) | கோழி |
| தீ | தீ (சமோய்) | தீ |
| தோல் | தோவ்ல் (உகுல்) | தோல் |
| ஞாயிறு | நியர் (அங்கேரி) | கோடை |
| பிடி | பிடன் (பின்னிசு) | பிடி |
| பிற | பெற (பின்னிசு) | பிறகு |
| முனை | மன் (சமோ) | வீடு |
| முரம் | மொர (லப்போனியன்) | மரம் |
| வெளிச்சம் | வெளிக் (அங்கேரி) | ஒளி |

### 4.5 அங்கேரி மொழியில் தமிழ் மற்றும் திராவிடச் சொற்கள்

அங்கேரிய நாட்டுத் தமிழறிஞரான கபோர் செந்துகதொல்னை (Gabor Szendukattolnai) Tamil-Dravida studies என்னும் இரண்டு பகுதிகளாக வெளியிடப்பட்ட நூலில், தமிழுக்கும் அங்கேரிய மொழிக்கும் உள்ள தொடர்புகளை விளக்கிக் காட்டியிருக்கிறார்.

Hamori என்பவரும் சமீபத்தில் சுமார் 800 அங்கேரி மொழிச் சொற்கள் தமிழ் மற்றும் திராவிடச் சொற்களுடன் ஒத்திருப்பதை எடுத்துக் காட்டியிருக்கிறார். அவைகளுள் சில கீழே கொடுக்கப் படுகின்றன (Internet இல் அவர் கொடுக்கும் நீண்ட பட்டியலைக் காணலாம்).

| திராவிடம் | அங்கேரியன் | பொருள் |
|---|---|---|
| ஆள் | ஏள் (நட) | ஆளுதல் |
| மூணு | மொனொ | மூன்று |
| இடு | அட் | வை |
| கொருக | அக்கர் | கோரு (விரும்பு) |
| ஆள(ம்) | ஆள் | ஆழம் |

| | | |
|---|---|---|
| அலகு | அல்கு | தாடை (அலகு) |
| அல், அல்லு | அல்ஜ் | இரவு, இருட்டு |
| அன்னை | அன்ய | அன்னை, தாய் |
| ஆய் | அன்ய | பெண், அன்னை |
| எம் அன்னை | அன்யம் | எம் அன்னை |
| அப்பன் | அப்ப | அப்பா |
| அப்பு | அப்பு | அப்பா (ஆசையாக அழைத்தல்) |
| அரசி | உரஸ்ஜ் | அரசி |
| அரிவை | அர | 20-25 வயது பெண் |
| அபரஞ்சி | அரனி | மாசற்ற பொன் |

## 4.6 - தென்கிழக்காசிய மொழிகளில் தமிழ்ச் சொற்கள்

தமிழ் நாட்டு வணிகர்கள் கி.மு. மூன்றாம் நூற்றாண்டிற்கு முன்பே தென்கிழக்கு ஆசிய நாடுகளான சம்பா (தெற்கு வியட்நாம்), பர்மா, தாய்லாந்து, கம்போடியா, இந்தோனேசியா போன்ற நாடுகளுக்குச் சென்று வாணிகம் செய்து வந்திருக்கின்றனர். அவ்வாறு வணிகர்களாகச் சென்றவர்களில் சிலர் அந்த நாடுகளில் உள்ள பெண்களை மணம் செய்து கொண்டு அங்கேயே தங்கி விட்டதால் அவர்கள் மூலம் தமிழும், தமிழ்ப்பண்பாடும் அந்தந்த நாடுகளில் பரவ ஆரம்பித்தன. பிற்காலத்தில் அவ்வணிகர்களின் சந்ததியினர் அந்நாடுகளின் அரசியலில் முக்கிய உறுப்பினராகித் தமிழ் நாட்டு அரசர்களுடன் தொடர்பு கொண்டிருந்தனர். கி.பி. 5ஆம் நூற்றாண்டில் பல்லவப் பேரரசர்களின் ஆதிக்கம் அந்நாடுகளில் மேலோங்கியதால் சமற்கிருத மற்றும் தமிழ்ச் சொற்கள் அந்நாட்டு மொழிகளில் மேலும் கலந்தன.

கி.பி. 2 முதல் 12ஆம் நூற்றாண்டு வரை பல்லவர்களும், சோழர்களும் தென்கிழக்காசிய நாடுகளுடனும், சீனாவுடனும் வியாபாரம் செய்தனர். பல்லவர்கள் பெகு (பர்மா), பூனான் (தெற்கு கம்போடியா), சம்பா (தெற்கு வியட்னாம்) கெடா (மலாயா) சுமத்ரா, ஜாவா போன்ற நாடுகளில் வணிகத் தலங்களை நிறுவினர். சீனக் குறிப்பு ஒன்று, தமிழ் வணிகர்கள் மலேசியாவில் மட்டும் முப்பது வாணிகத் தலங்களை நிறுவி இருந்ததாகக் குறிப்பிடுகிறது. பிற்காலத்தில் அவை வலுவுள்ள நாடுகளாக மாறின. அந்நாட்டு அரசர்களும் பல்லவர்களைப் போல் வர்மன் என்ற பட்டப்பெயரை வைத்துக் கொண்டனர். அந்த நாட்டு

எழுத்துக்களும் பல்லவ- தமிழ்க் கிரந்த எழுத்துக்களைத் தழுவி அமைக்கப்பட்டன.

கி.பி. நான்காம் நூற்றாண்டளவில் (320) காஞ்சிபுரத்து இளவரசனான கவுந்தின்யன் பூனான் நாட்டு இளவரசியான சோமாவை மணந்து கொண்டு அந்நாட்டு அரசனானான். அது முதல் பல்லவர் செல்வாக்கு பூனான் நாட்டின் கீழ் இருந்த சியாம் நாட்டைச் சேர்ந்த துவாரவதியிலும் பரவியது.

பூனாவில் தோற்றுவிக்கப்பட்ட முதல் பல்லவ அரசு 600 ஆண்டுகளுக்குப் பின் முடிந்தது. கி.பி. 6ஆம் நூற்றாண்டில் இந்த அரசு அருகில் இருந்த சென்லா நாட்டால் தோற்கடிக்கப்பட்டது. சென்லா நாடு இந்தோசீனா, சியாம் நாடுகளை வென்று ஒரு பேரரசாக மாறியது. ஜயவர்மனால் தோற்றுவிக்கப்பட்ட இப்புதிய அரசு வலுவுள்ள கம்போடிய நாடாக மாறி, கி.பி. 14ஆம் நூற்றாண்டு வரை நீடித்தது. அதன் பின் சியாம் நாட்டால் தோற்கடிக்கப்பட்டது.

இராஜ ராஜ சோழன் காலத்தில் (985-1014) பர்மா, மலேசியா, சுமத்ரா, ஜாவா போன்ற நாடுகளில் சில பகுதிகள் வெல்லப் பட்டன. அவர் மகன் இராஜேந்திர சோழன் வணிகர்கள் சங்கத்திற்கு ஆதரவு கொடுத்து தென்கிழக்காசிய நாட்டு வாணிகத்தைப் பெருக்கினார். அவருக்குப் பின் வந்த வீரராஜேந்திரன், குலோத்துங்க சோழன் போன்றவர்களும் தென்கிழக்காசிய நாடுகளில் வாணிபம் செய்து வந்த தமிழ் வணிகர்களுக்கு ஆதரவு தந்து அயல்நாட்டு வாணிகத்தை ஊக்குவித்தனர். இராஜேந்திர சோழன் 1025இல் பர்மாவில் இருந்த பெகு வணிகத்தளம், அந்தமான், நிக்கோபார் தீவுகளை வென்றார். கி.பி. 1068இல் பர்மாவில் இருந்த தமிழ் வாணிகத் தலத்தைப் பர்மா அரசன் கியான்ஜித்தா கைப்பற்றியபோது, இராஜேந்திர சோழன் தன் தங்கை மகன் குலோத்துங்க சோழனைப் பெரும் படையுடன் அனுப்பி அவனைத் தோற்கடித்தார். அவன் இராஜேந்திர சோழனுக்குக் கப்பம் கட்ட ஏற்றுக் கொண்டபோது வென்ற பகுதியை அவனிடமே கொடுத்து, குலோத்துங்கன் தன் மகளையும் அவனுக்குத் திருமணம் செய்து வைத்தார். சோழர் காலத்தில் பல அரச குடும்பத்தினர் பர்மாவில் குடியேறியதால் தமிழ் மொழி, தமிழ்க்கலைகள், தமிழ்ப் பண்பாடுகள் அங்குப் பரவின.

சுமத்ரா, ஜாவா, மலேசியா போன்ற நாடுகளில் ஆதிக்கம் செலுத்தி வந்த சிரி விஜயா அரசு அந்நாடுகளில் இருந்த தமிழ் வணிகர்களின் வியாபாரத் தலங்களுக்குத் தொல்லை கொடுத்தபோது வீர ராஜேந்திரன் ஒரு பெரிய தமிழ்ப் படையை

அனுப்பி சிரி விஜயா அரசை வென்று அவன் நாட்டைக் கைப்பற்றினார். பிறகு அவ்வரசன் சோழர்களின் கைப்பாவை அரசாக மாறிக் கப்பம் கட்ட இசைந்ததும் வென்ற பகுதிகளை அவனிடமே கொடுத்தார். சுமார் 20 ஆண்டுகள் காலம் தம் தங்கை மகனான குலோத்துங்க சோழனைச் சிரி விஜயா அரசில் தன் பிரதிநிதியாக இருக்கச் செய்து அந்நாட்டு ஆட்சியைக் கவனித்து வந்தார். சுமார் 50 ஆண்டுகள் தென்கிழக்காசிய நாடுகள் சோழர்களின் மேற்பார்வையில் இருந்ததால் அந்நாடுகளில் எல்லாம் தமிழ்மொழி, தமிழ்ப் பண்பாடுகள் கலைகள் பரவின. குறிப்பாக மலாயா, தாய்லாந்து, பர்மா, கம்போடியா போன்ற நாடுகளில் சோழர்களின் செல்வாக்குப் பெருகியது.

கம்போடியாவில் இரண்டாம் சூர்யவர்மன் ஆட்சிக்காலத்தில், கம்போடியாவின் ஆட்சிக்குட்பட்டிருந்த சிரி தர்மராஜாவைக் கைப்பற்றியிருந்த ரமணதேசத்தை (தற்காலப் பர்மாவில், ரங்கூனைச் சுற்றியிருந்த பிரதேசம்)ச் சோழ அரசு கைப்பற்றிக் கம்போடிய ஆங்க்கோர் அரசுவிடம் மீண்டும் கொடுத்தபின் சோழ வம்சத்தினர் வாட் பூவில் (நாக்கோர் வாட்) தங்க அனுமதிக்கப்பட்டு ஆங்க்கோர் ஆட்சியில் இணைந்தனர். அதன் பின் ஆறாம் செயவர்மன் தன் அரச சபையை மீண்டும் மதிதாராவுக்கு (சிரி தர்மராஜா அல்லது தற்கால லிகோர்) மாற்றிச் சிரி விசயப் பேரரசை அங்கு நிறுவியபோது திவாகரர் என்ற சோழ அரசன் வாட் பூவில் வந்து தங்கினார். அந்தத் திவாகரர் இராசேந்திர சோழனின் மகளுக்கும் வெங்கிநாட்டு இராசனான முதலாம் இராஜ ராஜனுக்கும் பிறந்தவன் என்று வரலாற்றுக் குறிப்புகள் அறிவிக்கின்றன. இவர் சோழ அரச சபைக்கு வருமுன் சிரிவிஜயா நாட்டில் இருந்ததாகச் சீன வரலாற்றுக் குறிப்பு ஒன்று கூறுகிறது. இவருடன் திவானிகா என்ற சோழ அரசனும் வந்ததாகத் தெரிகிறது. இந்தத் திவானிகா ஆறாம் செயவர்மனின் சகோதரன் மனைவிக்கு உறவினர். அதனால்தான் ஆங்க்கோர் ஆட்சிக்கு வாரிசு இல்லாத போது இவர் போட்டி இட்டார். இந்த உறவு காரணமாகத் தான் சீன வரலாற்றுக் குறிப்பு கூறுவது போல் வாட் பூ பகுதிக்கு அரசராகி ஆங்க்கோர் (பிற்காலக் கம்போடியா) ஆட்சிக்குட்பட்ட அரசராக இருந்தார். தமிழ்நாட்டில் சோழப் பேரரசு வீழ்ச்சியுற்ற போது சோழ குடும்பத்தினர் பலர் கம்போடியாவில் வந்து தங்கினர். திவாணிகர் இரண்டாம் உதயாதித்த வர்மன் காலத்தில் ஆங்க்கோர் அரச சபையில் ஒரு முக்கிய உறுப்பினராக இருந்து அரசு காரியங்களில் பங்கேற்றார். இவ்வாறு சோழ குடும்பத்தினர் கம்போடியாவில் குடியேறியதால் தமிழ்மொழி, தமிழ்ப் பண்பாடு மற்றும் தமிழ்க் கலைகள்

கம்போடியாவிலும் அதன் ஆட்சிக் குட்பட்டிருந்த பர்மா, தாய்லாந்து, சிரி விசயா நாடான மலேசியா, இந்தோனேசியத் தீவுகளான ஜாவா, சுமத்ராவிலும் பரவின.

அந்நாடுகளில் கிடைத்த தமிழ்க் கல்வெட்டுகளும் இவ் வரலாற்று நிகழ்ச்சிகளை உறுதிப்படுத்துகின்றன.

கம்போடியா நாட்டு அரசர் தன்னுடைய நாட்டைப் பாதுகாக்கும் நோக்கத்துடன் சோழ அரசனின் உதவியை நாடியதாகவும், சோழ அரசனுக்கு ஒரு தேர் அன்பளிப்பாக அனுப்பியதாகவும் கி.பி. 1020இல் வெளியிடப்பட்ட கரந்தைச் செப்போடுகள் கூறுகின்றன. கி.பி. 1050ஆம் ஆண்டைய மண்டிக்கரே கல்வெட்டில் கூடக் கடாரம் சோழர் ஆட்சியின் கீழ் இருந்ததாகக் கூறும் சான்றுகள் உள்ளன. கி.பி. 1068ஆம் ஆண்டு முடியிழந்த இளவரசனை அரியாசனத்தில் அமர்த்துவதற்காக வீரராசேந்திரன் கடாரப் படையெடுப்பை எடுத்ததால் சோழர் அரசு கடாரத்தில் இருந்ததாகத் தெரிகிறது.

1936ஆம் ஆண்டு Paul Pelliot என்ற பிரஞ்சுக்காரர் Encore a propos des voyages de Tcheng Houo என்ற கட்டுரையில் இடைக்காலச் சீன வரலாற்று ஆசிரியர் ஒருவர் சம்பா (தெற்கு வியட்நாம்), சியாம் (தாய்லாந்து) அயோத்திய மன்னர்கள் எல்லோரும் தங்களைச் சோழர்கள் என்று கூறிக் கொண்டதாகக் குறிப்பிடுகிறார்.

தென்கிழக்காசிய நாடுகளிலெல்லாம் சமற்கிருதம், பாலி, பிராகிருத மொழிகள் அரசு மொழிகளாய் இருந்ததால் சோழப் பேரரசும் தன் கீழ் இருந்த பிற அயல்மொழிப் பகுதிகளோடு தொடர்பு கொள்ளச் சமற்கிருதத்தையும் தமிழுடன் பயன்படுத்தியது எனச் சான்றுகள் கிடைக்கின்றன. கம்பராமாயணம், தேவாரம், திருவாசகம், சைவ சித்தாந்தம் போன்றவை தென்கிழக்காசியாவுக்குச் சென்று பரவியதற்கான சான்றுகளும் கிடைக்கின்றன. தென்கிழக்காசிய மொழிகளிலே பல தமிழ்ச்சொற்கள் சோழர்கள் காலத்திலும் கலந்தன. அவைகளுள் சில கீழே கொடுக்கப்படுகின்றன.

| தமிழ் | தாய்மொழி | தமிழ் | தாய்மொழி |
|---|---|---|---|
| தங்கம் | தொங்கம் | துவரை | துவா |
| கப்பல் | கம்பன் | சிற்பம் | சில்பா |
| மாலை | மாலே | நாழிகை | நாளிகா |

| | | | |
|---|---|---|---|
| கிண்டி | கெண்டி | வானரம் | வானர |
| அப்பா | பா | வேளை | வேளா |
| தாத்தா | தா | மல்லி | மல்லி |
| அம்மா | மே | நெய் | நெய்யி |
| குரு | க்ரு | கருணை | கருணா |
| ஆசிரியர் | ஆசான் | விநாடி | விநாடி |
| பாட்டன் | புட்டன் | பிசாசு | பிசாத் |
| பிள்ளை | புத்ரா | கணம் | கணா |
| வீதி | வீதி | விதி | விதி |
| மூக்கு | சாமுக் | கிராம்பு | கிலாம்பு |
| தமிழ் | தாய்மொழி | நெற்றி | நெத்தர் |
| சந்திரன் | சாந் | திருவெம்பாவை | த்ரியம்பாவாய் |
| கை | கை | ரோகம் | ரூகி |
| கால் | கா | தூக்கு | தூ |
| பால் | பன் | பிரான் | பிரா |
| சாதி | சாத் | மேகம் | மேக் |
| குலம் | குல | யோனி | யூனி |
| நங்கை | நங் | சங்கு | சான்க் |
| சிந்தனை | சிந்தனாக்கம் | தானம் | தார்ன் |
| பிரேதம் | பிரீதி | ஆதித்தன் | ஆதித் |
| உலகம் | லூகா | மரியாதை | மாரயர்ட் |
| தாது | தாட் | உலோகம் | லூகா |
| பார்வை | பார்ப் | குரோதம் | குரோதீ |
| சாமி | சாமி (கணவன்) | பார்யாள் | பார்யா |
| கங்கை | கோங்கா | பட்டணம் | பட்டோம் |
| ராஜா | ராஜ் | ராணி | ராணி |
| தருமசத்திரம் | தம்மசாட் | திருப்பாவை | திரிபவாய் |

இதுவரை தமிழ்மொழி பல நாட்டு மொழிகளுடன் தொடர்புடையது என்று பார்த்தோம். இந்தத் தொடர்பு இனத் தொடர்பால் ஏற்பட்டதா அல்லது வாணிகத் தொடர்பால் ஏற்பட்டதா, தமிழர் அந்த நாடுகளிலிருந்து இந்தியா வந்தவரா அல்லது இந்தியாவிலிருந்து அந்த நாடுகளுக்குச் சென்றவரா என்று ஆராய்வோம்.

# 5 திராவிடர்கள் எங்கிருந்து வந்தனர்?

திராவிடர்கள் தென்னிந்தியாவில் அதிகமாகவும், வட இந்தியாவில் மகாராட்டிரம், குஜராத், பஞ்சாப், மத்தியப் பிரதேசம், ஒரிசா, பெங்கால், போபால், காஷ்மீர் போன்ற பகுதிகளிலும், ஓரளவு பலுசிஸ்தானம், ஆப்கானிஸ்தானம், ஈரான் போன்ற நாடுகளிலும் காணப்படுகிறார்கள். திராவிட மொழியான பிராகுயி பலுசிஸ்தானத்தில் பேசப்படுவதால், திராவிடர் வெளி நாடுகளிலிருந்து வடமேற்குக் கணவாய் வழியாக இந்தியாவுக்கு வந்தவர்கள் என்றனர் Sir William Hunter, Mac Alpin போன்றவர்கள். F. Bork என்பவர் 1925இல் இந்த ஒற்றுமைகளை மிக விரைவாக எடுத்துக் கூறியுள்ளார்.

சிலர் திராவிடர்கள் இந்தியாவுக்குக் கிழக்கே உள்ள நாடுகளிலிருந்து வந்தவர்கள் என்றும், அவ்வாறு வந்தவர்களில், ஆஸ்திரேலியப் பழங்குடிகளும், முண்டா மொழி இனத்தினரும் குறிப்பிடத்தக்கவர் என்றும் சொல்கின்றனர். அவர்கள் வருகைக்கு முன் இந்தியாவில் ஆப்பிரிக்க இனத்தினர் இருந்ததாகவும் அந்த ஆப்பிரிக்க இனத்துடன் கலந்த பழங்குடிகளே இன்றைய இருளர், குறும்பர், தோடர், இலங்கையிலுள்ள வேட்டுவர் போன்றவர்கள் என்றும் சொல்லப்படுகிறது.

E.H. Tuttle, E.H. Sengho, N. Lahovary, J. Mayer, G.L. Homburger போன்றவர்கள் திராவிடர்கள் ஆப்பிரிக்கருடன் தொடர்புடையர் என்பர். எகிப்து நாகரிகத்தின் பிறப்பிடம் என்று கருதிய Eliot Smith திராவிடர், எகிப்தியரிடையே உள்ள ஒற்றுமைகளைக் கொண்டு திராவிடர் எகிப்திலிருந்து வந்தவர் என்றார்.

திராவிடர்கள் ஊரால்-ஆல்த்தயிக் மக்கள் இனத்துடன் தொடர்புடையவர்கள் என்றனர் M. Miller, Caldwell, T. Burrow, P. Meile, M. Andronov போன்றவர்கள்.

ஒரு சிலர் திராவிடர் சுமேரிய இனத்தைச் சேர்ந்தவர் என்று கூறுகின்றனர்.

மற்றும் சிலர் திராவிட மொழிகள் மத்திய ஆசியாவில் பேசப்பட்ட ஏலம் என்ற மொழியுடன் தொடர்புடையதாக

இருப்பதால், திராவிடர்கள் அந்த நாடுகளிலிருநது, குறிப்பாக ஏலம் என்ற நாட்டிலிருந்து மிகப் பழங்காலத்திலேயே இந்தியாவுக்கு வந்தவர்கள் என்பர். இவைகளில் எது உண்மை என்பது பற்றி ஆராய்வோம்.

### 5.1 திராவிடர் மத்திய தரைக் கடல் நாடுகளிலிருந்து வந்தவர்கள்

எமினோ, புரொவ்ன், சட்டர்ஜி, சிலேட்டர், இலாவகோரி போன்ற அறிஞர்கள் திராவிடர்கள் மத்திய தரைக் கடல் நாடுகளிலிருந்து இந்தியாவுக்கு வந்தவர்கள் என்றனர்.

இலாவகோரி, ஸ்பானிய நாட்டு பாஸ்குகள், வட ஆப்பிரிக்க எமெய்டுகள், மேற்கு ஆசிய செமெட்டிகுகள் போன்றவர்களின் முன்னோர்களும், திராவிடரும் ஒரே இனத்தைச் சேர்ந்தவர்கள் என்றார். உடல் அமைப்பு மற்றும் பண்பாடுகளில் திராவிடருக்கும், மத்தியதரைக் கடல் நாட்டு மக்களுக்கும் ஒற்றுமை காணப்படுவதால், திராவிடர் மத்திய தரைக் கடல் நாடுகளிலிருந்து இந்தியா வந்தவர் என்றார்.

புரொவ்ன் (E.Brown),

> மேற்கு ஆசியா, மைத்தன்னி, ஏலமித் மொழிகள் வழங்கிய நாடாக இருப்பதால் திராவிடர்கள் அங்கிருந்து வந்தவர்கள் என்று கொள்வது சரியானதாகப் படுகிறது. ஒரு மொழி தானே வேறொரு நாட்டுக்குச் செல்ல முடியாது. அந்த மொழியைப் பேசும் மக்கள் இந்தியாவில் குடியேறியதால் தான் அந்த மொழி இந்தியாவில் பேசப்படுகிறது. அந்த மக்கள் தான் மூலத் திராவிட மொழியை இந்தியாவுக்குக் கொண்டு வந்திருக்க வேண்டும்.[9]

என்றார்.

கில்பர்ட் ஸ்லேட்டர் என்பவரும்

> திராவிடர்கள் மத்திய தரைக் கடல் இனத்தின் ஒரு கிளை என்பது எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட கொள்கை என்றும்[10] அவ்வாறு இந்தியா வந்த திராவிடர்கள் அந்த இனத்தினின்றும் இன்று மாறுபடுவதற்குக் காரணம் அவர்கள் தற்காலத்தில் இந்திய மலைப் பகுதிகளில் வாழும் பழங்குடிகளுடன் கலந்து விட்டதே.

என்றார்.

திராவிடர்களின் மண்டை மற்றும் உருவ ஒற்றுமைகளைப் பார்க்கும்போது, அவர்கள் மத்தியதரை நாடுகளிலிருந்து தரை வழியாகப் பலுசிஸ்தானம் வந்து அங்குச் சில காலம் தங்கி, பின்னர் இந்தியா வந்ததாகவும், வரும் வழியில் பல மக்களுடன் கலந்ததால் அவர்கள் நிறம் மாறிவிட்டதாகக் குறிப்பிடுகிறார்."

F.J. Richards என்பவர்

மத்திய தரைக் கடல் மக்கள் மற்றும் திராவிடர்கள் இடையே உருவ அமைப்பு, பழக்க வழக்கங்கள் மதச் சடங்குமுறை, மறுபிறப்புக் கொள்கை நாட்டுப்புறப் பாடல்களின் கருத்துக்கள், எழுத்து முறை ஆகியவற்றில் ஒற்றுமை காணப்படுவதால், திராவிடர்கள் மத்திய தரைக் கடல் நாடுகளில் இருந்து வந்தவர்கள்.

என்றார்.

James Hornel என்பவரும் இது போன்ற பல ஒற்றுமைகளைக் காட்டி, திராவிடர்கள் பலுசிஸ்தானம் வழியாக வந்து, சிந்து சமவெளிகளில் தங்கிப் பின்னர்க் கங்கைச் சமவெளிகளில் குடியேறினர் என்றும், இந்தியாவில் வந்த போது பாலினேசிய மக்களுடன் கலந்தனர் என்றும் குறிப்பிடுகிறார். இக்காரணங்களால்தாம் திராவிடர்களின் பழக்க வழக்கங்கள், மத்திய தரை நாட்டு மக்கள் பழக்க வழக்கங்களுடன் ஒத்திருக்கின்றன என்கிறார்.

ஒஜா, அல்லோ போன்ற பேராசிரியர்களும்,

பல இனங்களுக்குப் பிறப்பிடமான இனம் மத்திய தரைக் கடல் பகுதியிலிருந்து கடல் வழியாகவும், ஆறுகள் வழியாகவும் இந்தியக் கடலோரம் மற்றும் சமவெளிப் பகுதிகளுக்கு அப்பாலும் பரவியதாகத் தெரிகிறது.[12]

என்றனர்.

தமிழ் நாட்டு வரலாற்று ஆசிரியரான நீலகண்ட சாஸ்திரியாரும் மத்தியதரைக் கடல் நாட்டு மக்களிடையேயும், திராவிடர்களிடையேயும் பலவிதமான ஒற்றுமைகள் உள்ளதாகக் குறிப்பிடுகிறார். அவ்வொற்றுமைகளாவன:

- சுமேரியக் கோயில்களின் அமைப்பும், தமிழ்நாட்டுக் கோயில்களின் அமைப்பும் ஒரே மாதிரியாக இருக்கின்றன.

- சிரியா, பாலஸ்தீனம், சைப்பிரஸ் போன்ற நாடுகளில் கண்டெடுக்கப்பட்ட இரும்பு, பித்தளையாலான சூலங்கள், சேவல் போன்றவைகள் தமிழ் நாட்டில் முருக வழிபாட்டில் பயன்படுத்தப்படும் சூலம், சேவல் போன்றவைகளுடன் ஒத்திருக்கின்றன.
- ஆதிச்ச நல்லூரில் கண்டெடுக்கப்பட்ட சில பொருள்கள் மத்திய தரைக்கடல் பகுதிகளில் கண்டெடுக்கப்பட்ட பொருள்களைப் போல் இருக்கின்றன.
- சுமேர், பாபிலோனிய ஊர்களின் பெயர்கள் ஊர் என்று முடிகின்றன.

## 5.2 திராவிடர்கள் இந்தியாவின் பழங்குடிகள்

தமிழ் இலக்கியங்கள் தமிழர் லெமுரியாக் கண்டத்திலிருந்து நாவலந் தீவின் தெற்குப் பகுதியில் வந்து குடியேறியவர் என்கின்றன.

மனிதன் முதன் முதலில் தோன்றிய இடம் லெமுரியாக் கண்டம் என்றனர் Slater, V.R. Ramachandira Dhikshitar, Rev. H. Heras போன்ற அறிஞர்கள். அவர்கள் அந்தக் கண்டம் கடலில் மூழ்கிய போது அங்கிருந்த மக்கள் பல நாடுகளிலும் குடியேறியதாகவும், அவ்வாறு குடியேறி அந்தந்த நாட்டு வெப்ப நிலைக்கும், உணவு முறைக்கும் ஏற்றபடி அம்மக்களின் உடல் அமைப்பும், நிறமும் மாறிவிட்டதாகக் கூறுகின்றனர். மத்தியதரை நாடுகளுக்குச் சென்றவர்கள் ஐரோப்பியராகவும், ஆசியாவின் பல பகுதிகளில் குடியேறியவர்கள் துரானியர் அல்லது மங்கோலியர் அல்லது சீத்தியர் ஆகவும் மாறினர் என்பர். இக்காரணங்களாலேயே திராவிட மொழிகளுக்கும், ஆரிய மொழிகளுக்கும், சீத்திய மொழிகளுக்கும் ஒற்றுமைகள் இருக்கின்றன என்பர் இவ்வறிஞர்கள்.

கால்வின் கெபார்ட் என்பவரும் இதே கருத்தையே கொண்டிருக்கிறார். இவர் ஆரிய மொழிகளும், துரேனிய மொழிகளும் ஒரே மொழியிலிருந்தே தோன்றின என்றும், அந்த அடிப்படை மொழி வங்காளக் குடாக்கடல் அருகிலோ அல்லது தென்னிந்திய திராவிடர்களின் முன்னோர்கள் பேசிய ஒரு கிளை மொழியிலிருந்தோ தோன்றியிருக்க வேண்டும் என்கிறார். இவர் ஆரிய மொழிகளும், துரானிய மொழிகளும் பழந்திராவிட மொழிகளின் வெவ்வேறு கிளைமொழிகளிலிருந்து வளர்ந்ததாகவும் கருதுகிறார்.[13]

கிரியர்சன் என்பவரும், திராவிடர் வெளிநாட்டிலிருந்து வரவில்லை என்றும், அவர்கள் இந்நாட்டின் பழங்குடிகளே என்பார்.[14]

தேவநேயப் பாவாணர் என்பவர் The Primary classical language of the world என்ற நூலில் திராவிடர் இந்தியாவின் பழங்குடிகள் என்பதை மொழியியல் மற்றும் தமிழின் பழமை, தமிழ் இலக்கிய வாயிலாக அறியப்படும் உண்மைகளைக் கொண்டு விரிவாக விளக்குகிறார். அவர் கூறும் விளக்கங்களாவன.

கிலேட்டர் என்ற அறிஞர், லெமுரியாக் கண்டம் கடலில் மூழ்குவதற்கு முன்பே தமிழர் தெற்கு வழியாகத் தென்னிந்தியா வந்தவர் என்று கூறியதைச் சுட்டிக்காட்டியிருக்கிறார். அறிஞர்கள் உலகின் முதல் மனிதர் அந்த லெமுரியாக் கண்டத்தில் தோன்றியவர் என்று கூறுவதால், தமிழ் மொழி உலகின் மிகப் பழைய மொழியாக இருக்கலாம் என்று என்னுகிறார்.' குமரி நாட்டில் தமிழ் குறிப்பொலி நிலையில் இருந்த போது பிரிந்த மக்கள் ஆப்பிரிக்கா, தென் கண்டம், அமெரிக்கா முதலிய இடங்கட்கும், அசை நிலையில் பிரிந்த மக்கள் கடாரம் சீனம், வட ஆசியா, ஐரோப்பா முதலிய இடங்கட்கும் சென்றதாகத் தெரிகிறது. அசை நிலையில் பிரிந்த மக்களின் மொழிகளே துரேனிய அல்லது சீத்தியக் குடும்ப மொழிகள் எனப்படும். பால்டிக் கடல் பகுதியில் இருந்த போது துரேனிய குடும்ப மொழிகள் திரிந்து ஆரிய மொழிகள் தோன்றின. பால்டிக்கின் வட பாகங்களில் பின்னிசு என்னும் துரேனியக் மொழி வழங்கியதும், சுவீடிஷ், டேனிஷ் முதலிய மொழிகளில் தமிழ்ச் சொற்கள் இருப்பதும், செர்மானிய மொழியிலுள்ள சில சொற்கள், ஆரிய இலக்கிய மொழிச் சொற்கள் சிலவற்றிற்கு மூலமாயும், தமிழுக்கு நெருக்கமாயிருப்பதாக ஆட்டோ சிரேதர் கூறியிருப்பது' இக் கொள்கைக்குச் சான்றாகும் என்கிறார்.

## 5.3 உண்மையில் இந்தியாவின் பழங்குடிகள் யார்?

முன் பகுதியில் தமிழர் வெளிநாட்டிலிருந்து வந்தவர் என்று சிலரும், இந்தியாவின் பழங்குடிகள் என்று சிலரும் கூறியதாகப் பார்த்தோம். இதில் எது உண்மை என்று தெரிந்து கொள்ளுமுன் இந்தியாவில் மனிதன் எந்தக் காலத்திலிருந்து வசிக்க ஆரம்பித்தான் என்றும், இந்தியப் பழங்குடிகள் யார், அவர்கள் பேசிய மொழிகள் எவை என்பது பற்றியும் ஆராய்வோம்.

உலகில் மனிதன் 20 இலட்சம் ஆண்டுகளுக்கு முன் தோன்றியதாக அறிஞர்கள் கூறுகின்றனர். உலகில் மிகப் பழமையான கண்டம் ஐரோப்பா என்று சொல்லப்படுகிறது. இங்குத்தான் குறிப்பாகப் பிரான்சின் தெற்குப் பகுதியில் சுமார் 35000 ஆண்டுகளுக்கு முற்பட்ட குகை ஓவியங்கள் காணப்படுகின்றன. இந்தியாவில் உத்தரப் பிரதேசத்தில் குகைச் சித்திரங்கள் கி.மு. 30,000 அளவிலும், மத்தியப் பிரதேசத்தில் பிம்பேத்கா குகைச் சித்திரங்கள் கி.மு. 20,000 அளவிலும்தாம் காணப்படுகின்றன.

ஒரு நாட்டு மக்களின் பழமையைப் பற்றித் தெரிந்து கொள்ளுவதற்கு அந்த நாட்டில் கிடைக்கும் பழங்கால மனிதன் விட்டுச் சென்ற பொருள்கள்தாம் துணைபுரிகின்றன. வெப்ப நாடுகளில் மிகப் பழங்கால மனிதனின் எலும்புகள் மிக அரிதாகக் காணப்படுகின்றன. அதனால் அப்பழங்கால மனிதன் விட்டுச் சென்ற கல் மற்றும் உலோக ஆயுதங்கள், பொருள்களைக் கொண்டுதாம் அவன் வாழ்ந்த காலத்தைக் கணிக்க முடியும்.

இந்தியாவில் மனிதன் விட்டுச் சென்ற, கூழாங்கல்லில் செதுக்கிய மிகப் பழைய ஆயுதங்கள் கி.மு. 5,00,000 அளவினதாகத் தெரிகிறது. அதற்கு முன் இந்தியாவில் மனிதன் வசிக்க வில்லை என்று கூற முடியாது. அதற்கு முன் வசித்திருக்கக் கூடும். ஆனால் அந்தக் காலத்துப் பொருள்கள் இதுவரை கிடைக்கவில்லை. சிந்து நதிப் படுகையில் கிடைத்த ஆயுதங்கள் கி.மு. 5,00,000 அளவைக் காட்டுகின்றன. பஞ்சாப்பில் கிடைத்த, கற்களில் செதுக்கிய ஆயுதங்கள் கி.மு. 2,00,000- கி.மு. 1,20,000க்கு இடைப் பட்டவைகளாக இருக்கின்றன. காஷ்மீர் பள்ளத்தாக்கில் குறிப்பாக, சிரிநகர் பகுதிகளில் மனிதன் கற்காலத்தின் இறுதியில் (கி.மு. 35,000 அளவில்) வசித்ததாகத் தெரிகிறது. இந்தியாவின் வடமேற்குப் பகுதியில் (சோஆன் ஆற்றுப் படுகையில்) கிடைத்த கூழாங்கற்களில் செதுக்கிய ஆயுதங்கள் ஒருவிதமாகவும், தென்னாட்டில் (மைசூர், சென்னை பகுதிகளில்) கிடைத்த ஆயுதங்கள் ஒருவிதமாகவும் இருக்கின்றன. இதைக்கொண்டு இந்தியாவில் இருவிதமான மனித இனங்கள் வசித்திருக்கக் கூடும் என்று மனிதநூல் அறிஞர் சந்தேகப் படுகின்றனர்.

இந்தியாவில் மனிதன் 6,00,000 ஆண்டுகளுக்கு முன்னிருந்தே வசித்ததாகத் தெரிகிறது. வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட ஒரு பெண்ணின் மண்டையோட்டை Geological Survey of India என்ற நிறுவனம் 1982இல் மத்தியப் பிரதேசத்தைச் சேர்ந்த

மேற்கு நர்மதைப் பகுதியில் கண்டு பிடித்தது. அம்மண்டையோடு 1100 cc கன அளவு உள்ளதாக இருக்கிறது. அது சுமார் ஆறு இலட்சம் ஆண்டு வயதுடையது என்று கணக்கிடப்படுகிறது. தெற்கு ஆசியாவின் மிகப்பழமையான மண்டையோடு இதுதான் என்று சொல்லப்படுகிறது.

ஜாவா, தெற்கு பீகிங் போன்ற இடங்களில் கண்டெடுக்கப் பட்ட கல் ஆயுதங்களிலிருந்து அவை இந்திய மனிதன் விட்டுச் சென்றவை என்று தெரிய வருகிறது. அதனால் இந்தியாவின் முதல் மனிதர்கள் யார் என்று திட்டவட்டமாகச் சொல்வதற்கில்லை. கிடைத்திருக்கும் பொருள்கள் பெரும்பாலும் புதுக்கற்கால மனிதன் சம்பந்தப்பட்டவையே. சுமார் கி.மு. 40,000 ஆண்டுகளுக்கு முன்பே ஆஸ்திரேலியப் பழங்குடிகள் இந்தியாவில் வந்து குடியேறியதாகத் தெரிகிறது. அதனால்தான் இந்தியாவின் முதல் மனிதர்களை மூல ஆஸ்திரேலிய இனத்தவர் என்று சொல்கிறார்கள். இவர்கள் ஊர்ம் என்ற நான்காம் ஊழியின் போது (வட ஐரோப்பா பனியால் மூடிக்கிடந்த போது) இந்தியா வந்ததாகத் தெரிகிறது. உண்மையில் இவர்கள் ஆஸ்திரேலியப் பழங்குடிகள் அல்லர். அதற்கு முன் கடல் மட்டம் குறைந்திருந்த காலத்தில் (வட ஐரோப்பா பனியால் மூடிக்கிடந்த காலத்தில்) ஆசியாவிலிருந்து ஆஸ்திரேலியாவுக்குச் சென்றவர்களின் சந்ததிகளே.

இந்தியாவின் பழங்குடி மக்களாக நீக்ரோக்கள், முண்டா இனத்தினர், வேடர்கள், மூல ஆஸ்திரேலிய இனத்தினர் போன்றவர்களைக் கூறலாம். நீக்ரோ இனத்தவர்களை, இன்றும் அந்தமான் தீவுகளில் காணலாம்: சின்ன அந்தமானில் ஓங்கு என்னும் இனத்தினர் உள்ளனர். இவர்கள் குள்ளமானவர்கள். இவர்கள் ஆப்பரிக்க இனத் தொடர்புள்ள மக்கள். J.H. Hutton என்பவர் இந்த ஆப்பிரிக்க இனத்தவர்தாம் இந்தியாவின் முதல் பழங்குடிகள் என்பார். ஆனால் இவர்கள் விட்டுச் சென்ற சுவடுகள் இந்தியாவில் அதிகம் காணப்படவில்லை. இவர்கள் பர்மாவிலிருந்து ஊர்ம் என்ற பனி ஊழியின் போது (கி.மு. 8000 அளவில்) அந்தமான் தீவுகளுக்குப் போய்க் குடியேறினர் என்பர் அறிஞர். காரணம் வட ஐரோப்பா பனியால் மூடியிருந்த காலத்தில் கடல் மட்டம் 120 மீட்டர் குறைந்திருந்ததாக இவ்வறிஞர்கள் கூறுவர்.

## மூல ஆஸ்திரேலிய இனத்தினர்

இந்தியப் பழங்குடிகளில் முக்கியமானவர்கள் மூல ஆஸ்திரேலிய இனத்தவர்தாம். இவர்களில் முக்கியமானவர்கள்

இலங்கைத் தீவின் வேடர்கள். இவர்கள் இந்தியாவிலிருந்து இலங்கைக்குக் கி.மு. 10,000க்கு முன்னே குடியேறியவர்கள். அந்தக் காலத்தில் இலங்கை இந்தியாவோடு பாலம் போன்ற ஒரு நிலப்பரப்பால் இணைக்கப் பட்டிருந்தது. S.S. சங்கர் என்பவர் தென்னிந்தியாவில் திருவாங்கூரில் உள்ள உராலி, கணிகர், முதுவர் - கேரளப் பணியர் - ஐதராபாத்தில் உள்ள செஞ்சு, ஜனாதி - கொச்சியில் உள்ள காடர், மலசார் போன்றவர்கள் இலங்கை வேடர்கள் போல் ஆசிய- ஆஸ்திரேலிய இனத்தவரைச் சேர்ந்தவர்கள் என்று குறிப்பிடுகிறார்.

இலங்கைத் தீவின் பூர்வீகக் குடிகளான வேடர்கள், சில ஆண்டுகளாகக் குறையத் தொடங்குகிறார்கள். காரணம் 20ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சிங்களவருடனும், தமிழருடனும் கலந்து விட்டனர். தற்காலத்தில் அவர்கள் மிகக் குறைந்த எண்ணிக்கையில் உள்ளனர். இவர்கள் ஆப்பிரிக்க இனத்துடன் தொடர்புடையவர் அல்லர். ஓமோ சப்பியன் என்ற மனிதனின் தற்கால வாரிசுகள். இந்த வேடர்கள் தற்காலத்தில் சிங்கள மொழி பேசுகின்றனர். ஒரு காலத்தில் மூல ஆஸ்திரேலிய மொழிகளைப் பேசிய இவர்கள், பிற இனத்துடன் அதிகம் கலக்காமல் வாழ்ந்தவர்கள். அதனால் தான் சமீப காலம் வரை அவர்கள் பேச்சுகளில் மூல ஆஸ்திரேலிய மொழிகளின் சொற்கள் கலந்திருந்ததாக, அவர்கள் மொழிகளை ஆராய்ந்த அறிஞர்கள் கூறுகின்றனர்.

இந்தியாவில் வாழும் மூல ஆஸ்திரேலிய இனத்தினர் தென்னிந்தியாவில், தென் திராவிட மொழிகளான, தமிழ், மலையாளம், தெலுங்கு, கன்னடமும், வட இந்தியாவில் கொண்டி மொழியையும் பேசுகின்றனர். மூல ஆஸ்திரேலிய மொழிகளை ஆய்வு செய்த Furer Haimendorf என்பவர், திராவிட மொழிகள் அவர்களின் பூர்வீக மொழிகள் அல்ல வென்றும், அம்மொழி அவர்களுக்குப் பின் வந்த திராவிடர்களின் மொழி என்றும் கூறுகிறார்.

இதுவரை இந்தியாவின் பழங்குடி மக்களான முண்டா மற்றும் மூல ஆஸ்திரேலிய இனத்தினர் திராவிடரின் தொடர்பால் நாளடைவில் தங்களின் மூல ஆஸ்திரேலிய மொழிகளை மறந்து திராவிடரின் மொழிகளைத் தங்கள் தாய்மொழியாகக் கொண்டனர் என்று பார்த்தோம்.

இப்பொழுது இந்தியாவில் நாகரிக வளர்ச்சி எந்தக் காலத்திலிருந்து ஆரம்பிக்கிறது என்பது பற்றி ஆராய்வோம்.

# 6. இந்தியாவில் புதுக் கற்காலம்

மேல் நாட்டு ஆய்வாளர்கள், புதுக் கற்காலம் மொசபொதாமியா, சிரியா, பாலத்தீனம் போன்ற நாடுகளில் கி.மு. 8000த்திலும், தென் துருக்கிமேனியில் கி.மு.6500 அளவிலும் ஆரம்பித்தது. முதலில் கிராமங்கள் தோன்றின. இங்கு வசித்த மக்கள் மண்பாண்டங்கள் செய்யவும், பாய் பின்னவும், கருங்கற்களை அறுக்கவும் அறிந்திருந்தனர். அதற்கு அடுத்த நிலையில் கி.மு. 6500-4000க்கு இடைப்பட்ட காலத்தில் இக்கிராமங்களில் நாகரீக முதிர்ச்சி ஏற்பட்டு மக்கள் உணவுப் பொருள்களை உற்பத்தி செய்யக் கற்றுக் கொண்டார்கள் என்பர். இந்தியாவில் கி.மு. 7000 அளவில் தான் இது போன்ற புதுக்கற்காலக் கிராமங்கள் தோன்றின என்பர் அவ் ஆய்வாளர். இந்தப் பகுதியில் கி.மு. 4000 அளவில்தான் மண்பாண்டங்கள் ஆரம்பிக்கின்றன. இந்தக் கிராமங்களின் மீதுதான் சிந்து வெளி நாகரீகம் தோன்றியது.

பலுசிஸ்தானத்தில் போலன் நதி மீது உள்ள மேர்கார் என்ற இடத்தில் 1970இல் ழான் பிரான்சுவா ழர்ரீகு (Jean Francois Jarrigue) என்ற பிரஞ்சுக்காரர் அகழ்வாராய்ச்சி செய்த போது, அந்த இடத்தில் சுமார் 9000 ஆண்டுகளுக்கு முற்பட்ட, ஒன்றின் மீது ஒன்றாகப் பல கிராமங்கள் இருந்து வந்ததற்கான சுவடுகள் காணப்பட்டன. இங்கு வாழ்ந்த மக்கள், ஆடு, மாடு பன்றிகளை வளர்த்து வந்தது தெரியவந்தது. மேர்கார் என்ற இடத்தில் திமில் உள்ள எருதுகள் இருந்து வந்ததற்கான சுவடுகள் கண்டு பிடிக்கப்பட்டன. இந்தியாவில் இந்த எருதுகள் அதற்கு முன் கிடையா. இந்தியாவின் பழங்குடிகளான நீலகிரி தோடர்கள் எருமைகளைத்தாம் வளர்த்து வந்திருக்கிறார்கள். இந்தத் திமில்உள்ள எருதுகள் இந்தியாவில் கி.மு. 4000 த்திலிருந்துதான் காணப்படுகின்றன. இவ்வித எருதுகள் மேர்கார் என்ற இடத்தில் கி.மு. 6000 த்திலிருந்து காணப்பட்டதால் இவை மேற்கு ஆசிய நாடுகளிலிருந்து இந்தியாவுக்கு வந்த மக்களால் கொண்டு வரப்பட்டவை என்பர் ஆய்வாளர்.

இவ்விதப் புதுக் கற்காலக் கிராமங்கள் மகாராட்டிரத்திலும், மத்திய இந்தியாவிலும் கி.மு. 2000க்கு

முற்பட்ட காலத்தில் இருந்ததாகத் தெரியவில்லை என்பர். ஆனால் தமிழ்நாட்டிலும் கருநாடகத்தின் வடக்கிலும் இவ்விதமான புதுக் கற்காலக் கிராமங்கள் முறையே கி.மு. 2800-2200இல் ஆரம்பிக்கின்றன. ஆல்சின் (F.R. Alchin) தென்னிந்தியாவில் பீமா, கிருஷ்ணா, துங்கபத்ரா நதிகளின் மேல் பகுதிகளில் இவ்விதப் புதுக் கற்கால மக்கள் வசித்த இடங்களைக் குறிப்பிடுகிறார். அக்கிராமங்களில் சாம்பல் குவியல்கள் காணப்படுகின்றன. இந்தச் சாம்பல் குவியல்கள் காலம் சில இடங்களில் கி.மு. 2000த்திலிருந்து ஆரம்பித்து வேறு சில இடங்களில் கி.மு. 750இல் முடிகின்றன. இவ் எருதுகள் சிந்து வெளி கிராமங்களில் கி.மு.4000க்கு முன்பே காணப்பட்டதால், ஆல்ச்சின், புதுக் கற்கால மக்கள் தென்னிந்தியாவிற்குப் பலுசிஸ்தானம், சிந்துவெளிப் பகுதிகளிலிருந்து வந்தவர்கள் என்று கூறுகிறார்

## 6.1 சிந்து வெளி நாகரிகம்

சிந்துவெளி நாகரிகம் கி.மு. 3500இல் ஆரம்பித்து, கி.மு. 1750இல் முடிகிறது. உலக நாகரிகங்களில் முதன்மையானது சுமேரிய நாகரிகம். அதற்கு அடுத்தது எகிப்து நாகரிகம். இச்சிந்து வெளி நாகரிகம் கலிபங்கன் (இராஜஸ்தானத்தில்-பாகிஸ்தானத்துக்கு அருகில் ஆரம்பித்தது) என்னுமிடத்தில் கி.மு. 3500க்கு முன்னரே ஆரம்பித்தது. அரப்பா, மொகஞ்சதாரோ நாகரிகத்துக்கு முந்தியது. இங்குள்ள கட்டடங்கள் நாகரிக வளர்ச்சியின் ஆரம்பத்தைத்தான் குறிப்பிடுகின்றன. ஆனால் மொகஞ்சதரோ, அரப்பா போன்ற இடங்களில் காணப்படும் அழிவுகள் நாகரிகத்தின் முதிர்ச்சியைக் காட்டுகின்றன.

அரப்பாவில் ஒன்றன் கீழ் ஒன்றாக எட்டு அடுக்கான நகரங்களும், மொகஞ்சதோரோவில் ஏழு அடுக்கான நகரங்களும் காணப்பட்டன. அவற்றில் கிடைத்த சின்னங்களால் அந்நாகரிகம் மொசாபொதாமியாவிலுள்ள சுமேர், ஏலம் நாகரிகங்களுடன் தொடர்புடையதென்றும் அறியப்பட்டது. அடுக்குகள் சமகால எல்லை கடந்து இன்னும் கீழே செல்கின்றன. ஆகவே இவ்வகழ்வாராய்ச்சி மூலம் இந்நாகரிகம் எகிப்திய, சுமேரிய நாகரிகங்களை விடப் பழமையானதென்றும், அவற்றைக் காட்டிலும் பல வகை முன்னேற்றங்களை உடையதென்றும் அறிகிறோம். சிந்து வெளியின் நகரமைப்பும், மக்கள் வாழ்க்கைத் திட்டமும், கலைச்சிறப்பும் தற்கால அறிஞர்களைத் திகைப்படையச் செய்கின்றன. வடிநீர் வசதி, சாக்கடை வசதி ஆகிய உடல்நல வாய்ப்புடைய தெருக்கள் காற்றோட்டமும் உடல்நல

வாய்ப்பும் மிக்க வீடு, வீடுதோறும் கிணறு, மலம் கழி விடுதி, குளியல் அறை போன்ற வசதிகளுடன் உள்ளன.

சிந்துவெளி மக்கள் பருத்தி ஆடையைப் பயன்படுத்தினர். சமய வாழ்வு, நாகரிகம், கலை, பண்பாடு, பழக்க வழக்கங்கள் ஆகியவற்றிலும் சிந்துவெளி பெரிதும் தென்னாட்டையும் தமிழகத்தையும் நினைவூட்டுவதாயுள்ளது.

சிந்துவெளி மக்கள் கணிதம், வானநூல், சோதிடக்கலை போன்றவற்றில் சிறந்திருந்தனர் என்று தெரிகிறது.[15]

சிந்துவெளி மக்களுக்கு எழுதத் தெரியும். ஆனால் அவ்வெழுத்துக்களை இது வரை நம்மால் படிக்க முடியவில்லை. பல முத்திரைகளில் எழுத்துக்கள் உள்ளன. அது போன்ற முத்திரைகள் மொசபொதேமியா, சுமேர் போன்ற இடங்களிலும் கண்டெடுக்கப் பட்டதால் இம்மக்கள் மத்திய ஆசிய நாட்டு மக்களுடன் வாணிகத் தொடர்பு கொண்டிருந்தனர் என்று தெரிகிறது. இம்மக்கள் எகிப்தியர் போல் கோயில்கள், பெருங்கட்டடங்கள் கட்டியதாகத் தெரியவில்லை. ஆனால் மதம் பற்றிய கருத்து அவர்களிடையே இருந்து வந்தது என்பது தெரிய வருகிறது. இந்து மதத்திற்கு அடிப்படையான சிவன், இலிங்க வழிபாட்டின் அறிகுறிகள் அவர்களிடையே இருந்து வந்ததாகத் தெரிகின்றது. அரப்பாவில் கிடைத்த பல இலிங்க வடிவங்கள் இதை உறுதி செய்கின்றன. பசுபதி முத்திரை, யோகி உருவில் அமைந்த சிவனைக் குறிப்பது என்பது மார்ஷல் என்ற அறிஞரின் கருத்து.

சிந்துவெளி மக்கள் சிவனையும், தாய்த் தெய்வத்தையும் (சக்தி) வழிபட்டனர். சிந்துவெளி மக்கள் யோகம், தவம் போன்றவற்றின் உயர்வை உணர்ந்திருந்தனர்.

- (Stanley Wolpert) வால்பர்ட் என்ற அறிஞர் An Introduction to India - 1991 என்ற நூலில், சிவன் வழிபாடு வட இந்தியாவைவிடத் தென்னாட்டில்தான் மக்களிடம் முதன்மை பெற்றுள்ளது. தென்னாட்டுத் திராவிட மக்கள் ஆரியர்களுக்கு நெடுங்காலத்துக்கு முன்னரே அங்கு நிலை பெற்று இருந்தமையை[16] இது காட்டுவதாகலாம். தாய்த்தெய்வ வழிபாடும் தென்னாட்டில் தான் மிகுந்து காணப்படுகிறது. பிற்கால இந்தியச் சமூக-சமய அமைப்பின் முதன்மைக் கூறுகள் பலவும் சிந்துவெளி நாகரிகத்தில் காணப்பட்டன என்றும் அவர் கூறுகிறார்.

சிந்துவெளி அகழ்வாராய்ச்சியைச் செய்த சர் ஜான் மார்ஷலும், Ancient India of the Cambridge History of India. pp. 41-44

என்ற நூலில் E.J.Rapson என்பவரும் ....ஆரியர்கள் இவ்விந்திய நாட்டில் குடிபுகு முன்னரே, நாகரிகத்திற் சிறந்தோராய் விளங்கிய திராவிட மக்களே வடநாட்டிலும், தென்னாட்டிலும் அதிக அளவில் இருந்தவர்கள் என்னும் கருத்தினை எடுத்துக் காட்டியிருக்கின்றனர்.

The Cambridge History of Ancient India *(p.109)* என்ற நூலும், மகத நாட்டிலிருந்த தமிழர் பூருக்களைச் சேர்ந்தவர் என்று குறிப்பிடுவதால் ஆரியர் இந்தியா வருவதற்கு முன்னிருந்தே தென்னாட்டு முதல் சிந்துவெளி வரை தமிழர் வாழ்ந்தனர் என்று தெரிய வருகிறது.

இருக்கு வேதத்திற்குப் பல நூற்றாண்டுகள் கழித்து எழுதப்பட்ட அங்குத்தர நிகாயம் என்ற சமண நூலும் (1, 213-4, 252, 256, 260) ஆரியர் வடநாட்டிற் புகுந்து ஆங்காங்குக் குடியேறியபோது அங்கம், மகதம், காசி, கோசலம், உச்சி, மல்லை, சேதி, வங்கம், குரு, பாஞ்சாலம், .மச்சம், சூரசேனம், அச்சகம், அவந்தி, காந்தாரம், காம்போசம் முதலிய 16 நாடுகளில் நாகரிகத்திற் சிறந்து விளங்கிய வேறு மரபினரான தமிழ் வேளிரே அரசு புரிந்தனர் என்று கூறுவதும் கவனிக்கத் தக்கது. இது வரை கூறப்பட்ட மேற்கோள்களிலிருந்து சிந்து வெளி நாகரிகம் திராவிடருடையது என்று தெரிய வருகிறது.

### 6.2 தென்னிந்தியாவில் பெருங்கற்காலம்

சிந்து நதி அடிக்கடி வெள்ளப் பெருக்கெடுத்ததால், சிந்து வெளி நகரங்கள் மண்ணால் மூடப்பட்டுக் கொஞ்சம் கொஞ்சமாக அழிய ஆரம்பித்தன. ''சிந்து வெளித் திராவிடர் கி.மு. 1700 அளவில், அரியானா, பஞ்சாப், குஜராத் பகுதிகளில் குடியேறினர். கி.மு. 1000 அளவில் அவர்கள் தென்னிந்தியாவில் குடியேறினர்'' என்பர் அறிஞர்.

புதுக்கற்கால நாகரிகம் தென்னிந்தியாவில் கி.மு. 1000 அளவில் ஆரம்பித்தது என்பர் ஆய்வாளர். அக்கால மனிதன் சிறு கற்களாலான (microlithic) ஆயுதங்களைக் கைவிட்டு விட்டு, புதிய கடினமான கற்களாலான ஆயுதங்களைச் செய்யக் கற்றுக் கொண்டான். இம்மாதிரியான புதுக்கற்கால ஆயுதங்கள் கருநாடகப் பீடபூமியில் அதிக அளவில் கிடைத்திருக்கின்றன. கோடரி, சுத்தி, கத்திரிக்கோல் மற்றும் மண்பாண்டங்கள் கிடைத்திருக்கின்றன. மண்பாண்டங்கள் மைசூரை அடுத்த பிரம்ம கிரியில் தான் அதிக அளவில் கிடைத்திருக்கின்றன. மிகப் பழைய காலத்து மண்பாண்டங்கள் சிகப்பு, சாம்பல் நிறங்களில்

கோடுகளுடன் காணப்படுகின்றன. சற்றுப் பிற்காலத்தவை கருப்பு அல்லது பழுப்பு நிறத்தவை. இவை தவிரக் குழந்தைகளைப் புதைக்கும் தாழிகளும் கிடைத்திருக்கின்றன. கி.மு. 700 அல்லது கி.மு. 800 அளவிலிருந்துதான் பித்தளை மற்றும் வெண்கல ஆயுதங்கள் ஆரம்பிக்கின்றன. ஆனால் இவ்வித உலோக ஆயுதங்கள் அரப்பா, மொகஞ்சதரோ பகுதிகளில் சில ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே காணப்படுகின்றன. பிரம்மகிரி, கல்லூர், மகாராட்டிரம் போன்ற பகுதிகளில் பித்தளையாலான வாள்கள், கோடரிகள் கிடைத்திருக்கின்றன. இவ்வித உலோக ஆயுதங்கள் மிகக் குறைந்த அளவில்தாம் காணப்படுகின்றன. கற்களாலான ஆயுதங்களே அதிகம் கிடைத்திருக்கின்றன.

தமிழ் நாட்டில், ஆதிச்ச நல்லூரில் இரும்பு ஆயுதங்கள் கி.மு.1000இலிருந்து காணப்படுகின்றன. ஆனால் இரும்பு தற்காலத் துருக்கியில் கி.மு.1800இல் இருந்து காணப்பட்டதாகக் கூறப்படுகிறது. இதைக் கொண்டு சில ஆய்வாளர்கள் திராவிடர்கள் மேற்காசிய நாடுகளிலிருந்து தமிழ்நாட்டிற்கு வந்தவர்கள் என்பர்.

தமிழ்நாட்டில் செங்கல்பட்டு மாவட்டத்தில் பழங்கற்காலத்தவர் வாழ்ந்த இடங்கள் பல அகழ்வாராய்ச்சி செய்யப்பட்டன. கி.மு. 4000 ஆண்டுகளுக்கு முற்பட்ட சிறுத்த கற்கருவிகள் குடியம் அகழாய்விலும், திருத்தங்கல், தி.கல்லுப்பட்டி, திருநெல்வேலி தேரிமேடுகளிலும் கிடைத்துள்ளன.

கி.மு. 2000 முதல் 600 வரையுள்ள இக்காலத்தவர் வாழ்ந்த இடங்கள் குறிப்பாக வட மாவட்டங்களில் பல உண்டு என ஆய்வுகள் காட்டுகின்றன. பய்யம்பள்ளி தைலமலை, முள்ளிக்காடு அப்புக்கல்லு, தேனி, ஒத்தக்கோயில், கொற்கை, பெரியகுளம், செய்துங்க நல்லூர், சாயர்புரம், மோகனூர் மற்றும் சேனங்காடு ஆகிய இடங்களில் புதிய கற்காலத்தவர் வாழ்ந்ததாக ஆய்வுகள் காட்டுகின்றன. கல்செப்புக்காலம் (chalcolithic) மற்றும் புதிய கற்காலத்துக்கும் இடைப்பட்ட காலம் பற்றிய விபரங்கள் மதுரை, கல்லுப்பட்டி அகழாய்வுகள் மூலம் கிடைக்கின்றன. புதிய கற்காலத்தை அடுத்து, பல இடங்களில் இரும்புக்காலப் பண்பாடு தொடர்ந்தது என்பதை அகழாய்வுகள் உறுதி செய்கின்றன.

பெருங்கற்கால இரும்பு யுக மக்கள் கம்பர்மேடு, மல்லப்பாடி, மேல் சாத்தமங்கலம், கொடுமணல், அமிர்தங்கலம், கொற்கை, ஆரோவில், ஆனைமலை, கோரிமேடு, நத்த மேடு, கோவலன் பொட்டல், சானூர், சித்தன்னவாசல், சிறுமுகை,

சூலார், செட்டிப்பாளையம், திருப்பூர், திருவக்கரை, பல்லாவரம், பழனிமலை, பெருமாள் மலை, பேரூர், ஆதிச்சநல்லூர் மற்றும் காவிரிப்பூம்பட்டினம் போன்ற இடங்களில் வாழ்ந்ததாக ஆய்வுகள் அறிவிக்கின்றன.

மேற்கூறிய அகழாய்வுகளிலிருந்து தமிழ்நாட்டில் மனித குலத்தின் வரலாறு பழங்கற்காலத்துடன் துவங்கியது எனலாம். புதிய கற்காலத்தின் ஆரம்பத்தில் வேட்டையாடி நாடோடிகளாய் வாழ்ந்த மனிதர் பயிரிடத் தெரிந்து கொண்டனர். புதிய கற்காலத்தை அடுத்து இரும்பை உருக்கிப் பயன்படுத்தியவர்களின் இரும்பு யுகம் உருவானது. ஆதிச்சநல்லூர் கள ஆய்வில் கண்டெடுக் கப்பட்ட இரும்பு ஆயுதங்கள் சிறு தொழில் வளர்ச்சியைக் காண்பிக்கின்றன. குட்டூர் அகழாய்வில் இரும்புக் கனிமங்களை உருக்கப் பயன்படுத்தப்பட்ட உலைகள் கண்டறியப் பட்டன.

## 6.3 இலங்கையில் பெருங்கற்காலம்

சிரிலங்கா இந்தியாவுடன் 8,00,000 ஆண்டுகளுக்கு முன்பிருந்தே இணைந்திருந்ததாகச் சொல்லப்படுகிறது. கடந்த 7000 ஆண்டுகளாகத்தான் சிரிலங்கா இந்தியாவிலிருந்து பிரிக்கப் பட்டது. அதற்கு முன் மனித நடமாட்டம் சிரிலங்காவிற்கும், தமிழ்நாட்டுக்கும் இடையே சர்வ சாதாரணமாக இருந்தது என்பர் அறிஞர். சிரிலங்கா கடலால் பிரிக்கப்படுவதற்கு முன் தமிழ்நாட்டின் தொடர்ச்சியாகவே கருதப்பட்டது. 1976இல் வெளி வந்த American Journal of Physical Anthropology volume 45 pp-91-100- The legend of prince Vijaya A study of Sinhalese origin என்ற கட்டுரையின்படி சிங்களவர்கள் வட இந்தியர்கள் அல்லர் என்றும் இலங்கையில் குடியேறிய தென்னிந்திய மக்கள், குறிப்பாகத் தமிழ்நாடு, கேரளா போன்ற பிறதேசத்தவர்கள். ஒரு சிலர்தாம் வங்காளத் தொடாபுடையவர்கள் என்றும் தெரிகிறது. 1988இல் வெளி வந்த (Amerrican Journal of Physical Anthropology Vol 75. pp.217-225) DNA அடிப்படையில் செய்யப்பட்ட ஆய்வுப் படியும் இலங்கை மக்களும் தென்னிந்தியாவில் வாழ்ந்தவர்களும் ஒரே இனத்தவர்கள் என்றும் மிகச் சிறிய அளவு மக்கள் வங்காளத்துடன் தொடர்புடையவர்கள் என்றும் தெரிகிறது. 1996இல் Human History என்ற பத்திரிகையில் (எண் 68-vol. no. 5. pp. 707-737) வெளிவந்த DNA ஆய்வுக் கட்டுரையின்படியும், இலங்கையில் வாழும் தமிழர், சிங்களவர்கள் ஆகிய இருவரும் ஒரே இனத்தவர்கள் என்றும், இவர்கள் தென்னிந்தியாவிலிருந்து இலங்கைக்குக் குடிபெயர்ந்தவர்களின் சந்ததியினர் என்றும் தெரிகிறது.

கி.மு. 7,00,000 ஆண்டிலிருந்து சிரிலங்காவில் மனிதன் வசித்திருந்ததாக ஆய்வாளர்கள் அறிவிக்கின்றனர். சிரிலங்காவின் தெற்கில் அம்பலந்தோட்டா அருகில் உள்ள பதிராஜவெலா என்ற இடத்தில் கி.மு. 1,23,000 ஆண்டைய மனிதனின் எச்சம் கண்டுபிடிக்கப்பட்டது. இந்தச் சிரிலங்க மனிதன் நியாந்தெர்த்தால் மனிதனை விட 20,000 ஆண்டுகளுக்கு முன்னரே இங்கு வசித்ததாகத் தெரிகிறது. பதிராஜவெலாவில் கி.மு. 1,25,000 கி.மு. 75,000 ஆண்டுகளுக்கு உட்பட்ட கல்லாயுதங்கள் கிடைத்திருக்கின்றன. எல்லவலா என்ற இடத்தில் கி.மு. 80,000 ஆண்டைய மனித மண்டையோடு ஒன்று கிடைத்தது. அதைத் தவிர வேறு மனித எச்சம் கிடைக்க வில்லை. புலத் சின்கா அருகில் உள்ள பா.கியான், குகையில் 30,500 ஆண்டைய பெண்ணின் எச்சம் கிடைத்திருக்கிறது. இப்பெண் அரிசி, சோளம், உப்பு போன்றவற்றைப் பயன்படுத்தியதாகத் தெரிகிறது. இந்தச் சிரிலங்க மனிதன் தெற்கு ஆசியாவிலேயே முதல் நவீன மனிதன் என்று தெரிகிறது. வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட இந்தச் சிரிலங்க மனிதர்கள் பலங்கோடா மனிதர்கள் என்று சொல்லப் படுகிறார்கள். இந்தப் பலங்கோடா மனிதனே சிரிலங்காவின் மூல மனிதன் என்று அறிஞர் நம்புகின்றனர். இம்மனிதர்கள் கி.மு. 28,500 அளவில் சிரிலங்காவின் எல்லா இடங்களிலும் (மகா எலியா, Horton plain) வரண்ட பிரதேசமான மன்னார்-வில்லிபத்து முதல் சபரகமுலா போன்ற மழைக்காட்டுப் பிரதேசம் வரை வசித்தார்கள். அவர்கள் வாழ்க்கை முறை தற்காலச் சிரிலங்க வேடர், இந்தியக் காடர், மலைப்பண்டாரம், செஞ்சு மக்களின் வாழ்க்கை முறையிலிருந்து வேறுபட்டதல்ல.

பலங்கோடா மனிதனின் சிறு கற்களாலான கார்ஜ் ஆயுதங்கள் படடொம்மா குகையில் கி.மு. 28,000விருந்தும், பெலிலேனா குகையில் கி.மு. 27,000 விருந்தும் கிடைத்தன. இக்கல்லாயுதங்கள் ஐரோப்பாவில் கி.மு. 12,000 அளவிலிருந்து தான் கிடைத்தன. மிக நேர்த்தியான இக்கல்லாயுதங்கள் சிரிலங்காவில் ஐரோப்பாவை விட 16,000 ஆண்டுக்கு முன்பே கிடைத்திருக்கின்றன. இக்கல்லாயுதங்கள் ஆப்பிரிக்காவில் ஜைர், தென்னாப்பிரிக்கா போன்ற இடங்களில் கி.மு. 27,000 அளவிலிருந்து கிடைத்திருக்கின்றன. பெலிலேனா குகையில் உப்பு கடற்கரையிலிருந்து கி.மு. 27,000ஆம் ஆண்டிலிருந்து கொண்டு வரப்பட்டதாகத் தெரிகிறது.

ஆர்ட்டன் சமவெளியில் (Horton Plain) பார்லி, கொள்ளு கி.மு. 15,000-கி.மு.8000 அளவிலிருந்து பயிரிடப்பட்டதாகத்

தெரிகிறது. ஆப்கானித்தானத்தில் கரிமார் அக்-குப்ருக்கிலும் (Aq kupruk) பாகித்தானத்தில் மேர்காரிலும் (Mehrgarh) புதிய கற்கால விவசாயம் கி.மு. 7,000 - 6,000 அளவில் காணப்படுகிறது. வடக்கு இராஜஸ்தானத்தில் கால்நடை வளர்ப்பு கி.மு. 7,000 அளவிலும், தென்னிந்திய நீலகிரி குன்றுகளில் பயிர்களின் விவசாயம் கி.மு. 8,000 அளவிலும் காணப்படுகிறது. சிரிலங்கர்கள் உலக மக்களை விட 7,000 ஆண்டுகளுக்கு முன்பே விவசாயத்தில் ஈடுபட்டிருந்தனர் என்று தெரிகிறது. கி.மு. 15,000 ஆண்டைய பெண்ணின் எச்சங்கள் அம்பிலிப்பிடியா அருகில் உள்ள சூரிய கண்டா என்ற இடத்தில் கண்டுபிடிக்கப்பட்டன. கி.மு. 12,000 அளவில் Maduruoyaவில் உலகின் மிகப் பழைய பாசன தொழில் நுட்பத்தின் அறிகுறிகள் காணப்பட்டன.

Kegalla அருகில் Dorawaka-kanda குகையில் கி.மு. 6,000 ஆண்டைய சிறு கற்களாலான ஆயுதங்களும், மண்பாண்டங்களும் கிடைத்திருக்கின்றன. இங்கு, கி.மு. 5300 ஆண்டைய சிவப்பு மண்பாண்டங்களும், கி.மு. 3100 ஆண்டைய கறுப்பு-சிவப்பு மண்பாண்டங்களும் கிடைத்தன. புதைபொருள் ஆய்வாளர்கள் அனுராதபுரத்தில் தற்கால Mahamevuna Uyanaவில் கி.மு. 9000-6000க்கு இடைப்பட்ட ஒரு பெரிய நகரத்தின் இடிபாடுகளைக் கண்டுபிடித்தனர். புதைபொருள் ஆய்வாளர்கள் கி.மு. 4,000 ஆண்டைய வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட குகை ஒன்றை தம்புல்லாவில் இப்பன் கடுவா என்ற இடத்தில் கண்டுபிடித்தனர். அங்கு மக்கள் விவசாய முறையையும், உலோகத்தைப் பயன்படுத்தும் முறையையும் அறிந்திருந்தற்கான அறிகுறிகளையும் கண்டுபிடித்தனர். சிரிலங்காவில் அட்டங்கல்ல ஓயா என்ற இடத்தில் கி.மு. 3500 ஆண்டைய, 150 பேர் பயணம் செய்யும் கப்பல் ஒன்றும் கண்டு பிடிக்கப்பட்டது. இது சிரிலங்கர்கள் நீண்ட தூரப் பயணத்தில் ஈடுபட்டிருந்ததைக் குறிக்கிறது.

இரணமடு பகுதியில் கி.மு. 26,000க்கு முற்பட்ட சிறு கற்களால் ஆன ஆயுதங்கள் கிடைத்திருக்கின்றன. சிரி லங்காவில் இது வரை கி.மு. 37,000-கி.மு.18,000- கி.மு. 16,000-கி.மு. 6,000 - கி.மு. 4000-கி.மு.3000 ஆண்டைய மனித எச்சங்கள் கிடைத்திருக்கின்றன.

அமெரிக்க ஆய்வாளரான டாக்டர் ஆவ்க்கே (Dane Hawkay) சிரிலங்காவில் பொம்பாரிப்புப் பகுதியில் கிடைத்த எலும்புகள், மற்றும் எச்சங்கள் தமிழ் வேடர்கள் மற்றும் மிகப் பழைய பலங்கொடா குகை மனிதனின் பற்களைவிடச் சிங்களவர் பற்களோடு மிகுந்த ஒற்றுமையைக் காட்டுவதாகக் குறிப்பிடுகிறார். அவர் ஆய்வின்படி சிங்கள மற்றும் கிழக்கு, வடகிழக்கு

இந்தியாவின் ஆஸ்திரேலிய-ஆசிய மக்களின் பற்களில் அதிக ஒற்றுமை காணப்படுகிறது. இது அவர்கள் ஒரே இனத்தைச் சேர்ந்தவர்கள் என்பதைக் காட்டுகின்றது என்கிறார். ஆவ்க்கேயின் ஆய்வு, திராவிடர்கள் சிந்துவெளி மக்களிலிருந்து தோன்றியவர்கள் என்ற கருத்தையும் தகர்க்கிறது. ஆவ்க்கேயின் ஆய்வுப்படி , சிந்துவெளி மக்களும், கிழக்கு இந்திய, ஆஸ்திரேலிய-ஆசிய மக்களும் பற்களில் அதிக ஒற்றுமையைச் சிரிலங்கா சிங்களவருடன் காட்டுகின்றனர். சிங்களத் தமிழர் மற்றும் இந்தியத் தீபகற்பத் திராவிடர், தென்கிழக்கு ஆசிய, ஆஸ்திரேலிய சமீபத்துக் கிழக்கு நாட்டு மக்களை விட, அயல் நாட்டு வியாபாரத்தில் ஈடுபட்டிருந்த அரப்பா மக்களின் பற்கள் அமைப்பிலும் கி.மு. 2000க்கு முற்பட்ட எகிப்திய, நூபியரின் பற்களின் அமைப்பிலும் அதிக ஒற்றுமை இருப்பதாகவும் ஆவ்க்கே குறிப்பிடுகிறார். கிடைத்திருக்கும் மானிடவியல் ஆதாரங்கள் மூலம் சிந்துவெளி அரப்பா மக்கள் எகிப்திய, நூபிய மக்களுடன் கலந்ததால் அவர்களின் உடற்கூறிலும், பற்களின் அமைப்பிலும் மாற்றங்கள் ஏற்பட்டதாகக் கூறுகிறார். மேலும் எகிப்தியர்கள் தெற்கு சகாரா ஆப்பிரிக்க மக்களிடையே பற்களில் குறைந்த ஒற்றுமைகளையே காணமுடிகிறது என்கிறார். சமீபத்துக் கண்டுபிடிப்புகள் மூலம் நவீன மனிதன் தெற்கு, தென்கிழக்கு ஆசியாவில் தோன்றினான் என்பதை உடற்கூறும் கூறுவதாகச் சொல்கிறார். சிரிலங்காவில் கிடைத்த மனிதனின் மிகப் பழைய எச்சங்கள் மூலம் (கி.மு. 40,000-35,000) ஆசிய மனிதன் சிரிலங்காவின் Fa-hien-Lena குகையிலும், போர்னெயோ Niah குகையிலும் தோன்றினான் என்பதை உறுதிப்படுத்துவதாகக் கூறுகிறார்.

1980-1983இல் அமெரிக்கக் குழு ஒன்று இலங்கையில் அகழ்வாராய்ச்சி செய்தபோது, அங்குப் பல இடங்களில் பெருங்கற்கால மக்களின் சிறு கற்களாலான ஆயுதங்கள் கிடைத்தன. அவ்வாயுதங்களைச் சி-14 முறையில் பரிசோதித்த போது அவை கி.மு. 29,000 ஆண்டுக் காலத்தனவாகத் தெரியவந்தன. இவைகளை வேறு முறையிலும் பரிசோதித்துப் பார்த்தபோது -வதே கால அளவைக் காட்டின. திருநெல்வேலி அருகில் கிடை-தத ஆயுதங்களை இதே முறையில் பரிசோதித்துப் பார்த்த போது அவைகள் கி.மு. 32,000 ஆண்டுக் காலத்தனவாக உள்ளன. இதிலிருந்து தென்னிந்தியாவிலிருந்து தான் மனிதன் இலங்கைக்குக் குடியேறினான் என்று தெரிய வருகிறது.

தென்னிந்தியா போல் இலங்கையிலும் கி.மு. 3ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த தமிழ்ப்பிராமி எழுத்துக்களால் ஆன

கல்வெட்டுகள் கிடைத்திருக்கின்றன. இந்தப் பிராமி எழுத்துக்கள் அசோகன் பிராமி எத்துக்களினின்றும் சற்று வேறுபடுகின்றன. இந்தப் பிராமி எழுத்துக் கல்வெட்டுகளிலுள்ள பெயர்கள் சங்க இலக்கியத்தில் காணப்படும் பெயர்களாகவே இருக்கின்றன.

பரமு புட்பரட்ணம் என்னும் இலங்கைத் தமிழர் ''பண்டைய தமிழரும் இலங்கையில் தமிழும்'' என்ற நூலில் பின் வரும் கருத்துக்களைத் தெரிவிக்கிறார்.

> பெருங்கற்காலப் பண்பாட்டுச் சின்னங்கள் காணப்படும் இடங்களிலும், அதன் சுற்று வட்டாரங்களிலுமே பெரும்பாலான பிராமிக் கல்வெட்டுக்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இக்கல் வெட்டுக்களில் பிராகிருதம் குறிப்பாக வடமொழி, திராவிட, ஒஸ்ரிக் மொழிக்குரிய சொற்களோடு தமிழ்மொழிக்குரிய பிராமி எழுத்தும், சங்க இலக்கியத்துடன் தொடர்புபடுத்தக் கூடிய பல தமிழ்ச் சொற்களும் கலந்து காணப் படுகின்றன. இவற்றிலிருந்து பிராமிக் கல்வெட்டுக்கள் தோற்றம் பெற்றதாகக் கருதப்படும். கி.மு.3ஆம் நூற்றாண்டுக்கு முன்னரே பெருங்கற்காலப் பண்பாட்டு மக்களின் ஒரு பிரிவினர் தமிழ் மொழியினை அறிந்திருந்தனர் எனக் கூறலாம். பிராமிக் குகைக் கல்வெட்டுக்கள் காணப்படாத வட இலங்கையில் அதிலும் குறிப்பாகப் பூநகரி வட்டாரத்தில் தமிழ்ப் பிராமிக்கே உரிய எழுத்துக்களுடன் கூடிய பெருங்கற்கால மட்பாண்ட ஓடுகள் பல கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவ்வாறான மட்பாண்ட எழுத்துக்கள் தமிழகத்தில், கொடுமணல், அழகன்குளம், உறையூர், கொற்கை, காவிரிப்பூம்பட்டினம், அரிக்கமேடு போன்ற இடங்களிலும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவை இலங்கைக்கும் தமிழகத்துக்கும் உரிய தனித்துவமான அம்சம் எனலாம். இச்சான்றாதாரங்கள் பெருங்கற்காலப் பண்பாட்டின் முதிர்ச்சி நிலையில் தமிழ் பேச்சு வழக்கிலிருந்ததைக் காட்டுகின்றன எனலாம்.
>
> பிராமி கல்வெட்டுக்களில் ஒஸ்ரிக், திராவிட மற்றும் தமிழ்ச் சொற்களைப் பிராகிருதம் கடன்வாங்கி

வடமொழிக்குரிய சொல்லாக மாற்றம் பெறுவதைக் காணமுடிகிறது. அதேபோல் பிராகிருதத்தி லிருந்தும் தமிழ் பல சொற்களைக் கடன்வாங்கித் தமிழருக்குரிய பெயராக மாற்றம் பெறுவதையும் காணமுடிகிறது. இச்சான்றுகள் சிங்கள மொழி தனியொரு மொழியாகத் தோன்றுவதற்கு முன்னரே தமிழ் வடமொழிக்கலப்பு தொடங்கிவிட்டதைக் காட்டுகின்றன.

பௌத்த மத மொழியான பிராகிருதம் இங்கு ஏற்கெனவே புழக்கத்திலிருந்த மொழிகளுடன் படிப்படியாகக் கலந்ததன் விளைவே காலப்போக்கில் சிங்களம் என்ற தனியொரு மொழி தோன்றக் காரணம் எனலாம்.

இதில் சிங்கள மொழிக்கும் வடமொழிக்கும் இடையே காட்டப்படும் ஒற்றுமை என்பது சொற்செறிவை அடிப்படையாகக் கொண்டது. அச் சிங்கள மொழியில் தமிழ் மயப்படுத்தப்பட்ட வடமொழிச் சொற்கள், வடமொழிமயப் படுத்தப்பட்ட தமிழ்ச்சொற்கள் கலந்துள்ளதையும் சில இடங்களில் சில சொற்கள் இரு மொழிகளுக்கும் பொதுவாக இருந்ததையும் பிற்காலத் தமிழ், சிங்களக் கல்வெட்டுக்கள், இலக்கியங்கள் மூலமாக அறிய முடிகிறது. இதில் தமிழிலிருந்து சிங்கள மொழி பல சொற்களைக் கடன் வாங்கியிருக்கக் கூடிய வரலாற்றுச் சூழ்நிலை, தமிழுக்கு இருக்கவில்லை என்பதைத் தமிழ்மொழியின் தொன்மை பற்றிய கல்வெட்டுச் சான்றுகளில் இருந்து அறியமுடிகிறது.

தமிழகப் பிராமி தமிழ்ப்பிராமி என அழைக்கப்பட, தமிழ், கல்வெட்டு மொழியாக இருந்ததுடன், தமிழ்மொழிக்கே சிறப்பான எழுத்துக்களையும் அது கொண்டிருந்தது. ஆனால் இலங்கைப் பிராமி கல்வெட்டுக்களில் சிங்கள மொழியோ அல்லது அம்மொழிக்குரிய சொற்களோ அல்லது சிங்கள மொழிக்கெனத் தனித்துவமான எழுத்துக்களோ பயன்படுத்தப் படவில்லை.

இலங்கையில் வடபிராமி பயன்படுத்தப் பட்டமைக்கு, பௌத்த மதத்தின் பரவலும் அதன்

குறுகிய கால வளர்ச்சியும் முக்கியக் காரணங்களாகும். பிராகிருதம் பௌத்த மதத்தின் மொழியாக இருந்ததால் அம்மொழிச் சொற்களை எழுத வடபிராமியே–தேவைப்பட்டது. இதைத் தமிழகப் பிராமியில் கூடக் காணமுடிகிறது. ஆனால் இதே காலக்கட்டத்தில் பிராகிருத மொழியை எழுதத் தமிழ்ப்பிராமி முக்கியத் தேவையாக இருந்திருக்காது. அப்படியிருந்தும் பிராமியின் தோற்ற காலத்திலிருந்த இலங்கைப் பிராமிக் கல்வெட்டில் வடபிராமியும், தமிழ்ப்பிராமியும் கலந்து எழுதப்பட்டமை வடபிராமிக்கு முன்பாகவே தமிழ்பிராமி பயன்பாட்டில் இருந்திருக்க வேண்டும் எனக் கூறுவதை உறுதிப்படுத்துவதாக உள்ளது.

இலங்கையில் இதுவரை கிடைத்த அனைத்துக் குகைப்பிராமிக் கல்வெட்டுக்களும் பௌத்த மதம் சம்பந்தமான செய்திகளையே முதன்மையாகக் கொண்டு எழுதப்பட்டுள்ளன. இதனால் அம்மத மொழியான பிராகிருதத்தை எழுத வடபிராமியையே பயன்படுத்த வேண்டியிருந்தது. அப்படியிருந்தும் பிராகிருத மொழியோடு தமிழும் கலக்க நேரிட்டதால் வடபிராமியுடன் தமிழ்ப்பிராமியும் பயன்படுத்த நேரிட்டது. காலப்போக்கில் வடபிராமிக்குப் பழக்கப்பட்ட நிலையில் தமிழ்ப் பிராமியின் தேவை குறைந்திருக்க வாய்ப்புண்டு. ஆயினும் இலங்கையில் பிராமிக் கல்வெட்டுக்கள் பயன்பாட்டிலிருந்த கி.மு. 3க்கும் கி.பி. 5-6ஆம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட காலக் கல்வெட்டுக்களை ஆராய்ந்தால் எல்லாத் தமிழ்ப்பிராமி எழுத்துக்களின் முக்கியத்துவம் குறைந்ததாகத் தெரியவில்லை. உதாரணமாக, தமிழுக்கேயுரிய 'ள' என்ற எழுத்து பிராமி கல்வெட்டுக்கள் பயன்பாட்டிலிருந்த காலம் வரை தொடர்ந்தும் பயன்படுத்தப்பட்டதைக் காணலாம். இதில் காணக் கூடிய இன்னொரு சிறப்பு தொடக்கக் காலத்தில் வடபிராமி கொண்டு எழுதப்பட்ட சில சொற்கள் பிற்காலக் கல்வெட்டுக்களில் தமிழ்ப்பிராமி கொண்டு எழுதப்பட்டதாகும்.

இதற்கு உதாரணமாக ஆரம்பக் காலத்தில் அடி, கடி என எழுதப்பட்ட சொற்கள் பிற்காலத்தில் தமிழ்ப்பிராமியில் அளி, களி என எழுதப்பட்டதைக் குறிப்பிடலாம். அதே வேளை பௌத்த மதத்துடன் அறிமுகமான வடபிராமி எழுத்துக்கள் அனைத்தும் தொடர்ந்தும் அதே முக்கியத்துவத்தை இலங்கைப் பிராமிக் கல்வெட்டுக்களில் பெற்றதாகத் தெரியவில்லை. குறிப்பாகத் தொடக்க காலக் கல்வெட்டுக்களில் வரும் பா (pha), ட (dha), தா (tha), சா (cha), கா (gha) போன்ற எழுத்துக்கள் பிற்காலக் கல்வெட்டுக்களில் மறைந்து போவதைக் காணலாம்.

தமிழ்ப்பிராமியில் வடபிராமிக்குப் பொதுவான பல எழுத்துக்கள் காணப்பட்டாலும் அவற்றுள் பல எழுத்துக்களின் வடிவமைப்பு அசோகன் பிராமியில் இருந்து வேறுபட்டதாக உள்ளது. இலங்கைப் பிராமிக் கல்வெட்டுக்களைப் பொறுத்த வரை அவற்றின் வடிவமைப்பு வடபிராமியை விடத் தமிழ்ப்பிராமி எழுத்துக்களையே பெரிதும் ஒத்திருப்பதைப் பலரும் சுட்டிக்காட்டத் தவறவில்லை. இவ்வொற்றுமை பிராமிக் கல்வெட்டுக்கள் பழக்கத்திலிருந்த காலம் வரை தொடர்ந்திருந்ததைக் காண முடிகிறது. குறிப்பாகத் தமிழில் மா என்ற ஒலிப்பெறுமானத்தைக் கொடுக்கும் எழுத்து தமிழ்ப்பிராமியில் தனித்துவமான வடிவமைப்பைக் கொண்டிருந்தது. இதே ஒலிப்பெறுமானத்துக்குரிய வடபிராமி வடிவம் இலங்கையில் அறிமுகப்படுத்தப் பட்டிருந்தாலும் இலங்கையில் தமிழ்ப் பிராமிக்குரிய வடிவமே பெரும்பாலும் பயன்பாட்டிலிருந்ததை அவதானிக்க முடிகிறது. அதே போல நெடில், குறில் என்பவற்றைக் குறிக்கும் கோடுகளின் வடிவமைப்பு இலங்கைத் தமிழகப் பிராமியில் ஒரே தன்மை கொண்டதாகத் தொடர்ந்தும் இருந்ததை அவதானிக்க முடிகிறது.

தமிழ்ப்பிராமி தொடர்ந்தும் பயன்பாட்டில் இருந்ததென்பதற்குக் காட்டக் கூடிய இன்னொரு முக்கியச் சான்று தொடக்ககாலக்

கல்வெட்டுக்களில் வடபிராமியில் எழுதப்பட்ட சொற்கள், பெயர்கள் பிற்காலக் கல்வெட்டுக்களில் தமிழ்ப் பிராமியில் எழுதப்பட்டிருப்பதாகும். பௌத்த துறவிகள் வாழ்ந்த குகைகள் பொதுவாக லெணே என்ற பிராகிருதச் சொல்லாலேயே அழைக்கப்பட்டன. ஆனால் பிற்காலப் பிராமிக் கல்வெட்டுக்களில் தமிழகப் பிராமிக் கல்வெட்டுக்களில் வருவது போல் பள்ளி என்ற சொல்லால் அழைக்கப்படுகிறது. தமிழ் நாட்டில் தமிழ்க் கல்வெட்டு மொழியாக இருந்த போதும் சில வடமொழிப் பெயர்களை எழுத வடபிராமி எழுத்தே பயன் படுத்தப்பட்டுள்ளது. இதற்கு மாங்குளக் கல்வெட்டில் வரும் ஆஸிரிய என்ற பெயரை உதாரணமாக எடுத்துக் காட்டலாம். ஆனால் இதே பெயர் சமகால இலங்கைப் பிராமிக் கல்வெட்டுக்களில் ஆசிரிய எனத் தமிழ்மயப் படுத்தப்பட்டிருப்பதைக் காணமுடிகிறது. தொடக்கக் காலத்தில் பிராகிருத மொழிக்குரிய சொற்களை எழுத வடபிராமியைப் பயன்படுத்தியவர்கள் அவ்வெழுத்து சமகாலத்தில் பயன் பாட்டிலிருந்தும் காலப்போக்கில் வடபிராமிக்குப் பதிலாகத் தமிழ்ப்பிராமிக்குப் பொதுவான எழுத்துக்களால் அச்சொற்களை எழுதியுள்ளமை மக்களிடையே தமிழ்மொழியும், தமிழ் எழுத்தும் பயன்பாட்டிலிருந்ததே காரணம் எனலாம். இதற்குத் திருகோணமலை மாவட்டத்தில் கிடைத்த வெல்கம் விகாரைக் கல்வெட்டும், வட இலங்கையில் கிடைத்த கி.பி. 4ஆம் நூற்றாண்டுக்குரிய வல்லிபுரப் பொற்சாசனமும் சிறந்த எடுத்துக் காட்டாகும்.

மேலே கூறப்பட்ட பரமு புட்பரட்ணத்தின் மேற்கோளிலிருந்து பிராமி எழுத்து முதலில் தமிழுக்காகப் பயன்படுத்தப்பட்டுப் பின்னர்ப் பிராகிருதத்திற்கு ஏற்றவாறு சில மாறுதல்களைப் பெற்றது என்று தெரிகிறது.

ஆனைக்கோட்டையில் கண்டெடுக்கப்பட்ட உலோகத்தால் ஆன முத்திரை ஒன்றில் பிராமி எழுத்துக்களும், சிந்துவெளி நாகரிகத்தில் காணப்பட்ட குறியீடுகளும் உள்ளன.

அந்தக் குறியீடுகள் தமிழ் நாட்டிலும், இலங்கையில் பிற இடங்களிலும் கண்டுபிடிக்கப்பட்ட மட்பாண்டங்களிலும், காணப்பட்டவை. முதல் வரியிலுள்ள 3 குறியீடுகள் சிந்துவெளி முத்திரைகளிலுள்ளவை போல் இருக்கின்றன.

அப் பிராமி எழுத்துக்கள் மூலம் சிந்துவெளிக் குறியீடுகளை மொழிபெயர்க்கும் வாய்ப்பு கிடைத்திருக்கிறது.

இரண்டாவது வரியில் 3 பிராமி எழுத்துக்களும், ஒரு புள்ளியும் உள்ளன. அவை குறுகிய இடைவெளியில் எழுதப்பட்டிருப்பதால் படிப்பதற்குச் சற்றுச் சிரமமாக இருக்கிறது. அதனால் அதை இரு விதமாகப் படிக்கலாம் என்று இலங்கை இந்திரபாலா சொல்கிறார்.

1. முதல் வாசகம் முதல் எழுத்து கோ - இரண்டாவது எழுத்து வே- மூன்றாவது எழுத்து ட. இந்த டவின் மீது ஒரு புள்ளி தெரிகிறது. அதனால் இதை இருவிதமாகப் படிக்கலாம் என்கிறார்.

2. புள்ளியை ட விற்கு முன் வைத்துப் படித்தால் கோவேந்த என்றும், ட விற்குப் பின் வைத்துப் படித்தால் கோவேடன் என்றும் ஆகிறது. எப்படி படித்தாலும் இந்தச் சொல் ஒரு திராவிடச்சொல் என்பதில் சந்தேகமில்லை. இருவிதமாகப் படித்தாலும் ஒரே பொருளைத் தருகின்றது. கோவேந்தன் என்ற சொல் கோ, வேந்த என்ற இரு சொல்லாகப் பிரிக்கப்படுகிறது. கோ என்ற சொல் தமிழ், மலையாளத்தில் அரசன் என்றாகிறது. பிற திராவிட மொழிகளிலும் அதே பொருளைத் தருகின்றது. வேந்த என்ற சொல்லும் தமிழ், மலையாள வேந்தன் உடன் தொடர்புடையதாக இருக்கிறது. வேந்து என்றாலும் அரசன் என்ற பொருளைத் தருகிறது. இந்த இரண்டு சொற்களும் ஆரம்பக் காலத் தமிழ் இலக்கியங்களில் காணப்படுகின்றன.

3. இரண்டாவது வாசகம் : கோவேடன் என்பதிலுள்ள கோ-வும், வேடன் -உம் அரசனைக் குறிக்கின்றன. வேடன், வேந்தனின் மிகப் பழைய வடிவம். பழந்தமிழில் வேடாளிகர் என்ற சொல் வேடு (வேட) -அன் என்று பிரிக்கப்படுகிறது. இதில் உள்ள -அன் ஆண்பால் ஒருமை விகுதியாகிறது. ஆனைக்கோட்டை முத்திரையில் உள்ள பெயர் பழந்தமிழ்ப் பெயராதலால் (பழைய மலையாளத்திலும் இவ்வாறுதான்) கோவேடன் என்று படிப்பதே பொருத்தம். காரணம் முதல் வாசகமான கோவேந்த என்ற சொல்லில் -அன் என்ற ஆண்பால் ஒருமை விகுதி இல்லை. இருப்பினும் கோவேந்த பிற திராவிட மொழிகளுக்கும், மூலத்தமிழுக்கும் பொருந்துகிறது. கோவேந்தன் என்ற சொல் கோ,

வேந்த என்று 2 சொல்லாகப் பிரிக்கப்படுவதால் வேடன் என்று வாசிப்பதே பொருத்தமாகிறது. காரணம் இதில் பிராமி எழுத்துக்களில் உள்ளது போல் 3 எழுத்துக்கள் மட்டும் இல்லை. -அன் என்ற ஆண்பால் விகுதியும் உண்டு. ஆரம்பக் காலத் தமிழ் - பிராமிக் கல்வெட்டுக்களில் -அன் ஆண்பால் விகுதியாக வருகிறது. மாங்குளம் கல்வெட்டுக்களில் -அன் ஆண்பால் விகுதியாக வருகிறது. மாங்குளம் கல்வெட்டுக்களில் உள்ள ஆசிரியுக்கு-அன், பாண-அன், காதல-அன் போன்ற வடிவங்கள் கோ-வேட-அன் உடன் பொருந்துகின்றன. இது பிராமி எழுத்து வாசகத்துடன் ஒத்து இருப்பதால் கோவேடன் என்று வாசிப்பதே பொருத்தமாக இருக்கிறது.

பிராமி எழுத்துக்களின் ஆரம்பக் காலத்தில் சாதாரண மக்கள் பழைய முறையான சிந்துவெளிக் குறியீடுகளில் தொடர்ந்து எழுதிக் கொண்டிருந்தனர் என்று தெரிகிறது. எது எப்படி இருந்தாலும் ஆனைக்கோட்டை முத்திரையிலுள்ள எழுத்துக்கள், பிராமிக்கு முற்பட்ட தொல்தமிழ் எழுத்துக்கள் என்று தெரிகிறது.

### 6.4 சிந்துவெளிக் குறியீடுகள்

இக்குறியீடுகள் சுமார் கி.மு. 2500 அளவில் தோன்றியிருக்கலாம் என்று நம்பப்படுகிறது. அவைகளில் 35 குறியீடுகள் மூல ஏலமித் குறியீடுகளை ஒத்திருக்கின்றன. இந்த அரப்பா குறியீடுகள் கி.மு. 3000 அளவில் தோன்றிய பிற நாகரிகக் குறியீடுகள் போல் உள்ளன. மூல சுமேரியன் கி.மு. 3300லும், மூல ஏலமித் கி.மு. 2900லும், அரப்பா எழுத்துக்கள் கி.மு. 2500லும் தோன்றியிருக்கலாம் என்று அறிஞர்கள் கருதுகின்றனர்.

சிந்துவெளி எழுத்துக்களில் 419 எழுத்துக் குறிகள் காணப்படுகின்றன. சிந்துவெளி மக்கள் மொழி ஓரசைச் சொற்களையே பெரும்பாலும் கொண்டிருக்கின்றது. ஆதலின் அம்மொழி சமற்கிருதமோ அல்லது செமித்திய மொழியாகவோ இருக்க முடியாது என்று அறிஞர் கருதுகின்றனர். 1960 அளவில் பல அறிஞர்கள் அது திராவிட மொழியைக் குறிக்கும் குறியீடுகள் என்றனர்.

இவ்வெழுத்துக்களை ஆய்வு செய்த ஈராஸ் பாதிரியார் இவை பழந்தமிழ் இலக்கியத்தில் கூறப்படும் சித்திர எழுத்துக்கள் என்றும் இவை திராவிட மொழியினரின் எழுத்துக்கள் என்றும், திராவிட மொழிகளின் முதல் நிலை என்றும் கூறினார்.

அவர், சிந்துவெளி எழுத்துக்களே பிற பண்டை நாகரிக நாட்டு மொழிகட்குத் தாய் மொழியாகும். மொகஞ்

சொதரோவில் வாழ்ந்த மக்களும், தென்னிந்தியத் திராவிடரும் ஓர் இனத்தவரே. அவர்கள் இரு பிரிவினரும் பேசிய மொழி ஒன்றே. சிந்துவெளி மொழி திராவிடம் என்பதில் ஐயம் இல்லை. அது தமிழையே பெரிதும் ஒத்திருக்கிறது என்று உறுதியாகக் கூறலாம் என்றார். (H. Heras's article in the New review, 1936, vol. II, pp.1-16).

அவருக்குப் பிறகு இவ்வெழுத்துக்களை அஸ்கோ பர்போலோ தலைமையில் ஆராய்ந்த பின்லாந்துக் குழுவும்- கி.மு.2000 அளவில் சிந்து வெளி நாகரிகம் கங்கை, யமுனைப் பள்ளத்தாக்கு வரையிலும், இராசஸ்தான், சௌராட்டிரா, குசராத்து (லோத்தல்) வரையிலும் பரவி இருந்ததாலும், இருக்கு வேத காலத்திலிருந்து இந்திய ஆரிய மொழிகளில் திராவிடச் சொற்கள் அதிகரித்துக் கொண்டே போவதாலும், சமற்கிருத மொழியின் தாக்கத்தால் நிலை குலையாமல் இருக்கிற திராவிட மொழி தமிழாக இருப்பதாலும், பழைய தமிழ்மொழி சிந்துவெளி மொழியின் வழித்தோன்றலாக இருக்கலாம் எனக் கொள்வதில் யாதொரு குறையும் இல்லை என்றது.

பல மொழிகள் பேசப்படும் தெற்கு ஆசியாவின் இரண்டாவது சிறந்த இலக்கிய மொழியாகத் தமிழ் இருக்கிறது. திராவிட மொழிகளில் 2000 ஆண்டுகளுக்கு மேலான இலக்கியப் பாரம்பரியத்தை உடைய மொழியாக விளங்குகிறது. அரப்பா நாகரிகம் தெற்கு ஆசியாவின் மிகப் பழமையான மேம்பாடுடைய திராவிட நாகரிகமாக இருப்பதால் அரப்பா மொழி ஏன் தமிழாக இருக்கக் கூடாது என்ற வினாவைக் கமில் சுவலபில் என்ற செக்கோஸ்லோவாக்கிய தமிழறிஞர் எழுப்புகிறார்.

மதிவாணன் என்பவர் Indus script dravidian என்ற நூலில் சிந்துவெளி நாகரிக முத்திரைச் சொற்கள் 3000க்கு மேற்பட்டவைகளைத் தொல்தமிழ் பெயர்களாகப் படித்திருக்கிறார். சாத்தன், மாசாத்தன், சானன், வங்கன், நத்தத்தன், நந்தன், ஓமன், சாமன், அனங்கன், ஒளியன், சேயன், அய்யன், கோ போன்றவை அவர் படித்த சொற்களில் சில. இவர் குசராத்தில் தோலாவிரா என்ற இடத்தில் கண்டெடுக்கப் பட்ட பலகை ஒன்றில் இருந்த எழுத்துக்களை, நாதன் பண்ணியன் நன் மன்னவன் என்று படித்துள்ளார்.

சிந்துவெளி மொழி திராவிட மொழி என்பதற்குப் பின் வரும் சான்றுகளையும் குறிப்பிடலாம்: பலுசிஸ்தானம், ஈரான், ஆப்கானிஸ்தானம் போன்ற நாடுகளிலும் பிராகுயி என்ற திராவிட மொழி சுமார் 5 இலட்சம் மக்களால் பேசப்படுகிறது. சிந்தி

மொழியிலும் ஏராளமான திராவிட இலக்கணக் கூறுகளும், அடிப்படைச் சொற்களும் இருப்பதாக டாக்டர் பார்சோ என்பவர் தன் Similarities in Sindhi and Dravidian languages *(1996)* என்ற நூலில் குறிப்பிடுகிறார்.

தமிழ் நாட்டில் விழுப்புரம் அருகில் உள்ள கீழ்வாலை என்ற ஊர் பாறை ஓவியங்களுக்கிடையே சிந்துவெளிக் குறியீட்டு எழுத்துக்கள் சில காணப்படுவதாகத் திரு பி.எல்.சாமி தம், தமிழ் நாட்டில் சிந்து வெளி ஓவியம் என்ற நூலில் குறிப்பிடுகிறார். ஒரு பாறையில், படகில் நான்கு பேர் உள்ள ஓவியம் காணப்படுகிறது. அதன் கீழ் உள்ள சிந்துவெளி எழுத்துக்களை மதிவாணன் நாவாய் தேவன் என்று படித்திருக்கிறார். அங்குள்ள எல்லா எழுத்துக்களும் தமிழில் இருப்பதாக அவர் கூறுகிறார்.

ஆந்திராவில் கண்வ மட்டக்கல் என்ற கிராமத்தில் கிடைத்த நான்கு அடி அகலச் சுவர் ஒன்றில் உள்ள சிந்துவெளி எழுத்துக்களை S.K. பாண்டியன் என்பவர் கண்டுபிடித்தார். அவ்வெழுத்துக்களை மதிவாணன் கலிங்க நக்க நந்தி (கலிங்க கிராமத்து நக்கன் மகன் நந்தி) என்று படித்திருக்கிறார்.

யாழ்ப்பாணத்தில் கிடைத்த முத்திரை ஒன்றிலும் கோவேடன் என்று பொறிக்கப்பட்ட சித்திர எழுத்துக்கள் காணப்பட்டதாக ஏற்கெனவே பார்த்தோம்.

இதிலிருந்து சிந்துவெளிச் சித்திர எழுத்துக்கள் ஒரு காலத்தில் இந்தியத் துணைக் கண்டம் முழுதும் புழக்கத்தில் இருந்து வந்ததாகத் தெரிகிறது.

### 6.5 முடிவுரை

உலக நாகரிகங்களில் மிகவும் பழமையானது சுமேரிய நாகரிகம் என்பர் அறிஞர். இந்நாகரிகம் கி.மு. 4000 ஆண்டளவில் தோன்றியது. அதற்கு அடுத்தபடியாகத் தோன்றிய நாகரிகம் எகிப்து நாகரிகம். இது கி.மு. 3200 ஆண்டளவில் தோன்றியதாகக் கருதப்படுகிறது. மூன்றாவதாகத் தோன்றிய ஹரப்பா மொகஞ்சதரோ நாகரிகம் கி.மு. 3100 ஆண்டளவில் தோன்றியது என்பர். சில அறிஞர்கள் இது தான் முதல் நாகரிகம் என்பர். சிந்துவெளி எழுத்தின் காலம் கி.மு. 3500 என்பர்.

நான்காவதாகத் தோன்றிய நாகரிகம் சீன நாகரிகம், இதுவும் 3000 ஆண்டுகளுக்கு முன் தோன்றியதென்பர்.

சில முக்கிய மொழிகளின் பழமை பற்றிய சுருக்கம் கீழே தரப்படுகிறது.

| | |
|---|---|
| சுமேரியமொழி (பட எழுத்து) | கி.மு. 3300 |
| எகிப்து மொழி (ஏரொக்ளி:ப்) | கி.மு. 3200 |
| சிந்துவெளி எழுத்து (பட எழுத்து) | கி.மு. 3500-3000 |
| சீன எழுத்து (ஆரம்பம்) | கி.மு. 2500 |
| கிரேத் தீவின் மினேய் எழுத்து | கி.மு. 2000 |
| ஆப்பு வடிவ எழுத்துக்கள் ஆரம்பம்: | கி.மு. 2000 |
| அராமியன், அரபு, இப்ரு, சிரியா கரோஷ்டி மூல ஃபெனிசியன் எழுத்து | கி.மு. 1600 |
| ஃபெனிசியன் | கி.மு. 1450 |
| சீன எழுத்து (வளராத கியா-வென்) | கி.மு. 1400 |
| பாலஸ்தீன் (பழைய இப்ரு) | கி.மு. 1000 |
| கிரேக்க ஃபெனீசிய எழுத்துக்கள் | கி.மு. 923 |
| இப்ரு எழுத்து | கி.மு. 900 |
| இலத்தீன் எழுத்து | கி.மு. 580 |

மேலே குறிப்பிடப்பட்ட எழுத்துக்களின் பழமையைப் பார்க்கும் போது உலகத்து முதல் எழுத்துக்களின் பிறப்பிடம் சிந்துவெளி என்று தெரிகிறது. இவ் எழுத்துக்களிலிருந்துதான் மேற்காசிய எழுத்துக்கள் தோன்றின. பெனிசிய எழுத்துக்களி லிருந்து ஐரோப்பிய எழுத்துக்கள் வளர்ச்சியடைந்ததாகத் தெரிகிறது.

இன்று உலக மொழிகளில் அதிக மக்களால் பேசப்படும் மொழி ஆங்கிலம், ஸ்பானிசு, பிரஞ்சு மொழிகள். அறிவியல் மொழியாக விளங்குபவை ஜெர்மன் மற்றும் உருசிய மொழிகள். இன்று சிறந்து விளங்கும் இம்மொழிகள், கி.பி. 7ஆம் நூற்றாண்டுக்கு முன் எழுத்து வடிவம் பெறாத மொழிகளாகவே இருந்தன.

பழைய ஆங்கிலத்தின் எழுத்துச் சான்று கி.பி. 9ஆம் நூற்றாண்டில் ஆரம்பிக்கிறது. ஆனால் பழைய அயர்லாந்து மொழியின் கல்வெட்டு ஒன்று கி.பி. 5இல் ஆரம்பிக்கிறது.

மரத்தில் பொறிக்கப்பட்ட மிகப் பழமையான செர்மன் எழுத்துக்கள் ரூனிக் எழுத்தில் எழுதப்பட்டவை கி.பி. 3ஆம் நூற்றாண்டிலும், இலத்தீன் எழுத்துக்களில் எழுதப்பட்டவை கி.பி.8ஆம் நூற்றாண்டின் மத்தியிலும் ஆரம்பிக்கின்றன.

பிரஞ்சு மொழியில் எழுத்துச் சான்று கி.பி. 842இல் ஆரம்பிக்கிறது. இதில் பெரும்பகுதி இலத்தீன் மொழியிலும் சில வரிகளே ரோமான் மொழியிலும், செர்மானிய மொழியிலும் உள்ளன.

பழைய ஸ்லாவிய மொழியில் எழுத்துச் சான்றுகள் கி.பி. 9ஆம் நூற்றாண்டிலும், உருசிய மொழியில் கி.பி. 1056லும் ஆரம்பிக்கிறது.

ஸ்பானிசு மொழியில் கி.பி. 9ஆம் நூற்றாண்டில் ஒரு வழிபாட்டு உரை தோன்றியது.

போர்த்துகீசு மொழியில் கி.பி. 12ஆம் நூற்றாண்டில் தான் எழுத்துச் சான்று தொடங்குகிறது.

இத்தாலியன் மொழி கி.பி. 10ஆம் நூற்றாண்டில் எழுத்து வடிவம் கண்டது.

இந்திய மொழியில் பழமையான மொழி எனப்படும் சமற்கிருதத்தின் எழுத்துச் சான்று கி.மு. 2ஆம் நூற்றாண்டைய ருத்ரதாமன் கல்வெட்டு என்று இந்நூலின் ஆரம்பத்தில் பார்த்தோம்.

இந்தியாவின் பழமையான எழுத்துச்சான்று மாகதி மொழியில் பிராமி எழுத்தில் எழுதப்பட்ட பிப்ரவா எழுத்துக்களே. இவைகள் கி.மு. 5ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சாடி ஒன்றில் பொறிக்கப்பட்டிருக்கின்றன. இதற்கு அடுத்த படியாக, கி.மு. நான்காம் நூற்றாண்டைச் சேர்ந்த சோகரா செப்புத்தகட்டு எழுத்துக்களைக் குறிப்பிடலாம். அசோகர் காலத்துக் கல்வெட்டுகள் கி.மு. மூன்றாம் நூற்றாண்டிலிருந்து கிடைக்கின்றன.

இப்பொழுது தமிழில் எழுத்துச் சான்று எப்பொழுது ஆரம்பிக்கின்றன என்று பார்ப்போம்.

சிந்துவெளி எழுத்துக்களை ஆய்வு செய்த பேராசிரியர் இரா. மதிவாணன் தொல்காப்பியத்தின் காலம் பற்றிப் பின் வரும் கருத்தைத் தெரிவிக்கிறார்.

தொல்காப்பிய நூற்பா ‘மெய்யீறெல்லாம் புள்ளியொடு நிலையல்’ என்கிறது. சிந்துவெளி எழுத்துக்களில் மெய் எழுத்துக்களில் புள்ளி இல்லை. ஆகவே தொல்காப்பியர் சிந்துவெளி முதிர்ச்சிக்காலமான கி.மு. 2600 கி.மு.1900 காலத்தில் வாழ்ந்திருக்க முடியாது. அதற்கு முன்பும் வாழ்ந்திருக்க முடியாது.

தொல்காப்பியம் உயிரும் உடம்புமாக 30 முதல் எழுத்துக்களைக் குறிப்பிடுகிறது. சிந்துவெளி அடிப்படை எழுத்துக்களும் 30ஆக இருக்கின்றன. தொல்காப்பியம் அகரம் இகரம் அடுத்தடுத்து எழுதப்படின் ஐகாரம் ஆகும் என்றும், அகரம் உகரம் அடுத்தடுத்து எழுதப்படின் ஔகாரம் ஆகும் என்றும் கூறுகிறது. இம்முறை சிந்துவெளி எழுத்து முறையிலும் காணப்படுகிறது. சிந்துவெளி எழுத்து முறை தொல்காப்பிய இலக்கணத்திலும் காணப்படுகிறது. தொல்காப்பியத்திற்கு முந்திய நூல் ஐந்திரம். மெய்யெழுத்துக்குப் புள்ளி இடும் வழக்கம் ஐந்திர காலத்தில் தோன்றி இருக்கலாம் என்று அறிஞர்கள் நம்புகின்றனர். ஐந்திரம் மூன்றாம் தமிழ்க்கழகக் காலமான 1900-1700க்கு இடையில் தோன்றியிருக்கலாம். ஐந்திர இலக்கணத்தைப் பின்பற்றியே பிராகிருதத்தில் காதாந்திரமும், பாலியில் கச்சாயணமும், திபேத் தியமொழியில் சன்சுபாவும் இலக்கண நூல்களாக எழுதப் பட்டன என்று அந்நூல் ஆசிரியர்களே தெரிவித்துள்ளனர். ஐந்திரம் இந்திய மொழிகள் அனைத்திற்கும் அடிப்படை இலக்கணமாக இருந்திருக்கிறது.

தொல்காப்பியர் என்ப, என்மனார் என்று பல இடங்களில் கூறுகிறார். ஆனால் ஓரிடத்திலும் அவருக்கு முன் இருந்த இலக்கண ஆசிரியர்களின் பெயரைக் குறிப்பிடாததால் ஐந்திரத்துக்கும், தொல்காப்பியத்திற்கும் ஆயிரம் ஆண்டுகளாவது இடைவெளி இருந்திருந்தால்தான் பல இலக்கண நூல்கள் தோன்றியிருக்கக் கூடும். ஐந்திரம் கி.மு.1900த்தில் எழுதப்பட்டது என்று கொண்டாலும் தொல்காப்பியம் கி.மு.1000 அளவில் தோன்றியிருக்கலாம். ஏனென்றால் ஐந்திரத்தில் இல்லாத ஒருவனை ஒருவர் என்று உயர்த்திக் கூறும் சொல்லாட்சியை, வழக்கினாகிய உயற்சொற்கிளவி இலக்கண மருங்கின் சொல்லாறல்ல என்கிறார் தொல்காப்பியர். இவ்விதச் சொல்லாட்சி திராவிட மற்றும் வட இந்திய மொழிகளில் காணப்படாததால் இது ஐந்திரக் காலத்துச் சொல்லாட்சி அன்று என்று தெரிகிறது. ஆதலின் தொல்காப்பியத்தின் மேல் வரம்பு கி.மு.1000க்கு மேல் போகாது.

தொல்காப்பியம் எண்ணுப் பெயர்களைக் குறிப்பிடும் போது, ஐ அம் பல்லென வருஉம் இறுதி அப்பெயரெண்ணினு மாயியல் நிலையும் என்கிறது. நூறாயிரத்துக்கு மேற்பட்ட எண்கள் நெய்தல், குவளை, ஆம்பல், தாமரை, வெள்ளம் எனப்படும். இவை ஐ, அம், பல் என்னும் ஈறுகளைக் கொண்டிருக்கின்றன.

தொல்காப்பியர் காலத்தில் கோடி என்னும் எண்ணுப் பெயர் இல்லை. அப்படி கோடி என்ற எண்ணுப் பெயர் இருந்திருந்தால் இ, ஐ, அம், பல் என்று நூற்பாவை மாற்றி எழுதியிருப்பார்.

கோடி என்ற சொல் கலிங்க நாட்டில் பேசப்பட்ட பாலி மொழியில்தான் முதல் முதல் கி.மு. 8ஆம் நூற்றாண்டிலிருந்து காணப்படுகிறது. குவளை என்ற சொல்லே குவடி, கோடி என்று தமிழ் நாட்டுக்கு வந்த வணிகர்களால் திரிக்கப்பட்டுத் தமிழ்நாட்டில் அறிமுகப்படுத்தப்பட்டதாக மதிவாணன் கூறுகிறார். ஆதலின் தொல்காப்பியத்தின் கீழ் வரம்பு கி.மு. 8ஆம் நூற்றாண்டு எனக் கொள்ளலாம் என்கிறார்.

இப்பொழுது மீண்டும் தமிழ்ப் பிராமிக் கல்வெட்டுக்கள் பற்றி ஆராய்வோம்:

டி.என். சுப்பிரமணியன் தென்னிந்தியக் கோயிற் சாசனங்கள், தொகுதி 3-பகுதி 2இல் (South Indian Temple inscriptions vol.3, part-2) பிராமி எழுத்து முதன் முதலில் தமிழுக்காகத் தோற்றுவிக்கப்பட்டது என்றும், பிற்காலத்தில் பிராகிருத மொழி அதனைப் பயன்படுத்திக் கொண்டதாகவும், நாளடைவில் இந்தியா முழுவதும் அது பழக்கத்திற்கு வந்ததாகவும் குறிப்பிடுகிறார். இலங்கையில் பிராகிருதம் ஆரம்பக் காலத்திலிருந்தே (கி.மு. 650) வடபிராமியில் எழுதப்படாமல் தமிழ்ப்பிராமி எழுத்துக்களை அதிகம் உபயோகித்து வந்தது என்று ஏற்கெனவே பார்த்தோம். இது டிஎன். சுப்பிரமணியத்தின் கருத்தை அரண் செய்வதாக உள்ளது.

தமிழ்நாட்டிலும், தமிழ்-பிராமியில் எழுதப்பட்ட அனைத்துக் கல்வெட்டுகளும், பானைப் பொறிப்புகளும், நாணயங்கள் மற்றும் முத்திரைகளும் தமிழிலேயே உள்ளன (அரிக்கமேடு, கருர் முத்திரை மற்றும் பொன்மோதிரத்தில் உள்ள இருமொழி (பிராகிருத-தமிழ்ப் பிராமி) வாசகத்தைத் தவிர்த்து). ஆனால் அதே காலக் கட்டத்துத் தமிழ்நாட்டின் எல்லைப்புற நாடுகளான கருநாடகம், ஆந்திர மாநிலக் கல்வெட்டுகள், பானைப்பொறிப்புகள், முத்திரைகள் பிராகிருத மொழியில் உள்ளன. காரணம் அந்தக் காலத்தில் அவ்விரு நாடுகளும் நந்த-மௌரிய ஆட்சிக்குட்பட்டிருந்தன. அதற்கு அடுத்தபடியாக, சாதவாகனர், கடம்பர், பல்லவர் காலங்களிலும் ஆட்சி மொழியான பிராகிருதத்திலேயே கல்வெட்டுகள் உள்ளன. கன்னடம், தெலுங்கு மொழிகள் பேச்சு மொழிகளாக இருந்தும்,

தமிழ்நாடு அந்தக் காலக் கட்டத்தில் சுதந்திர நாடாக இருந்ததாலும், தமிழே ஆட்சிமொழியாக இருந்ததாலும் தமிழ்மொழி பல மட்டத்து மக்களாலும் எழுத, பேசப்பட்டிருந்ததாலும் தமிழ்ப்பிராமியே பரவலாக உபயோகத்தில் இருந்தது. தமிழர் வாணிகத் தொடர்பு வைத்திருந்த எகிப்து, செங்கடல் கடற்கரைப்பகுதியில் குசெய்ர-அல்-கதிம் என்ற இடத்தில் கண்டெடுக்கப்பட்ட கி.பி. முதல் நூற்றாண்டைய கல்வெட்டில், சாத்தன் என்று தமிழில் எழுதப்பட்டிருக்கிறது (தமிழ்ப் பிராமி எழுத்தில்). இவைகளைத் தொகுத்துப் பார்க்கும்போதும் தமிழ்ப்பிராமி எழுத்து முதன்முதல் தமிழுக்காகவே கண்டுபிடிக்கப்பட்டது என்று தெரிகிறது.

செங்கம் நகருக்கு அருகில் ஆண்டிப்பட்டி என்ற ஊரில் கிடைத்த 120 கி.பி. 2ஆம் நூற்றாண்டுக் காசுகளில் திண்ணன் எதிரான் சேந்தன் என்ற எழுத்துகள் பொறிக்கப்பட்டுள்ளன. அதன் பின்புறம் பிராகிருத எழுத்துக்கள் காணப்படுகின்றன. இவற்றில் எ என்ற குறில் எழுத்தின் உள்ளே புள்ளி உள்ளது. தொல்காப்பியத்தில் எகரக் குறிலுக்குப் புள்ளி இட வேண்டும் என்ற விதி இதில் கடைப்பிடிக்கப்பட்டுள்ளது. இதிலிருந்தும் தமிழுக்காகப் பயன்படுத்திய பிராமி எழுத்துக்களையே பிராகிருத மொழியும் பயன்படுத்தியது என்று தெரிகிறது.

அசோகர் தம் கல்வெட்டுகளைப் பாலி மொழியிலும், பிராகிருத மொழியிலும் எழுதிய போது இவ்வெழுத்தைப் பயன்படுத்தியதாகவும் அவருக்குப் பின் குப்த மன்னர்களும் இவ்வெழுத்தைப் பயன்படுத்தியதாகவும் டி.என். சுப்பிரமணியன் குறிப்பிடுகிறார். ஆனால் இகரத்திலிருந்து ஈகாரத்தை வேறுபடுத்திக் காட்ட மேலும் ஒரு புள்ளியைச் சேர்த்திருப்ப தாகவும், இம்முறை தமிழ்நாட்டில் நெடிலைக் குறிக்கப் பயன்படுத்திப் புள்ளியிடும் முறையைத் தழுவியது என்றும், ஆனால் அவர்கள் குறிலுக்குப் பதிலாக நெடிலுக்குப் புள்ளியிட்டிருக்கின்றனர் என்றும் கூறுகிறார். இது சிந்திக்கத் தக்கதாயிருக்கிறது.

சிரிலங்கா நாட்டில் அநுராதபுரத்தில் அகழ்வாய்வில் கிடைத்த பிராமி எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட பானையோடுகளின் காலத்தை C-14 முறைப்படி பார்த்து, கி.மு.650 எனக் கணித்திருக்கின்றனர் என்று முன்னரே பார்த்தோம். இதிலிருந்து தமிழுக்கு ஒலி எழுத்து முறை கி.மு.650க்கு முற்பட்டே அதாவது பிராமி எழுத்து ஏற்பட்ட காலத்திலிருந்தே இருந்தது

என்று தெரிகிறது. அடுத்து சாதவாகன மன்னர்களின் காசுகளில் ஒரு பக்கம் தமிழும், மறுபக்கம் பிராகிருத மொழியும் காணப்படுவதாலும் இரு மொழிகளிலுமுள்ள வாசகங்கள் பிராமி எழுத்திலேயே உள்ளமை சிந்திக்கத் தக்கது.[17]

பர்னல் என்ற அறிஞர் தமிழ் எழுத்துக்கள் பெனீசிய எழுத்துக்களிலிருந்து தோன்றியவை என்கிறார். பெனீசிய எழுத்துக்கள் கி.மு. 890 அளவில் தோன்றியதாகவும் அவர்களுடன் வாணிகத் தொடர்பு கொண்டிருந்த தமிழ் வணிகர்களே அவ்வெழுத்துக்களைக் கி.மு. 800 அளவில் தமிழொலிக்கு ஏற்றபடி

சற்றுத் திருத்திப் பயன்படுத்தினர் என்றும் குறிப்பிடுகிறார். ஆனால் இவ்வெழுத்துக்கள் வடநாட்டு மொழிகளுக்காகக் கி.மு. 500 அளவில்தான் பிராமி என்ற பெயரில் பயன்படுத்தப் பட்டிருக்கலாம் என்கிறார். இது டி.என். சுப்பிரமணியனின் கருத்தை அரண் செய்வதாக உள்ளது.

Dr. Rhys David என்ற மேனாட்டு அறிஞரும் இந்தியாவில் எழுத்து முதன் முதலில் கி.மு. 7 அல்லது 8ஆம் நூற்றாண்டளவில் திராவிட வணிகர்களால் அறிமுகப் படுத்தப்பட்டு, படிப்படியாக இந்திய மொழிகளுக்கேற்ப அவை சில மாற்றங்களைப் பெற்றதாகக் கூறுகிறார்.

நாகபட்டினம் மாவட்டம் மயிலாடுதுறை வட்டம் செம்பியன் கண்டியூரில் 2006 பிப்ரவரியில் இரண்டு புதிய கற்காலக் கைக்கோடாரிகள் கண்டெடுக்கப்பட்டன. அவற்றுள் ஒன்றில் கி.மு. 2000 கி.மு. 1500 ஆண்டுகளுக்கு இடைப்பட்ட அரப்பா மொகஞ்சதாரோ கால எழுத்துக்கள் பொறிக்கப்பட்டுள்ளன என்று தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை தெரிவித்தது. அதை ஆய்வு செய்த ஐராவதம் மகாதேவன், முதலிரு பொறிப்புகளுக்கு முரு என்றும், அன் என்றும் பொருள் கொள்ளலாம் என்று தெரிவித்தார். இக் கண்டுபிடிப்பின் மூலம் சிந்துவெளி நாகரிகமும் தொல்தமிழர் நாகரிகமும் திராவிட நாகரிகம் என உறுதி செய்யப்பட்டுள்ளது என்று அவர் அறிவித்தார். (மீண்டும் கவிக்கொண்டல், மே 2006). மேலும் அவர், தமிழ்நாட்டுப் புதிய கற்கால மக்கள் அரப்பா குழு மக்களின் திராவிட மொழியைப் பயன்படுத்துபவர் என்று இது அறிவிக்கிறது. இந்தக் கண்டுபிடிப்பு தமிழ்நாட்டுப் புதிய கற்கால மக்கள் தமிழ் பேசினர் என்பதற்கான முதல் சான்று என்றார் அவர்.

அக் கைக்கோடாரியிலுள்ள முதல் குறியீடு முருக்கு என்ற பொருளும், இரண்டாவது குறியீடு அன் என்ற பொருளும்

தருவதாக அவர் தெரிவித்தார். இந்த இரண்டும் சேர்ந்து முருகன் என்றாகிறது என்றார். முருக்கு என்ற முதல் அடையாளம் அரப்பா முத்திரை 48 உடனும், இரண்டாவது அடையாளம் அரப்பா முத்திரை 342 உடனும், மூன்றாவது அடையாளம் அரப்பா முத்திரை 367 உடனும், நான்காவது அடையாளம் அரப்பா முத்திரை 301 உடனும் பொருந்தி மேற்கூறிய பொருள் தருவதாகவும் அவர் கூறினார்.

முருக்கு என்ற குறியீடு ஏற்கெனவே திண்டிவனத்தை அடுத்த சானூரிலும், திருநெல்வேலியை அடுத்த மாங்குடியிலும், கேரளாவில் முசிறியிலும் கிடைத்திருக்கின்றது. முதன் முறையாக முழுப் பொருள் தரும் வாசகம் இதுதான் என்றும் தெரிவித்தார்.

யாழ்ப்பாணத்தில் கிடைத்த முத்திரை ஒன்றிலும் கோவேடன் என்று பொறிக்கப்பட்ட சித்திர எழுத்துக்கள் காணப்பட்டதாக ஏற்கெனவே குறிப்பிடப்பட்டிருக்கிறது.

ஆதலின் தமிழுக்கு எழுத்து கி.மு. 1500க்கு முன்பிருந்தே இருந்தது என்று உறுதியாகிறது.

அமெரிக்க ஆர்டுவார்டு பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த டாக்டர் ரிச்சார்டு மிடோ (Richard Meadow, Director of Harappa archaeological research) என்பவர் அரப்பாவில் கிடைத்த கி.மு. 3500 ஆண்டைய பானை ஓட்டு எழுத்து இதுவரை கிடைத்த எழுத்துக்களைவிடப் பழமையானது என்றும், அவரைப் பொறுத்த வரை சமீபத்தில் தெற்கு எகிப்தில் கிடைத்த கி.மு. 3100ஐச் சேர்ந்த கல்வெட்டு ஒன்றில் உள்ள எழுத்துக்கள் அரப்பா எழுத்தைப் போல் இருப்பதால் எழுத்து முறை அரப்பாவிலிருந்து தான் பிற நாடுகளுக்குப் பரவி இருக்க வேண்டும் என்கிறார். ஆகவே தமிழின் எழுத்துச் சான்று கி.மு.3500 வரை செல்கிறது.

இப்பொழுது தமிழர் தென்னிந்தியாவின் பழங்குடிகள் என்போரின் வாதங்களை மீண்டும் பார்ப்போம்.

மக்லீன் என்பவர் Manual of the administration of the Madras Presidency என்ற நூலில்,

> பொதுவாகத் திராவிடர்கள் வடக்கிலிருந்து கீழே இறங்கி வந்ததற்கான ஆதாரங்கள் எதுவும் இல்லை. தென்னிந்தியாவின் கடைக் கோடியில் வாழும் மக்களும், மேற்குத் தொடர்ச்சி மலைகளால் பிரிக்கப்பட்டிருப்பவர்களும், உலகில் நாகரிகத்தை ஏற்படுத்தியவர்கள் என்று சொல்லிக் கொள்ளும்

> நாட்டவர்களை விட மூத்தவர்கள் என்பதற்கான அறிகுறிகளைக் காட்டுகின்றனர்....தற்கால ஆதாரங்களின்படி அவர்கள் இந்தியாவைச் சேர்ந்தவர்கள், குறிப்பாகத் தென்னிந்தி யாவைச் சேர்ந்தவர்களாக இருக்கலாம்.

என்று கூறுகிறார்.

எக்கேல் என்பவர் The History of creation என்ற நூலில் கடலில் மூழ்கிய லெமுரியாதான் மனிதன் தோன்றிய இடம் என்றும், இங்கிருந்துதான் உலகில் உள்ள பன்னிரண்டு இன மக்களும் குடிபெயர்ந்தனர் என்றும் கூறுகிறார்.

எகிப்திய தொல் வரலாற்றாசிரியரான வில்லியர்ஸ் ஸ்தூவார்ட் (Villiers Stuart) கருத்தும் இவர் கூற்றை அரண் செய்வதாக உள்ளது. அவர் ஐரோப்பியரின் முன்னோருள் பெரும்பாலோர் ஆசியாவிலிருந்து பாபெல் மாந்தெபு (Babel Mandeb) என்னும் நீரிணைப்பு வழியாக ஆப்பிரிக்கக் கரை ஏறி, எத்தியோப்பாவில் தங்கிப் பின்னர் எகிப்து நைல் நதி வெளியில் பரவி, அங்கிருந்து மத்தியதரைக்கடல் கடந்து ஐரோப்பாவில் குடியேறி ஆரியராய் மாறினரென்றும், எகிப்தியக் குறுநில அரசுகளையெல்லாம் முதன் முதலாக ஒன்றாக இணைத்து ஓரரசாட்சி நிறுவிய மெனெசு (Menes) அரசனும் ஆசியாவிலிருந்து வந்தவனென்றும், எகிப்திய மொழி ஐரோப்பிய மொழிகளுக்கெல்லாம் மூலமான அசைநிலை மொழியென்றும், அது சமற்கிருதத்திற்கு 3000 ஆண்டுகட்கு முற்பட்டதென்றும், தன் The funeral tent of an Egyptian queen என்ற நூலில் சுட்டிக் காட்டுகிறார் என்று முன்பே பார்த்தோம்.

L. ஓம்பர்கர் என்ற பிரஞ்சு மொழியியல் வல்லுனர், பேல் மொழியில் திராவிடச் சொற்கள் என்ற கட்டுரையில், தமிழ்ச் சொற்கள் கி.மு. 6000 ஆண்டுகளுக்கு முன்பே எப்படி ஆப்பிரிக்க மொழிகளில் கலந்தன என்பது பற்றி விரிவாகச் சொல்லி யிருப்பதும் இங்குச் சுட்டிக் காட்டப்படுகிறது.

போமான், வெய்டெர்மான் போன்ற அறிஞர்கள் மேற்கு ஆப்பிரிக்காவிலிருந்து அபிசினியா வரை பரவி இருக்கும் நவீனச் சூடான் பண்பாடு, கிழக்கத்தியப் பண்பாட்டால் உருவாகியது என்று கூறுகின்றனர். அவ்விருவரும்,

> அந்நாடுகளில் நிலத்திற்கு எருவிடுதல், வீடுகட்டும் முறை, விவசாயக் கால்வாய்கள் போன்ற பல துறைகளில் திராவிடப்பண்பாடு காணப்படுகிறது.

> இவ்வொற்றுமைகள் திராவிடர்கள் தென்னிந்தியா விலிருந்து எத்தியோப்பியா வழியாக அந்நாகரிகத்தை அவர்கள் சென்றவிடமெல்லாம் பரப்பினர் என்று கூறுகின்றன.

என்பர்.

பொதுவாகத் திராவிடர்கள் தென்னிந்தியாவிலிருந்து, வடக்கு, வடமேற்காக இடம் பெயர்ந்ததற்கான கதைகள் உள்ளன.

ஓயன்னசு என்ற கூட்டத்தினர் அரபிக் கடலைக் கடந்து, பாரசீக வளைகுடா அருகில் உள்ள எரிடுவில் இறங்கி அங்குத் திராவிட நாகரிகத்தை ஒத்த ஒரு நாகரிகத்தை உருவாக்கியதாகச் சொல்லப்படுகிறது. எரிடுவிலிருந்து சென்றவர்களே சுமேரியப் பண்பாட்டையும், கட்டடக் கலையையும் வளரச் செய்ததற்கான கதைகளும் உண்டு.

எகிப்திய நாட்டில் தெறல்பகுறி (Der-el-bahri) என்னும் ஊரில் உள்ள அஷ்தாப் (Hashtop) அரசியின் கோவிற்சுவர்களில் இவ் எகிப்தியர் தென் கடலகத்துக் குமரிப் பகுதியிலிருந்த, பாண்டி (Paunt) நாட்டிலிருந்து சென்று நீல ஆற்றங்கரைக்கண் குடியேறினர் என்பது விளக்கமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது (H.O. Olcott's Lecture on India-past-present and future and Prof. G. Rawlinson's Ancient Egypt. p.181).

ஜேம்ஸ் பர்ரிக்கே (James Barrike) என்பவர் A History of Egypt என்ற நூலில் நைல் நதிப் படுகையைச் சேர்ந்த படாரி என்ற நகரத்தில் எகிப்தின் குடியாட்சி நாகரிகத்திற்கு முற்பட்ட ஒரு குடியிருப்பு 1924-1925இல் கண்டுபிடிக்கப்பட்டதாகக் குறிப்பிடுகிறார். அந்தப் படேரிய இனத்தவரின் குடி வழி வந்தவரான இக்கால எகிப்தியர்கள் இந்தியா மற்றும் இலங்கையின் பழங்குடிகளான திராவிட மற்றும் வேடர்களின் உடலமைப்பைக் கொண்டிருப்பதாகக் குறிப்பிடுவதும் கவனிக்கத்தக்கது.

மிகப்பழைய நாகரிகத்தைச் சேர்ந்த ஜெர்செயர் என்ற இனத்தினரும் நைல் நதி மேல் பகுதியில் வந்து குடியேறியவர். அவர்கள் மட்பாண்டங்களிலும், கப்பல்களிலும் ஆசியச் சின்னங்கள் உள்ளன. ஒத்ரான் என்பவர் (Autran) அந்த ஜெர்சியர்கள் தமிழர் அல்லது மூலத் தமிழர்களிலிருந்து வந்தவர்கள் என்று கூறுகிறார். காரணம் அந்த மட்பாண்டங்கள்,

கப்பல்கள், அதன் கொடிகள் ஆப்பிரிக்காவில் எந்த நாட்டிலும் காணப்படாதவை. அவை இந்தியத் திராவிடரோடு தொடர் புள்ளவையாக உள்ளன என்று கூறுகிறார்.

எட்வர்டு க்ளார்டு (Edward Claurd) என்பவர் தாம் எழுதிய யூதர் வரலாற்றில் மங்கோலியர், பின்னிசு என்னும் இனத்தினர்களுக்கு மூல இனத்தினராக இருந்தவர்கள் ஈழ நாட்டிலிருந்து, பாரசீக வளைகுடாவைச் சூழ்ந்து குடியேறி இருந்தார்கள் என்றும், சுமேரியர் என்னும் இனத்தினருக்கு முன்னும், எகிப்து நாட்டார் தலையெடுப்பதற்கு முன்னும் அவர்கள் நகரங்களையும் இராச்சியங்களையும் உண்டாக்கினார்கள் எனவும், இவ்விராச்சியங்களுக்கு ஊர் எனவும் பெயர் என்பார்.

சமீபத்தில் (18.2.2001 Sunday Leader பத்திரிகையில்) அமெரிக்க மானிடவியல் அறிஞர் டாக்டர் டேன் ஆவ்க்கே ஆய்வின் முடிவின்படி ('Out of Aisa-Dental evidence for affinities and micro evolution of early populations from India/Sri Lanka') இலங்கைத் தீவின் வரலாற்றுக் காலத்து, மற்றும் இரும்பு யுகத்துச் சிங்களவர் பற்களின் அமைப்பும், சிந்துவெளி திராவிடர் பற்களின் அமைப்பும் ஒரே மாதிரியாக உள்ளன என்றும், பெருங்கற்கால நாகரிகம் சிந்து வெளியிலிருந்து இலங்கைக்கு வரவில்லை என்றும் மாறாக இலங்கை-தமிழ்நாட்டிலிருந்து சிந்து வெளிக்குப் பரவியது என்றும் மேலே பார்த்தோம். மேலும் அவர், பற்களின் ஒற்றுமை சிந்து வெளி மக்களிடமிருந்தே எகிப்திய, நூபிய மக்களிடையே கி.மு. 2000க்கு முன்பே பரவியதற்கான சான்றுகள் பல உள்ளன என்றும், தெற்கு சகாரா ஆப்பிரிக்கருக்கும், எகிப்தியருக்கும் இடையே பற்களின் அமைப்பில் மிகக் குறைந்த ஒற்றுமைகளே உள்ளன என்றும் பார்த்தோம்.

சமீபத்து ஆய்வு ஒன்று, நவீன மனிதன் தெற்கு, மற்றும் தென்கிழக்கு ஆசியாவில் தோன்றியதாகச் சொல்கிறது. இதற்கான தடையங்கள் பல சிரிலங்கா பா-இயன் லெனோா குகையிலும் (கி.மு. 34,000 அளவில்), போர்னெயோ நையா குகையிலும் கிடைத்திருப்பதாக டாக்டர் டேன் ஆவ்க்கே குறிப்பிடுகிறார். இக்கருத்து மேலே குறிப்பிட்ட எட்வர்டு க்ளார்டின் கருத்தை அரண் செய்வதாக உள்ளது.

பெனீசியர்களின் மூதாதையர்கள் கி.மு. 2800 அளவில் பாரசீக வளைகுடாப் பகுதியிலிருந்து வந்தவர்கள் என்ற கதையும் நிலவுவதாகக் கி.மு. ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த கிரேக்க

வரலாற்று ஆசிரியரான ஏரொதோத்துக் கூறியிருக்கிறார் (Will Durand, Story of Civilisation, Vol.1, p.292). அதற்கு முன் பெனீசியர்கள் தென்னிந்தியாவிலுள்ள குமரிப் பகுதியிலிருந்து சென்றவர்கள் என்றும், அவர்கள்தாம் தங்கள் பனைப் பாரம்பரியத்தைத் தங்களின் பல குடியேற்றப் பகுதிகளுக்கும் எடுத்துச் சென்றவர் என்றும் குறிப்பிடுகிறார். பலராமன் பனைக்கொடியோன் என்று தமிழ் இலக்கியங்கள் கூறுகின்றன என்பதும் இங்குக் குறிப்பிடத் தக்கது.

கி.பி. 7ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த செயிண்ட் இஜிதோர் என்ற மேல் நாட்டவர், தமக்கு முன் வசித்த கிரேக்க, உரோம நாட்டவர் சொல்லிய கருத்துக்களைச் சுருக்கமாக எத்திமோலோஜியாரியம் (என்சிக்லோப்பேடியா) என்ற நூலில் குறிப்பிடுகிறார். எத்தியோபியர்களைப் பற்றிக் குறிப்பிடும்போது அவர்கள் பழங்காலத்தில் சிந்து நதியிலிருந்து வந்து, எகிப்தில் நைல் நதிக்கும், கடலுக்கும் இடைப்பட்ட பகுதியிலும், தெற்கே பூமத்திய ரேகைப் பகுதிகளிலும் பரவினர்; அதனால் மூன்று நாடுகள் தோன்றின; மேற்கே எஸ்பேரியர்களும் (ஸ்பெயின் நாட்டு மக்கள்), திரிபொலித்தேனில் கராமான்த்தவரும், கிழக்கில் இந்தியரும் தோன்றினர் என்று குறிப்பிடுகிறார். (பழங்காலத்தில் மேல் நாட்டவர் எத்தியோப்பியரை இந்தியர் என்றே அழைப்பது வழக்கம் என்று அவர் குறிப்பிடுகிறார்).

ஐரோப்பாவில் பிரான்சு, ஸ்பெயின் நாட்டுப் பகுதியைச் சேர்ந்த பீரேனே மலைப்பகுதியில் வாழும் பாஸ்கு இனத்தவரிடையே அவர்களின் முன்னோர்கள் கிழக்கு நாடுகளிலிருந்து வந்தவர்கள் என்ற மரபு இருக்கிறது. மேலே கூறப்பட்ட எஸ்பேரியர் பற்றிய குறிப்பு இதை உறுதிப்படுத்துகிறது.

கி.பி. முதல் நூற்றாண்டைச் சேர்ந்த பெரிபுலுஸ் என்ற நூல், எந்தேமோன் (தற்கால ஏடன் நகரம்) மீனா என்ற இந்திய வணிகர்களால் உருவாக்கப்பட்டது என்று குறிப்பிடுகிறது. ஸ்த்ராபோன் என்ற மேனாட்டவர் மீனா என்பதை மினேயன் என்று குறிப்பிடுகிறார். பிளினி என்பவர் மினேயன் என்பவர்கள் மிகப் பழங்காலத்து வணிகர்களென்றும், அவர்களுக்கும் கிரீத் தீவு அரசருக்கும் தொடர்பு இருக்கிறதென்று குறிப்பிடுவதும் கவனிக்கத் தக்கது. ஏஜேஷில் என்ற மத போதகர் அவர்கள் (மினேயன்கள்) பெனிசியர்களின் நகரமான தைர் வரைக்கும் வந்து வாணிகம் செய்ததாகவும் குறிப்பிடுகிறார்.

முதல் மினேயர்களின் காலம் கிறிஸ்துவுக்கு முன் மூவாயிரம் ஆண்டுகள் எனப்படுகிறது. மினாயி என்ற மக்கள்

ஏமன் நாட்டிலும். (தெற்கு அரேபியா), மினியா என்போர் பெயோசிலும், வடக்குக் கிறீஸ் நாட்டிலும் காணப்படுகின்றனர். கிரேக்க வரலாற்றாசிரியரான ஏரொதோத்து கிறீத் தீவிலிருந்து வந்த மிகப் பழைய ஏதேன்சு நகர மக்களின் தலைவன் பெயர் பாண்டியோன் என்று குறிப்பிடுகிறார்.

Legrand F., Tamil loanwords in Greek என்ற நூலில் Oryza, Piperie, Zingiberri, Santalon etc.... போன்ற சொற்கள் கிரேக்கர்கள் இந்தியாவுடன் வாணிகம் செய்தபோது கடனாகப் பெற்ற சொற்கள். ஆனால் palai (palaya), nereids (from nir), per (peria), pagos (paguthi), gune (penn-hennu-gune), aner (Aan), pais (paiyan), gala (palu-halu) etc... போன்ற சொற்கள், கிரேக்க நாட்டில் கிரேக்கர்களுக்கு முன் வசித்த தமிழ்மொழி பேசிய மக்கள் கிரேக்கர்களுடன் கலந்ததால் அவை கிரேக்க மொழியில் நிலைத்தன என்று கூறுவது மேலே கூறியவற்றை அரண் செய்வதாக உள்ளது.

இதுவரை கூறப்பட்ட விபரங்கள் இந்திய வணிகர்கள் மேல் நாடுகளுக்குக் கி.மு. 3000க்கு முன்பே சென்று குடியேறியவர்கள் என்பதை உறுதிப்படுத்துகின்றன.

மேல் நாட்டு வரலாற்றாசிரியர்கள் வடக்கு இத்தாலியில் வாழ்ந்த எத்ருஸ்கர்கள் திராவிடப் பண்பாடுடையவர்கள் என்றும், அப்பண்பாடு கிழக்கு நாடுகளிலிருந்து வந்ததென்றும் கருதுகின்றனர்.

உரோமர்களிடையே அவர்களின் மூதாதையரான என்னியசு கிழக்கிலிருந்து கடல் வழியாக நீந்தி வந்தான் என்ற கதை இருக்கிறது.

அறிஞர் கால்டுவெல் வடமொழிக்குத் தமிழ் முற்பட்டது என்றும், இத்தாலி தேசத்தில் பல நூற்றாண்டுகளுக்கு முன் தமிழர்களுடன் தொடர்புடைய இனத்தினர் இருந்தார்களெனவும் கூறுவார்.

தமிழர் தென்னாட்டிலிருந்து வடநாடு சென்றவர்கள் என்பதைப் பின்வரும் குறிப்புகளும் உறுதி செய்கின்றன.

இந்தியாவின் மத்தியப் பகுதியில் வாழும் குருக் பழங்குடி மக்களிடையே அவர் முன்னோர் தெற்கிலிருந்து வந்தவர் என்ற கதை வழங்கி வருகிறது.

உருசிய இந்திய இயல் வல்லுனரான ஜி. ஜோகிராப் என்பவர் இந்தியா, நேபாளம், இலங்கை மொழிகளை ஆராய்ந்து, திராவிடர் வடக்கிலிருந்து தெற்காக அல்ல, தெற்கிலிருந்து வடக்காகப் பரவினார்கள் என்ற கருத்து வலுப்பெற்று வருகிறது

என்று குறிப்பிடுவதை அலெக்சாந்தர் கோந்த்ரதோவ் தன் மாக்கடல் மர்மங்கள் என்ற நூலில் குறிப்பிடுகிறார்.

பாகவத புராணம், மனு என்ற திராவிட அரசன் பெரு வெள்ளத்தின் போது மக்களைத் தெற்கிலிருந்து வடக்கிற்குக் காப்பாற்றி அழைத்துச் சென்றதாகக் கூறுகிறது.

இருக் வேதம் (10.63.1) மூலம் மனு அரசர்களில் முக்கியமானவர் என்று அறிகிறோம். சதபத பிராமணம் (1.8.1) மனுவும் அவர் குடும்பமும் உலகளவில் ஏற்பட்ட பெரு வெள்ளத்திலிருந்து தப்பித்தவர் என்கிறது. அவ்வெள்ளத்திற்குப் பிறகு உருவான மனித குலம் மனுவின் சந்ததியினர் என்கிறது. மனு கி.மு. 6700 அளவில் வாழ்ந்தவர் எனப்படுகிறது. அவரின் சந்ததியினர் பௌரவர், அயு, நகுஷா, யயாதி எனப்படுகின்றனர். யயாதிக்குத் தேவயானி, சர்மிஸ்தா ஆகிய இரு மனைவியர் இருந்தனர். திராவிட இனத்தைச் சேர்ந்த சர்மிஸ்தாவுக்கு யது, துருவாசு என்ற இரு பிள்ளைகள் பிறந்தனர். யயாதி சந்ததியில் புருஸ், அனுஸ் துருகியஸ் துருவாஸ், யதஸ் என்ற ஐந்து வேதப் பரம்பரைகள் தோன்றின.

புருஸ் என்ற பிரிவினர் வடக்கு, மத்திய இந்தியா, பஞ்சாபில் சரஸ்வதி நதி தீரத்தில் இருக்கு வேதப் பண்பாட்டை வளர்த்தவர் என்று இருக்கு வேதம் (7:96.2) கூறுகிறது. சிரிகாந்த் தலகேரி என்பவரின் நூலான The Aryan Invasion Theory: A Reappraisal (pp.304-5, 367-368) படி: தெற்குக் காஷ்மீரத்தைச் சேர்ந்த அனுஸ் பிரிவினர் பருஷினி ஆற்றங்கரை ஓரங்களில் (தற்கால ரவி நதி தீரத்தில்) இருந்து மேற்கு ஆசியாவுக்குள் பரவிப் பல ஈரானியப் பண்பாட்டை உருவாக்கினர். வடமேற்குப் பகுதியைச் சேர்ந்த துருகிஸ் பிரிவினர் (பஞ்சாப், காஷ்மீர்) ஐரோப்பியா வரை சென்று, மேற்கு இந்தோ-ஐரோப்பியர்களான துருய்து மற்றும் பழைய செல்த்தியராக மாறினர். அவர்களில் ஒரு குழுவினர் வடமேற்காகச் சென்று மூல செருமானிய மொழியை வளர்த்தனர். மற்றொரு குழு தெற்கு வரை பரவி மூல எல்லேனிக் (கிரேக்க) மற்றும் இத்தாலி செல்த்திக் மொழிகளை வளர்த்தது.

விஷ்ணு புராணம் (4.3-18.21) கூடச் சாகா (பழங்கால மத்திய ஆசிய சீத்தியர்), பகலவா (பெர்சியர்), சீனா (சீனர்) போன்றவர்களைக் குறிப்பிடுகிறது. இவர்கள் அனைவரும் வேத தர்மத்தினின்று விலகிய சத்திரியர்கள் என்றும் இவர்கள் சாகரா என்ற அரசன் காலத்தில் இந்தியாவிலிருந்து விரட்டப்பட்டவர்கள் என்றும் கூறுகிறது.

இருக் வேதம், விஷ்ணு, பாகவத புராணங்களில் குறிப்பிடப்படும் இந்திய யயாதி மன்னனால் தோற்றுவிக்கப்பட்ட இந்த ஆரியக் குடிகளே உலகெங்கும் பரவினர். யயாதி ஆரியரின் அசல் மூதாதையும், இந்தோ ஐரோப்பியரின் ஆரம்பப் பரம்பரையும் ஆவார்.

தெற்கு ஐரோப்பாவின் சில பகுதிகளும் பெர்சியாவும் (தற்கால ஈரானும்) வேதப்பண்பாட்டோடு தொடர்பு கொண்டிருந்ததாக மகாபாரதக் கதை மூலமும் உறுதி செய்யப்படுகிறது. மகாபாரதத்தின் ஆதி பருவம் (174.38) புளிந்த மாகாணம் (கிறீசு) பாண்டவர் சகோதரரான பீமசேனன், சகாதேவன் ஆகியோரால் வெல்லப்பட்டதாக விவரிக்கிறது. இவ்வாறாகப் பழங்காலக் கிரேக்கம் இந்தியாவின் பகுதியாகவும் வேத நாகரிகத்தைச் சேர்ந்ததாகவும் இருந்தது. பிற்காலத்தில் கிரேக்கர்கள் வேதப்பண்பாட்டிலிருந்து விலகிவிட்டதால் அவர்கள் மிலேச்சர் வகையில் சேர்க்கப்பட்டனர். மகாபாரதத்தின் சபா பருவமும், பீஷ்மர் பருவமும் சரசுவதி நதி அருகில் இருந்த அபீரா மாகாணத்தைக் குறிப்பிடுகின்றன. பரசுராமருக்குப் பயந்து அபீரர்கள் கருங்கடல்-காஸ்பியன் கடல்களுக்கிடையில் இருக்கும் காக்கேய மலைக் குன்றுகளில் போய் ஒளிந்து கொண்டதாகக் குறிப்பிடுகிறது. (காக்கேயாவைச் சேர்ந்த பழங்கால ஜார்ஜியாவுக்கும் இந்தியாவுக்கும் 4000 ஆண்டுகளாக வணிக மற்றும் பண்பாட்டுத் தொடர்புகள் இருந்ததாகவும் அதனால் ஜார்ஜிய மொழியில் பல சமற்கிருத மற்றும் தமிழ்ச்சொற்கள் இருப்பதாகவும் அறிஞர்கள் கூறுகிறார்கள்). ஆதிபர்வம் 85:34 யவனர்களின் (துருக்கியர்) மாகாணத்தைக் குறிப்பிடுகிறது. அவ் யவனர்கள் யயாதி மகாராசாவின் பிள்ளைகளுள் ஒருவரான துர்வாசுவின் அல்லது யவன மகாராஜாவின் சந்ததியினர். அவர்களும் வேதப் பண்பாட்டிலிருந்து விலகியதால் மிலேச்சர்கள் ஆனார்கள். இவ்வாறாகக் கிரக்க, துருக்கிய மாகாணங்களும் அங்கிருந்து இந்தியா வரையுள்ள நாடுகளும் ஒரு காலத்தில் வேதப் பண்பாட்டைச் சேர்ந்திருந்தன. இவைகளுக்குள் அரசு மற்றும் பண்பாட்டுத் தொடர்புகள் மட்டும் இன்றி மூதாதையர் தொடர்பும் இருந்தது.

சில வேதகால ஆரிய இனங்கள் மேற்கு நாடுகளில் பரவியதாக Macdonnel என்ற அறிஞரும் குறிப்பிடுகிறார். (Macdonnel, op.cit. 1927, p.805).

வேதகால ஆரியர் பற்றிய குறிப்புகள் மைத்தன்னி (தற்காலச் சிரியா), மற்றும் எகிப்து கல்வெட்டுகளில்

காணப்படுவதாக ஆய்வாளர்கள் பலரும் குறிப்பிடுகின்றனர். அக்குறிப்புகள்படி கி.மு. 1600 அளவில் இந்தோ ஆரிய மன்னர்கள் சிலர் அப்பகுதியை ஆண்டதாகத் தெரிகிறது. அதனால் அக்கல்வெட்டுகளில் இந்தோ ஆரியச் சொற்கள், மற்றும் கடவுளர், மன்னர்கள் பெயர்கள், பல இருப்பதையும் அவர்கள் எடுத்துக் காட்டியிருக்கின்றனர். இது எப்படி ஏற்பட்டது என்று பார்ப்போம்.

கி.மு. 1900 அளவில் வடமேற்கு இந்தியாவில் இருந்த சரஸ்வதி நதி நிலநடுக்கம் காரணமாக வறண்டு விட்டதால், அங்கிருந்த மக்களில் பலரும் சில அரச குடும்பத்தினரும் மேற்காசிய நாடுகளில் குடியேறினர். அவ்வாறு குடியேறிய அரச பரம்பரையினர் கேசித்து என்ற பெயரில் கி.மு.1800 அளவில் மேற்கு ஈராக்கில் காணப்பட்டனர். அந்தக் குடுத்பத்தின் சந்ததியினர் கி.மு. 1600 அளவில் பாபிலோனியாவைக் கைப்பற்றி வாசுகானி நகரைத் தலைநகரமாகக் கொண்டு 500 ஆண்டுகள் ஆண்டனர்.

மைத்தன்னியர்கள் என்ற அரச குடும்பத்தினர் கி.மு.1600 லிருந்து 300 ஆண்டுகள் வடக்கு மொசப்பொத்தாமியாவை ஆண்டனர்.

இத்தீத்-மைத்தன்னியர்களுக்குள் ஏற்பட்ட உடன்படிக்கை ஒன்றில் மித்ரா, வருணா, இந்திரா.... அஸ்வினி போன்ற ஆரியக் கடவுள்கள் பெயர்களும் ஏக, தேர, பஞ்ச சப்த, நவ போன்ற சமஸ்கிருத எண்ணுப் பெயர்களும் அரசர்கள் மற்றும் சமற்கிருதப் பெயர்கள் பலவும் காணப்படுகின்றன. அவர்களின் முக்கிய விழா விசுவா என்னும் அயனக் கடைசி விழாவாகும். இந்தியாவிலும் இவ்விழாக் கொண்டாடப்படுகிறது.

மேலே சொல்லப்பட்ட குறிப்புகளிலிருந்து தமிழர் சிந்துவெளியிலிருந்தோ அல்லது வடநாட்டிலிருந்தோ வந்தவர் அல்லர் என்று தெளிவாகிறது. தமிழர் தமிழ்நாட்டிலிருந்து வடநாடு மற்றும் சிந்துவெளிக்கு அப்பாலும் சென்றவர் என்பதே ஏற்றுக் கொள்ளக் கூடியதாக இருக்கிறது.

சமீபத்தில் (2001ஆரம்பத்தில்) குசராத் காம்பத் பகுதியில் கடலடியில் நடைபெற்ற ஆய்வில் கிடைத்த பொருள்கள் மூலம் அந்நாகரிகம் கி.மு. 7500ஐச் சேர்ந்தது என்று ஆரம்பத்தில் சொல்லப்பட்டது. ஆனால் அப்பொருள்களை இங்கிலாந்து மற்றும் செர்மனி நாட்டுப் பல்கலைக் கழகங்களுக்கு அனுப்பிச் செய்யப்பட்ட ஆய்வுகள் அந்நாகரிகம் இன்றைக்கு 13,000 ஆண்டுகளுக்கு முற்பட்டது என்று அறிவிக்கின்றன. அரப்பா

நாகரிகம் மற்றும் உலக முதல் நாகரிகம் என்று கருதப்பட்ட சுமேர் நாகரிகத்தை விட மிகவும் மூத்தது என்று தெரிகிறது. காரணம் காம்பத் வளைகுடாப் பகுதியில் மனிதன் இன்றைக்கு 31,000 ஆண்டுகளுக்கு முன்பே வசித்திருந்ததற்கான தடையங்கள் கிடைத்திருக்கின்றன. அங்கிருந்த மக்கள் மண்பாண்டங்களை இன்றைக்கு 20,000 ஆண்டுகளுக்கு முன்பிருந்தே செய்யக் கற்றிருந்தனர். சுட்ட மண்பாண்டங்கள் கி.மு. 14,800 முதலும், மிக நேர்த்தியான சுட்ட மண்பாண்டங்கள் கி.மு. 11,000 முதலும் ஆரம்பிப்பதாக ஆய்வுகள் தெரிவிக்கின்றன. காம்பே வளைகுடா நகரம் உலகிலேயே மிகப் பழமையானதும் நன்கு திட்டமிடப்பட்ட சுகாதார வசதிகள் நிறைந்த வீடுகள் மற்றும் தெருக்கள் உள்ள நகரமாகவும் தெரிகிறது. இந்த நகரம் இன்றைக்கு 13,000 ஆண்டுகளுக்கு முன்பு இருந்ததாகவும், கி.மு. 5000 அளவில் ஏற்பட்ட கடல் மட்ட உயர்வினால் கடலில் மூழ்கி விட்டதாகவும் அறிஞர்கள் கூறுகின்றனர். இந்த நகரங்களின் அழிவிற்குப் பின்பே அங்கிருந்த மக்கள் சிந்துவெளிக்குச் சென்று அரப்பா, மொகஞ்சதாரோ நகரங்களை உருவாக்கியதாக ஆய்வுகள் அறிவிக்கின்றன.

தமிழ்நாட்டில் நாகபட்டினத்திற்குச் சில மைல்கள் தூரத்தில் பூம்புகார் அருகே 10600 ஆண்டுகளுக்கு முன் கடலில் மூழ்கிய நகரத்தை Indian Naval Hydrographic Department-Archaeological survey of India ஆகிய இரண்டு இந்திய நிறுவனங்களும் 2001இல் செய்த கடலடி ஆய்வின் போது கண்டு பிடித்தன. அந்த இரு நிறுவனங்களின் கருத்துப்படி அந்த நகரம் நவீன நாகரிகத்தின் பிறப்பிடமாக இருக்கலாம். அந்தக் கடலடி ஆய்வு இங்கிலாந்தைச் சேர்ந்த கிரகாம் ஏன்க்கோக் (Graham Hancock) தலைமையில் நடந்தது. அவர் பூம்புகார் அருகே கடலில் மூழ்கிக் கிடக்கும் அந்த நகரம் இன்றைக்கு 5000 ஆண்டுகள் பழமையுடைய சுமேரிய நாகரிகத்தை விடப் பழமையானது என்று நம்புவதாகக் கூறினார். பூம்புகார் அருகில் புதையுண்ட நகரம் இன்றைக்கு 17000-7000 ஆண்டுகளுக்கிடையில் ஏற்பட்ட கடற்கோளின் போது கடலில் மூழ்கியிருக்கலாம் என்ற கருத்தையும் தெரிவித்தார். (ஆதாரம் Submerged city may be older than Mesopotamia-by Utpal Parashar-hindustantimes.com).

கிரகாம் ஏன்க்கோக் சென்னையிலிருந்து 30 மைல் தூரத்தில் உள்ள மாமல்லபுரம் அருகிலும் கடலடி ஆராய்ச்சி செய்தவர். அவர் கருத்துப்படி அங்கே கடலடியில் கண்டுபிடிக்கப்பட்ட 6000 ஆண்டுப் பழமையுடைய நகரம்,

இன்றைக்கு 17,000-7000 ஆண்டுகளுக்கிடையில் ஏற்பட்ட கடல் மட்ட உயர்வின் போது மூழ்கியிருக்கலாம். அவர் மாமல்லபுரம் அருகே கடலடியில் கிடைத்த பொருள்கள் பற்றிய தகவல்களை இங்கிலாந்தில் உள்ள Durham Universityயைச் சேர்ந்த Department of Geological sciencesக்கு அனுப்பினார். அந்தப் பல்கலைக் கழகமும் அவர் கூறியதையே உறுதிப்படுத்தியது. (ஆதாரம்: 1. Deccan Herald August 16-02; 2. Marine archaeology and the study of the past-By Nanditha Krish-newindpress.com).

மேலே கூறப்பட்ட கடலடியில் கண்டுபிடிக்கப்பட்ட காம்பே வளைகுடா, பூம்புகார் மற்றும் மாமல்லபுரம் நகரங்கள், தொன்மையில் அரப்பா, சுமேரிய நாகரிகத்தை விட மூத்ததாக இருப்பதாலும், சிரிலங்காவில் நவீன மனிதனின் எச்சங்கள் கி.மு. 34,000 த்திலிருந்து கிடைத்திருப்பதாலும் சிரிலங்கா, பூம்புகார் பகுதியிலிருந்தே மக்கள் குசராத் சென்று, காம்பே வளைகுடா நகரங்களை உருவாக்கினர் என்றும் தெரிகிறது. அமெரிக்க ஆய்வாளரான டேன் ஆவ்க்கே, நவீன மனிதன் சிரிலங்காவிலும், போர்னியோவிலும் தோன்றியிருக்க வேண்டும் என்று கூறுவதாலும், சிரிலங்கச் சிங்களவர்கள் அரப்பா, கி.மு. 2000க்கு முற்பட்ட எகிப்திய, நூபிய மக்களுடன் கலந்ததால் அம்மக்களின் பற்களில் ஒற்றுமை காணப்படுகிறது என்று கூறுவதாலும், பழந்தமிழ் இலக்கியங்கள் தமிழரின் தாயகம் குமரி நாடு என்பதாலும் சிரிலங்கா, தமிழ் நாட்டிலிருந்தே மக்கள் குசராத், அரப்பா வழியாகச் சுமேரியா, எகிப்து போன்ற நாடுகளுக்குச் சென்று நகர நாகரிகத்தை உருவாக்கினர் என்று தெரிகிறது. இருப்பினும் மனித குலத்தின் வரலாற்றையும், மனிதனின் வளர்ச்சியையும் அடிப்படையாக வைத்துதான் திராவிடர்கள் மற்றும் தமிழர்களின் வரலாற்றை ஆராய வேண்டியிருக்கிறது.

பொதுவாக ஆய்வாளர்கள் மூல மனிதன் ஆப்பிரிக்காவில் தோன்றினான் என்றும், ஓமோ சப்பியன் என்ற நவீன மனிதன் ஆப்பிரிக்காவில் வளர்ச்சி பெற்றுக் கி.மு. இலட்சம் ஆண்டுகள் அளவில் முதலில் ஆப்பிரிக்காவுக்குள் பரவி, பின்னர் அங்கிருந்து கி.மு. 65,000 அளவில் மேற்கு ஆசியா வழியாக ஈரான், இந்தியா, தென்கிழக்கு ஆசிய நாடுகளுக்கும், ஆத்திரேலியாவுக்கும் பின்னர் வட அமெரிக்கா வழியாகத் தென்னமெரிக்காவுக்கும் பரவியதாகக் கூறுகின்றனர். ஆப்பிரிக்க மனிதன் இந்தியாவுக்குள் இரண்டு வழியாக நுழைந்ததாகக் கூறுவர்.

பெரும்பாலான அறிஞர்கள் ஆப்பிரிக்க மனிதன் முதலில் கடலோரமாக, இந்தியா வழியாக ஆஸ்திரேலியா வரை பரவி,

பின்னர் மத்திய சீனா, மியான்மார் (பர்மா) வழியாக இந்தியாவுக்குள் நுழைந்ததாகக் கூறுவர். இந்தியாவுக்குள் முதலில் நுழைந்தவர்கள் ஆஸ்திரேலியப் பழங்குடி மக்களைச் சேர்ந்த வேடர்கள் என்பர். அவர்களுக்குப்பின் பர்மியர்-திபேத்தியரும் வந்ததாகக் கூறுவர். அவர்களை அடுத்து, கி.மு. பத்தாயிரம் அளவில் திராவிடர்கள் ஆப்கானித்தானம், தற்காலப் பாகிஸ்தானத்துச் சிந்துவெளி வந்து அரப்பா, மொகஞ்சதாரோ நாகரிகத்தை உண்டாக்கி, அது அழிந்த பின் குசராத் வழியாகத் தென்னிந்தியாவுக்கு வந்தனர் என்பர். திராவிடர்களுக்குப் பின் கி.மு. 2000 அளவில் இந்தோ-ஐரோப்பியரும் நுழைந்தனர். இவ்வாறு இந்தியாவுக்குள் நுழைந்தவர்களில் திராவிடரின் எண்ணிக்கையே அதிகம் என்பர். இந்தோ-ஐரோப்பியர்களின் வருகையால் திராவிடர்கள் தென்னிந்தியாவுக்குக் குடியேறினர் என்பர்.

ஆனால், சமீபத்து ஆய்வுகள் சிந்து வெளி நாகரிகக் காலத்தின்போதே (கி.மு. 2500 அளவில்), திராவிடர் தமிழ்நாட்டில் இருந்ததாகவும், அவர்கள் சிந்து வெளி மக்களுடன் வியாபாரத் தொடர்புகள் வைத்திருந்ததாகவும், கருநாடகத்துப் பொன் சிந்து வெளி மக்களிடம் காணப்பட்டதாகவும் அறிவிக்கின்றன.

சமீபத்து ஆய்வுகள் ஒன்றிற்கு ஒன்று முரண்படுகின்றன. குருதிப் பரிசோதனை வட இந்திய மக்களில் பெரும்பான்மையோர் காக்கேய மூலத்தையும், தென்னிந்திய மக்களில் பெரும்பாலோர் ஆப்பிரிக்க மூலத்தையும் கொண்டிருப்பதாகக் கூறுகிறது.

2002ஆம் ஆண்டு, தென்னிந்திய ஐந்து பழங்குடிகளிடையே (160 பேர்கள்) செய்த தாய்வழி மரபணு ஆய்வுகள்படி (Mitochondrial DNA diversity among five tribal populations of southern India, Current science, vol.83, No. 2, 25 July 2002), பொதுவாகத் தென் கிழக்கு ஆசிய மக்களிடையே மட்டும் காணப்பட்டதாக நினைக்கப்பட்ட Haplogroup M தென்னிந்தியப் பழங்குடிகளிடையே 75 விழுக்காடும், வட இந்தியப் பழங்குடிகளிடையே 56 விழுக்காடும் இருப்பதாக Roy Choudhury et alஇன் ஆய்வு அறிவிக்கிறது.

ஆப்பிரிக்காவில் Quintana Murci et al செய்த ஆய்வுப்படி haplogroup M ஆப்பிரிக்காவில் 18 விழுக்காடு இருப்பதால் அது ஆப்பிரிக்காவில் தோன்றிப் பிற நாடுகளுக்குப் பரவியதாக அவர் அறிவித்திருந்தார். ராய் சவுதுரி et al ஆய்வுப்படி இது இந்தியாவிலிருந்து ஆப்பிரிக்காவிற்குப் பரவியதாகத் தெரிகிறது.

சில அறிஞர்கள் திராவிடர்கள் எத்தியோப்பியா வழியாக ஆப்பிரிக்க நாடுகளில் பரவினர் என்று குறிப்பிட்டிருந்தனர் என்று ஏற்கெனவே பார்த்தோம். அதை இவ் ஆய்வு உறுதிப்படுத்துகிறது. இந்த ஆய்வுப்படியும் திராவிடர் இந்தியாவிலிருந்து ஆப்பிரிக்க நாடுகளுக்குப் பரவினர் என்று தெரிகிறது.

ஐதராபாத் Centre for cellular and molecular biology என்ற நிறுவனம் 1,00,000 ஆண்டுகளுக்கு முன்பே ஆப்பிரிக்காவிலிருந்து வந்த மிகப் பழைய இனத்தின் சந்ததியினர் குசராத்து, கேரளா, அந்தமான் தீவுகளில் வசிப்பதாகத் தன் ஆய்வு மூலம் கண்டுபிடித்தது. அங்கு வசிக்கும் ஓங்கே, ஜரவா பழங்குடிகள் கற்காலத்து ஆப்பிரிக்க, ஆஸ்திரேலிய மனிதனின் ஆமினோ ஆசிடு பாண்டைக் கொண்டிருக்கின்றனர் என்று கண்டது. அந்தப் பழங்குடிகள் மேற்காசியா வழியாகக் குசராத் வந்து, கேரளா வழியாகக் கிழக்குக் கடற்கரைக்குச் சென்று, பின்னர் அந்தமான் தீவுகளில் குடியேறியதாகவும், கடல் மட்டம் உயர்ந்த போது வேறு நாடுகளுக்குப் போக முடியாமல் அங்கேயே தங்கி விட்டதாகவும் அந்த ஆய்வு அறிவிக்கிறது. அந்தமான் பழங்குடிகளின் தாய்வழி மரபணுவை (mtDNA), இந்தியாவில் வசிக்கும் 500 வகையான பழங்குடிகளுடன் ஒப்பிட்டுப் பார்த்தபோது குசராத், கேரளப் பழங்குடிகளின் மரபணுவே மிகப் பழமையானதாகத் தெரிகிறது என்று அந்த ஆய்வு அறிவித்தது. ஆசிய மனிதன் சிரிலங்காவில் தோன்றினான் என்ற ஆவ்க்கேவின் கருத்தை இந்த ஆய்வு உறுதிப்படுத்துகிறது. மேல்நாட்டவர் அந்தமான் மனிதன் ஆப்பிரிக்க மனிதனிலிருந்து வந்தவன் என்று சொல்வர். ஆனால் இந்த ஆய்வுபடி அந்தப் பழங்குடி மக்கள் குசராத், கேரளப் பழங்குடி மக்களிலிருந்து தோன்றியவர் என்று தெரிகிறது.

ஸ்பென்சர் வெல்ஸ் (Spenser Wells) என்பவர் மதுரை காமராசர் பல்கலைக் கழக ஆசிரியர் பிச்சப்பன் குழுவினருடன் மதுரை அருகில் உள்ள உசிலம்பட்டி, திருமங்கலம் பகுதிகளில் வாழ்கிற பிரமலைக் கள்ளர், யாதவர், சௌராட்டிரர் இடையே செய்த தாய்வழி மரபணு (mtADN) ஆய்வுப்படி அவர்கள் இன்றைக்கு 50,000-35,000 ஆண்டுக்குள் ஆப்பிரிக்காவிலிருந்து மேற்கு ஆசியா வழியாகப் பலுசித்தான், குசராத், சௌராட்டிரா வழியாக இந்தியா வந்தவர்களின் சந்ததியினர் என்று தெரிகிறது. காரணம் அவர்களிடையே 50,000 ஆண்டுகள் பழமையுடைய M130, 5 முதல் 7% காணப்படுகிறது. 35,000 ஆண்டுகள் பழமையுடைய M120ம் பிரமலைக் கள்ளரிடையே 48% காணப்படுகிறது. யாதவரிடையே பத்தாயிரம் ஆண்டுகள்

பழமையுடைய M172 அதிக விகிதத்திலும் காணப்படுகிறது. தென்னிந்தியாவில் காணப்படும் பெரும்பான்மையான பெண்கள் இன்றைக்கு 50,000-30,000 ஆண்டுகளுக்குள் வந்தோரின் சந்ததியினர். அவர்களில் 60% த்தினரிடையே தாய்வழி மரபணுவான M காணப்படுகிறது.

இந்தியச் சாதிப்பிரிவு மக்களிடையே செய்யப்பட்ட தந்தை வழி மரபணு (Y chromosome) ஆய்வுகள், அவர்களில் பெரும்பான்மையோர் தெற்காசிய மூலத்தை உடையவர்களாக இருக்கின்றனர் என்று அறிவிக்கின்றன.

டாக்டர் விஜேந்திர காசியபு 936 Y chromosome களை ஆய்வு செய்து தற்கால இந்திய மக்களின் குரோமோசோமும் இன்றைக்குப் பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன் இந்தியாவில் வாழ்ந்த மக்களின் குரோமோசோமும் ஒன்றாக இருப்பதாக அறிவித்திருக்கிறார். சில மேல் நாட்டறிஞர்கள் கூறுவது போல் வட இந்திய உயர்சாதி மக்கள் அனைவரும் ஆரிய மூலத்தைக் கொண்டவர்கள் அல்லர் என்று தெரிகிறது. சிறுபான்மை உயர்சாதி மக்களிடையேதான் (பிராமணர், சத்திரியர்) ஆரியர்களின் தந்தைவழி மரபணு குறைந்த அளவு (3%) காணப்படுகிறது.

மேற்காசிய தாய்வழி மரபணு (mtNDA) சிந்துவெளியில் குறைந்த விகிதத்தில் இருப்பதால் (3%) அங்கிருந்து வந்த திராவிட விவசாயிகள் சிந்துவெளி மக்களுடன் கலந்ததால்தான் தாய்வழி மரபணு விகிதம் குறைவாயிருக்கிறது என்றும், திராவிட மொழி அவர்களால் இந்தியாவுக்குக் கொண்டு வரப்பட்டது என்றும் சொல்வர் MC Alpin Quintana-Murci போன்ற ஆய்வாளர்கள். அதற்கு ஆதாரமாகப் பாகிஸ்தானில் பிராகுயி மொழி பேசப்படுவதைக் குறிப்பிடுவர். அதே போல் மத்திய ஆசியாவிலிருந்து வந்த இந்தோ-ஐரோப்பியர்களால் இந்தியாவில் தந்தைவழி மரபான Y chromosome பெரிதும் மாற்றமடைந்தது என்பர்.

அமெரிக்காவிலிருந்து பிப்ரவரி 2006இல் வெளிவந்த The American Journal of Human Genetics Vol. 78(2) என்ற பத்திரிகையில் Polarity and Temporality of High-Resolution Y chromosome distribution in India என்ற ஆய்வுக் கட்டுரையின் படி:

மேற்கு மற்றும் மத்திய ஆசியாவில் செய்யப்பட்ட தாய்வழி மரபணு (mtDNA-haplogroup) ஆய்வு பிராகுயி மக்களின் மரபணு

இந்தோ-ஈரானிய மொழிபேசும் மக்களின் மரபணுவோடு தொடர்புடையதாய் இருக்கிறது.

HG L1-M76 மரபணுக்கள் திராவிடர் தென்னிந்தியாவில் தோன்றியவர் என்றும், Y குரோமோசோம் வித்தியாசம் ஒலோசோன் ஆரம்பத்தில் (9000 ஆண்டுகளுக்கு முன்) அல்லது அதற்கு முன்பே ஏற்பட்டதாக அறிவிக்கிறது. (மத்திய ஆசிய இந்தோ-ஐரோபியர்களின் வருகைக்கு முன்பே).

சாதிப்பிரிவுகள் உள்ள மக்களிடையேயும் HGS R1 a1-Rw-M124, L1-M76) காணப்படுகிறது.

வித்ஜல் என்பவர் (Witzel 2004) கூறியபடி புதுக் கற்கால விவசாயிகள் வடக்கிலிருந்து பாக்டீரியா வழியாகத் தஜிகித்தான், வடக்கு ஆப்பானித்தான், இந்துகுஷ், பாகிஸ்தான் சமவெளிகள் வந்திருந்தால் இந்தியாவில் L3-M357 மரபணு எதிர்பார்க்கப்படும். இந்த HG பாகிஸ்தானில் 6,8% மும், இந்தியாவில் மிக அரிதாக 0, 4% இருக்கிறது. மாறாக இந்தியாவில் L1-M76-7,5% ஆகவும், பாகிஸ்தானில் 0,19% ஆகவும் இருக்கிறது. மேலும், J2a-M410;J2b-M12 ஐரோப்பாவிலிருந்து இந்தியா வரை பரவி இருக்கிறது. ஆனால் HGS-J1, E, G இந்தியாவில் காணப்படாததால் புதுக் கற்கால மக்களும், இந்தோ-ஐரோப்பியர்களும் ஒரு குறிப்பிட்ட பகுதியிலிருந்து பரவியதால்தான் இவ்விகித வேறுபாடு ஏற்பட்டது என்று சொல்வதற்கில்லை.

சமீபத்தில் தாய்வழி மரபணு (mtDNA), Quintana-Murci et al என்பவரால் இந்தோ-ஈரானிய எல்லையைச் சேர்ந்த ஏல-திராவிட மூலத்திலிருந்து வந்ததாகக் கொள்ளப்பட்டது. இருந்தபோதிலும் அவர் மேலே கவனிக்கப்பட்ட mtDNA HG விகித வேறுபாடு இந்தியத் திராவிட மொழிகள் பேசும் பழங்குடிகள் சிந்துவெளி வரை பரவி, மேற்காசிய மக்களுடன் கலந்ததால் மரபணுவில் மாறுபாடு ஏற்பட்டிருக்கலாம் என்றும் கொள்ளலாம் என்றார். HGF-M89-H-M69 தகவுகள் வெளிநாட்டு மூலமாதிரியோடு (திராவிடர் வெளிநாட்டிலிருந்து வந்தவர் என்ற மாதிரியோடு) ஒத்துப் போகவில்லை. HGL1-M76 தெளிவாகத் திராவிட மொழி பேசுவோரிடையே அதிக அளவில் இருப்பதால் அது உள்நாட்டு மாதிரியோடு ஒத்துப் போகிறது. மேலும் L1 பிராந்திய வித்தியாசம் இந்தியாவில் சிந்துவெளியை விட அதிகமாயிருக்கிறது. L1HG பரவலும் அதைச் சேர்ந்த பிராந்திய வித்தியாசமும் அது தென்னிந்தியாவிலிருந்து பரவிய மாதிரியைக் காட்டுகிறது. HGJ2a-M410 பெரும்பாலும் திராவிட மற்றும் இந்தோ

ஐரோப்பிய மொழி பேசும் உயர் சாதி மக்களிடையே மட்டும் காணப்படுகிறது. அது நடுத்தர, கீழ்ச்சாதி மக்களிடையே மிகக் குறைந்த அளவில் உள்ளது. J2a (மேற்காசிய காக்கேசிய மரபணு) தென்னிந்தியப் பழங்குடிகளிடையே குறைந்த அளவு கூடக் காணப்படாததால் L1 தகவு ஒத்துப் போகவில்லை. ஆதலால் திராவிடர் இந்திய மூலத்தை உடையவர் என்ற ஆய்வு உறுதிப்படுத்துகிறது.

அமெரிக்காவிலிருந்து வெளியான The real EVe: Modern man's Journey out of Africa: New York. Carrrol and Graf Publisher-2003) என்ற நூலில் ஆக்சுபோர்டு பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த Stephen Oppenheimer என்ற அறிஞர் உலகளவில் உள்ள தாய்வழி-தந்தைவழி மரபணுக்களை ஆராய்ந்து பின்வரும் முடிவை வெளியிட்டிருக்கிறார்.

இன்றைக்கு 90,000 ஆண்டுகளுக்கு முன் ஆப்பிரிக்கா விலிருந்து கடல் ஓரமாக (mtDNA L3- chromosome M168 உடன்) வந்த ஓமோசப்பியன் என்ற நவீன மனிதன், தெற்கு அரேபியா வழியாகத் தென்னிந்தியாவுக்கு 73,000 ஆண்டுகளுக்கு முன்வந்து, அங்கு நீண்டகாலம் தங்கி வளர்ச்சி பெற்ற பின், அதிலிருந்து ஒரு பிரிவினர் இன்றைக்கு 50,000 ஆண்டளவில் ஐரோப்பாவுக்கு ஈரான், ஈராக் வழியாகச் சென்றதாகக் கூறுகிறார். மற்றொரு பிரிவினர் இன்றைக்கு 40,000 ஆண்டளவில் சிந்துவெளி காசுமீரம் வழியாக மத்திய ஆசியாவுக்குச் சென்று, மீண்டும் இரு பிரிவாகப் பிரிந்து ஒரு பிரிவினர் தெற்கு உருசியா வழியாகக் கிழக்கு ஐரோப்பிய நாடுகளுக்கும், மற்றொரு பிரிவினர் சீனா வழியாகத் தென்கிழக்கு ஆசியா வழியாக ஆஸ்திரேலியா மற்றும் தென்னமெரிக்கா வரை பரவியதாகவும் கூறுகிறார்.

M168 லிருந்து பிரிந்த M17 என்ற மரபணு (தெற்கு உருசிய இந்தோ-ஐரோப்பியரின் மரபணு) இந்தியாவில் தோன்றியதாகவும் அது இந்தியா, பாகிஸ்தான், ஈரானில் மிக அதிக விகிதத்திலும், காக்கேயாவில் மிகவும் குறைந்த விகிதத்திலும் இருப்பதால் முதல் பிரிவினர் 50,000 ஆண்டுகளுக்கு முன் இந்தியாவிலிருந்து ஐரோப்பா சென்றவர் என்கிறார். திராவிட மொழிதான் மிகவும் பழமையான மொழி என்றும் அது தென்னிந்தியாவில் தோன்றிக் கடற்கரை வழியாகச் சென்ற திராவிடர் மூலம் கொரியா, சப்பான் வரை பரவியதாகவும் அவர் குறிப்பிடுகிறார். இந்தோ-ஐரோப்பிய மொழி வட இந்தியாவில் (தற்காலப் பாகிஸ்தானில்) தோன்றியது என்று அவர் குறிப்பிடுகிறார்.

அது இந்தியாவில் பல்லாயிர ஆண்டுகள் வளர்ச்சி பெற்று உருசியா வழியாக ஐரோப்பிய நாடுகளில் பரவியது என்கிறார். அதுமட்டும் அல்லாமல், கிழக்காசியா, மேற்காசியா, மத்திய ஆசியா, மேற்கு ஐரோப்பா, பாலினேசியா நாட்டு மக்கள் அனைவரும் இந்தியத் திராவிடரிலிருந்து தோன்றியவர்கள் என்கிறார்.

புல்லர் (Fuller) என்ற தாவரவியலார் 2006இல் இந்திய மொழிச் சொற்களை ஆய்வு செய்து இந்தியாவில் உழவுத் தொழில் பிற நாடுகளைவிட மிக முன்னதாகத் தோன்றி வளர்ச்சி பெற்றதாகக் கூறுகிறார். கோம்ரி (Comrie) என்பவர் 2003இல் மூல இந்தோ-ஐரோப்பிய மொழி பேசிய மக்கள் பல கிளைகளாகப் பிரிந்து பிற நாடுகளுக்குக் குடியேறுவதற்கு முன் உழவுத் தொழில் செய்தவர்கள் என்று கூறுகிறார். இது மட்டுமில்லாமல் இந்திய இந்தோ-ஐரோப்பிய மொழிகளில் முண்டா மற்றும் திராவிடக் குடும்பங்களின் உழவுத் தொழில் சம்பந்தப்பட்ட சொற்கள் கலந்திருப்பதாகவும் அச்சொற்கள் அம்மொழிகளைப் பேசிய இந்தோ-ஐரோப்பிய மக்கள் முண்டா-திராவிட மொழிகள் பேசும் மக்களுடன் இந்தியாவில் நெருங்கி வாழ்ந்த போது கடனாகப் பெற்ற சொற்கள் என்றும் கூறுகிறார். இவ்வாறு புதிய மொழியியல் ஆதாரங்கள் படியும் இந்தோ-ஐரோப்பிய மொழிக் குடும்ப மொழிகள் இந்தியாவில் தோன்றியவை என்கிறார். உலகின் பல பகுதிகளில் செய்யப்பட்ட பசுக்களின் DNA ஆய்வு முடிவுகள் செபு (Zebbu) என்னும் இந்தியப் பசு இந்தியாவில் புதிய கற்காலத்துக்கு முன்னரே பழக்கப் படுத்தப்பட்டது என்று அறிவிக்கின்றன. அது மட்டுமல்லாமல் மரபணு ஆய்வு இந்தியப் பசுக்கள் கிழக்கு ஆப்பிரிக்கா (கடல் வழியாக), தெற்குச் சீனா, தென்கிழக்காசியா, மேற்கு ஆசியா, ஐரோப்பா, மத்திய ஆசியாவுக்கு வரலாற்றுக் காலத்துக்கு முன்பே (இன்றைக்கு 22,000 முதல் 4000 ஆண்டுகளுக்குள்) கொண்டு செல்லப்பட்டன என்று அறிவிக்கிறது.

பெல்வுட் (Bellwood) என்பவர் (1995) எருமை இந்தியாவில் ஒரிசா-பீகார் பகுதிகளில் முதன் முதலாகப் பழக்கப்படுத்தப்பட்ட பின் தெற்குச் சீனாவுக்குக் கொண்டு போகப்பட்டு அங்கு உழவுத்தொழில் வளர்ச்சி பெற்றதாகக் குறிப்பிடுகிறார். மிகச் சமீபத்து DNA ஆய்வும் எருமை முதன் முதல் இந்தியாவில்தான் பழக்கப்படுத்தப்பட்டது என்று தெரிவிக்கிறது. சாங் (Sang-2009) என்பவரின் பார்லி மரபணு ஆய்வும் அது மேற்காசியாவிலிருந்து கொண்டு வரப்படாமல் இந்தியாவிலேயே முதன் முதலாகப் சரிப்பட்டதாக அறிவிக்கிறது.

அரிசி DNA ஆய்வும் அது முதன் முதலில் இந்தியாவில் கங்கைச் சமவெளியிலும் பின்னர்த் தென் சீனாவிலும் பயிரிடப் பட்டதாக அறிவிக்கிறது. புல்லர் (Fuller) என்பவரின் தாவரச் சொற்கள் பற்றிய ஆய்வும் வள்ளிக் கிழங்கு, வெள்ளரிக்காய் போன்ற பல உணவுப் பொருள்களும் இந்தியாவில்தான் முதன் முதலில் பயிரிடப்பட்டதாக அறிவிக்கிறது.

மனிதர்களின் DNA ஆய்வும் ஆரியர்கள் மத்திய ஆசியாவிலிருந்து இந்தியாவுக்கு வரவில்லை என்கிறது. இவ் ஆய்வு ஆரியரின் மரபணுவான R1a(M17)ம் இந்தியாவில் வளர்ச்சி பெற்று இன்றைக்கு 16000-14000 ஆண்டுகள் அளவில் மத்திய ஆசியாவைக் கடந்து பாண்டிக் -காஸ்பியன் பகுதிகள் மற்றும் உருசியாவுக்குப் பரவின என்று அறிவிக்கிறது (Sahoo, 2006/Sengupta, 2006; Trivedi, 2008-Underhill, 2009). மேற்காசிய மரபணு ஆய்வும் இந்தியாவிலிருந்து மக்கள் மேற்காசியாவுக்குக் குடிபெயர்ந்ததாக அறிவிக்கிறது. அதனால்தான் அங்கு இந்திய மரபணுக்களான Y-DNA, Hgs F, L1, H (M69), K2, C5, C, R1a (M17) போன்றவை காணப்படுகின்றன. மாறாக மேற்காசிய மரபணுக்களான Y-DNA-J1, G, I, -R1b3 போன்றவை இந்தியாவில் காணப்படவில்லை. அதனால் மேற்காசியாவிலிருந்து இந்தியாவுக்கு மக்கள் குடிபெயரவில்லை என்று தெரிகிறது. ஆரம்பத்தில் L1 என்ற மரபணு மேற்காசியாவைச் சேர்ந்த ஏலம் என்ற நாட்டிலிருந்து திராவிட மொழி பேசுபவர்களால் கொண்டுவரப்பட்டது என்று சொல்லப்பட்டது. ஆனால் சமீபத்து ஆய்வுகள் (Sengupta, 2006-Sahoo, 2006) அது இந்தியாவில் தோன்றி ஈரான் மேற்காசியாவுக்குப் பரவியதாக அறிவிக்கின்றன.

இந்தியா மேற்காசியா-ஈரான் போன்ற நாடுகளில் காணப்படும் J2 என்ற மரபணு இந்தோ-ஐரோப்பியர்கள் மேற்காசியாவிலிருந்து இந்தியாவுக்குப் புதிய கற்கால நாகரிகத்துடன் வந்தனர் என்பதற்கான அறிகுறி எனப்பட்டது. இந்த மரபணு அனாத்தோலிய (தற்காலத் துருக்கி) தெற்கு ஐரோப்பியக் கற்கால நாகரிகத்தைச் சேர்ந்தது என்று நிரூபிக்கப் பட்டிருந்தது. இந்த மரபணுவோடு தொடர்புள்ள இந்திய மக்கள் மேற்காசியாவிலிருந்து வரவில்லை என்று சமீபத்து முடிவுகள் திட்ட வட்டமாக அறிவிக்கின்றன. இந்த மரபணு வட நாட்டு மக்களை விடத் தென்னாட்டுத் திராவிடர்களிடையே அதிக விகிதத்தில் காணப்படுகிறது.

பிற புள்ளியியல் விபரங்களும் இது இந்தியாவில் தோன்றியதாக அறிவிக்கின்றன. இதன் கிளையான J2b

இந்தியாவில் 14000 ஆண்டுகளுக்கு முன் உத்தரப்பிரதேசத்தில் நேபாள எல்லையில் தோன்றியதாகத் தெரிகிறது.

இவ்வாறு எல்லாத் துறை ஆய்வுகளின் ஆதாரங்கள்படி உழவுத்தொழிலும் இந்தோ-ஐரோப்பிய மொழிகளும் இந்தியாவில் தோன்றி வளர்ச்சி பெற்ற .பின்னரே உலகின் பல பகுதிகளுக்கும் பரவின.

இந்தியாவிலிருந்து Y-chromosomal DNA O2a மரபணுவுடன் கிழக்கில் தென்கிழக்காசியாவுக்குக் குடியேறிய மக்கள் ஆஸ்ட்ரோ-ஆசிய மொழியையும் அரிசிச் சாகுபடியையும் எடுத்துச் சென்றனர்.

கங்கைச் சமவெளியில் கண்டுபிடிக்கப்பட்ட மிகப் பழமையான புதிய கற்கால மண்பாண்டங்களும் மேற்கூறியவற்றை உறுதிப்படுத்துகின்றன.

கிழக்காப்பிரிக்காவிலிருந்து புறப்பட்ட நவீன மனிதன் இன்றைக்கு இலட்சம் ஆண்டுகள் அளவில் இந்தியாவுக்கு வந்து, மொழி மற்றும் பண்பாட்டு வளர்ச்சி பெற்ற பின் அங்கிருந்து பல காலங்களில் இன்றைக்கு 10,000 ஆண்டுகளுக்குள் பல நாடுகளில் பரவினான். அதனால்தான் பல நாட்டு மொழிகளில் திராவிட மற்றும் தமிழ்ச்சொற்கள் கலந்தன என்று ஆய்வாளர்கள் கூறுகின்றனர்.

இதுவரை சொல்லப்பட்ட விபரங்கள் மூலம் தமிழர்கள் தாங்கள் சென்றவிடமெல்லாம் தங்கள் மொழி, கலை, பண்பாடுகளை எடுத்துச் சென்று அதைக் கட்டிக் காத்து வந்திருக்கின்றனர் என்று தெரிகிறது. அவர்கள் பல இன மக்களுடன் கலந்த போதும் அவர்கள் மொழி, பண்பாடுகளை மறக்கவில்லை. அவர்கள் குடியேறிய நாடுகளில் எல்லாம் தங்கள் மொழி, பண்பாடுகளைப் பிற நாட்டவரும் விரும்பி ஏற்றுக் கொள்ளும்படி செய்திருக்கின்றனர்.

# குறிப்புகள்

1. My contention is that between the language of southern India and those of Aryan family there are many very deeply seated and radical affinities. G.U. Pope.

2. The Aryas in adopting a Dravida word, changed it considerably in order to suit it to their tongue and whenever such a word was imperfectly understood or negligently reproduced, the change naturally became still greater. It is more than probable that Samskrita borrowed a number of words also from Dravida tribes the dialects of which are unknown to us, so that in such a case it becomes very difficult and even impossible to trace their origin- Kittel's Kannada- English dictionary, xxix, 1968 (Revised by M.M. Bhat).

3. Not only Tamil or any south Indian language is not derived from sanskrit, but if we find more anologies which go to confirm our opinion that the Dravidian languages have to a great extant influenced the Sanskrit and even Vedic dialects. - V.R.R. Dikshidar, Pre-historic South India, p.190.

4. They (the Aryans) had no writing until they had come into contact with civilisation - H.G. Wells, A short history of the World, ch. XXI.

5. It purports to show the fundamental ingredients of both vedic and modern Sanskrit and when they were introduced into western India, from which it follows that Sanskrit cannot well be the parent of any ancient languages in India; infact, as a conglomeration of phases or features of or modifications by there well known languages. It is an evolution and in its introduction in India- Calvin Kephart, Sanskrit language, Its origin composition and diffusion, p.59.

6. மேல் நாட்டவர், இந்தோ -ஐரோப்பியர்கள் வடக்கு ஐரோப்பாவிலிருந்து ஈரான் வழியாக இந்தியாவில் குடியேறி வேதங்களை இயற்றியதாகச் சொல்வர்.

சமீப காலத்தில் அரப்பா-மொகஞ்சதாரோ நாகரிக அழிவுகளை ஆராய்ந்து பார்த்த அறிஞர்கள் இந்தோ-ஐரோப்பியரின் தடயங்கள் எதுவும் அவ்வழிவுகளில் கிடைக்கவில்லை என்றும், கிடைத்த தடயங்கள் அனைத்தும் இந்திய அல்லது தெற்கு ஆசிய மக்கள் பற்றியனவே என்றும், மரபு வழி அணுவும் (DNA) தெற்கு ஆசிய மக்களுடையதாகவே இருக்கிறது என்றும் கூறி, ஆரியர்களின் தாயகம் இந்தியாதான் என்று எடுத்துக்காட்டினர்.

சில மேனாட்டு அறிஞர்கள், நாடோடிகளாக வாழ்ந்து வந்த இந்தோ-ஐரோப்பியர் கி.மு. 1500இல் இந்தியாவுக்கு வந்து, கி.மு. 1200 அளவில் (முந்நூறு ஆண்டுகள் இடைவெளிக்குள்) உலகின் மிகச்சிறந்த நூல்களான வேதங்களை எப்படி இயற்றி இருக்க முடியும் என்ற வினாவையும் எழுப்புகின்றனர். சில ஆய்வாளர்கள், அரப்பா-மொகஞ்சதாரோ அழிவுகளில் காணப்பட்ட கட்டடங்கள், தெருக்களின் அமைப்பு, மற்றும் பலிபீடங்கள், வேதங்களில் கூறப்படும் சில்ப சாத்திரத்தின் அடிப்படையில் கட்டப்பட்டவை என்றும், கி.மு. 3000க்கு முற்பட்டவை என்றும் அறிவிக்கின்றனர். வேதகால நாகரிகத்தின் என்றும் வேதங்கள் கி.மு.3000க்கு முற்பட்டவை என்றும் ஆய்வுகள் தெரிவிக்கின்றன. இந்தோ-ஐரோப்பியர் கி.மு. 1500 அளவில் இந்தியா வருமுன்பே இந்திய மண்ணில் வேதங்கள் இயற்றப்பட்டு விட்டன. இதிலிருந்து இந்தோ ஐரோப்பியர் வேதங்களை இயற்ற வில்லை என்றும் அவற்றை இயற்றியவர் இந்திய மண்ணில் வாழ்ந்தவர்களே என்றும் தெரிகிறது. பல மேனாட்டு அறிஞர்களும் இக்கருத்தை ஆதரிக்கின்றனர்.

7. அறிவுத் துறையில் முதன் முதல் கடவுள் ஆராய்ச்சி செய்தவர் தமிழரே என்பது வடமொழி நூல் உரைகளிலேயே காணப்படுகிறது. வேதாந்தங்களாகிய உபநிடதங்களைச் செய்தவர் தமிழரசரே என்று அவை கூறுகின்றன. அவருள் சனகர், சனற்குமாரர் தலைவர் எனப்படுகிறது. இவர்கள் வேதங்களிலும் மிக்க பழமை உடையவர் என்றும் அவை கூறுகின்றன.

மறைமலை அடிகள், தேவநேயப் பாவாணர் போன்றோர், ஆரியர்களால் இயற்றப்பட்டவை வேதங்களும், புராணங்களுமே அவற்றின்பின் தோன்றிய

ஆரண்யங்களும், உபநிடதங்களும் தமிழர்களால் செய்யப்பட்ட மொழிபெயர்ப்பென்பர்.

ரிக்வேதம் மற்றும் பிறவற்றிலும் தமிழ்ச் சான்றோர் ஆரிய மொழியில் இயற்றிச் சேர்த்த பகுதிகளும் நிறைந்திருக்கின்றன என்ற மறைமலையடிகள் கருத்தைச் செண்டுகே என்ற அறிஞரும் ஆதரிக்கிறார். பர்ஜிதர், கோசம்பி போன்ற அறிஞரும், ரிக் வேதத்தில் இயற்கைத் தெய்வங்களை வருணிக்கும் பல பகுதிகள் வேதமொழி அல்லாத மொழியில் அறிவர்களால் எழுதப்பட்டு இருந்திருக்க வேண்டும். அவையோ அல்லது அவற்றின் தழுவல்களோ வேத மொழியில் எழுதப்பட்டு ரிக் வேதத்தோடு சேர்க்கப்பட்டு இருக்க வேண்டும். சப்த ரிஷிகளும் அத்தகைய அறிவர்களாக இருக்கக் கூடும் என்று கருதுகின்றனர். அறிஞர் ஈராசும், இழந்து பட்ட பழந்திராவிட நூல்களின் மொழி பெயர்ப்புகள் வேதம் மற்றும் புராணங்களின் பல பகுதிகளில் இருப்பதாகக் கருதுகிறார்.

8. கி.மு. 4ஆம் நூற்றாண்டிலேயே பாணினீயத்திற்கு வார்த்திகா என்னும் பொழிப்புரை வரைந்த காத்தியாயனரும், மாபாடியம் என்னும் விரிவுரை வரைந்த பதஞ்சலியும் தென்னாட்டவரே.

கி.பி. ஏழாம் நூற்றாண்டு முதல் வடமொழியை வளர்த்த யாதவப் பிரகாசர், வேதாந்த தேசிகர், அப்பய்ய தீட்சிதர், ஜகந்நாத பண்டிதர் போன்றோர் தமிழரே. (குமாரில பட்டர் ஆந்திரர்).

வடமொழி வேதங்கள், உபநிடதங்கள் ஆகியவற்றிற்குப் பேருரை வரைந்த சங்கரர், இராமானுஜர், சோமநாதர் தமிழரே. மத்வர், சாயனர் தென்னாட்டவர்.

தமிழ் நாட்டுக் காஞ்சிபுரத்தைச் சேர்ந்த தண்டி என்னும் தமிழர் வடமொழியில் காவ்ய தர்சம் (காவியக் கண்ணாடி), தசகுமார சரிதம், அவந்தி சுந்தரி போன்ற நூல்களை எழுதியவர்.

- அத்வைத நூல்கள் பல எழுதியவர் சேர நாட்டுத் தமிழர் சங்கரர். இவர் மொத்தம் 89 நூல்களை வடமொழியில் இயற்றியிருக்கிறார்.

- விசிஷ்டாத்வைத விளக்கம் போன்ற ஒன்பது நூல்களை எழுதியவர் தமிழரான இராமானுஜர்.

- ஸ்ரீ ரங்க ராமானுஜர் என்பவர் 60 நூல்கள் எழுதியுள்ளார்.

- அப்பய்ய தீட்சிதர் இலக்கியம், தத்துவம், தருக்கம், இலக்கணம், விமர்சனம் முதலிய துறைகளில் 104 நூல்கள் செய்தவர்.

- மகாகவியும், தத்துவ ஞானியுமாகிய வேதாந்த தேசிகர் பல துறைகளில் 85 நூல்கள் இயற்றியவர்.

- நாட்டிய சாஸ்திரம் எழுதிய பரதமுனிவர் தஞ்சாவூரைச் சேர்ந்த தமிழர் என்பர். (இந்நூலுக்கு மூலநூல் தமிழ்க் கூத்த நூல் எனப்படுகிறது).

- பொதுவாகச் சுமார் 100 வடமொழி அறிஞர்கள் 1000க்கு மேற்பட்ட நூல்களை வடமொழியில் இயற்றி அதை வளப்படுத்தியிருக்கின்றனர். பல துறைகளில் சிறந்து விளங்கிய பல வட நூலாசிரியர்களும், காவியப் புலவர்களும் பழங்காலத்திலிருந்து தென்னாட்டினராக இருந்து வந்திருக்கின்றனர். இன்றும் வடநாட்டுச் சமற்கிருதப் புலவரினும் தென்னாட்டுச் சமற்கிருதப் புலவர் வல்லுநராயிருக்கின்றனர்.

9. Since Western Asia seems to be the home of the Mitanni and Elamite, it would be reasonable conclusion that The Dravidian language also come from that region. However since a language is not apt to migrate without a migration of people who use the language it would seem that a migration of people from this area into India must have taken place, and that The Dravidians came from this part of Asia has often been presented this study would seem to offer some confirmatory evidence. (E. Brown. The Possibility of a connection between Mitanni and Dravidian Languages, J.A.O.S. Vol. 50 (1950) p. 305).

10. After much controversy it is now, I believe generally agreed that the main racial element in the Dravidian population is a branch of the mediterranian race, if that term be understood in the most extended sense, or at least a closely allied race, (Gilbert Slater, The Dravidian Element in Indian Culture, p.19).

11. All these deviations from the Mediterranian type seemed to be basically explained on the hypothesis that after the Dravidians entered India some inter-breeding took place between them and the dark and thick-lipped primitive 'pre-Dravidian' races still surviving in the jungles. (ibid, pp.20-21).

12. The races of races seem to have spread from the Mediterranian coast among the sea coasts and river deltas right up to the Indian coast and plains and even perhaps onward.

13. It may be said with reasonable certainty, that the basic language from which all the branches of the Aryan languages as well as those of the Indo-African and Turanian languages were derived its origin in a region adjacent to the shores of the Bay of Bengal, if not on the mainland of India and probably from a primitive dialect of the people whose descendants comprise the present Dravidian population of the Dekkan. However, those languages may have emanated from different branches of the original common dialect, as reflected by the different dialects of the Dravidians today. (Calvin Kephart, Sanskrit Language, its Origin Composition and Diffusion, p.80).

The real facts seems to be that the so called Dravidians who are supposed to be migrants into peninsular India from different parts of the world and hence alien to the soil, could not be foreigners to the land but indigenous and autochtones of South India.

14. Grierson, Linguistic Survey of India, Vol. IV.

15. பொதுவாக மேல் நாட்டு அறிஞர்கள் கணிதம், வான நூல், சோதிடக்கலை போன்றவை கிரேக்கர் மற்றும் மேற்காசிய மக்களிடமிருந்தே இந்தியரிடையே பரவியதாகச் சொல்வர். ஆனால் அது உண்மை அல்ல என்பது பின் வரும் குறிப்புகளால் தெரிய வருகிறது.

எகிப்து, கிரேக்க, சுமேரியக் கணிதத்தை ஒப்பிட்டுப்பார்த்த செய்டன்பெர்கு (Seidenberg) என்ற அமெரிக்கக் கணித மேதை, அவைகளுக்கு மூலம் இந்திய வேதகாலக் கணிதமே என்று 1962இல் சொல்லியிருக்கிறார். காரணம் அவை காலத்தால் இந்திய முறைக்குப் பிற்பட்டவை என்றும், எகிப்திய பிரமிட் கோபுரம், பாபிலோனிய நீண்ட சதுரம் அதற்கு முற்பட்ட சுல்ப சாத்திரத்தை அடிப்படையாகக் கொண்டு கட்டப்பட்டது என்கிறார். பிதாகோரசு தேற்றம் கி.மு. ஆறாம் நூற்றாண்டினது. அவருக்கு முன்பே கி.மு. 3000 அளவில் அத்தேற்றத்தை அடிப்படையாக வைத்து அரப்பா மொகஞ்சதாரோ கட்டடங்களும், பலிபீடங்களும் கட்டப்பட்டிருப்பதால் அது இந்திய மூலத்தை உடையது என்கிறார்.

சோதிட சாத்திரம் அலெக்சாந்திரியாவில் (எகிப்து) கி.மு. 332இல் பிறந்ததாகச் சொல்லப்படுகிறது. ஆனால் கி.மு. 500லேயே கபிலவஸ்துவைச் சேர்ந்த சித்தார்த்தர் என்ற அரச குமாரன் (புத்தர்) துறவியாவார் என்று அரசு சோதிடர் சொல்லியிருக்கிறார். இதிலிருந்து சோதிடக் கலையின் பிறப்பிடம் எகிப்து அல்ல, இந்தியா தான் என்று தெரிகிறது.

பாபிலோனியர் கி.மு. 700 அளவில் இராசி மண்டலத்தின் 12 குறிகளைக் கண்டு பிடித்தவர் எனப்படுகிறது. இருக்கு வேதத்தில் இராசி மண்டலத்தின் 12 குறிகளைப் பற்றியும், ஏழு கிரகங்களைப் பற்றிய குறிப்புகளும் காணப்படுகின்றன. கி.மு. நாலாயிரம்

ஆண்டுகளுக்கு முற்பட்ட வசந்தகாலச் சமமான இராப்பகல் பற்றிய குறிப்பும் காணப்படுகிறது. இதிலிருந்து இராசிகள் இருக்கு வேதத்திற்கு முன்பே கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. அதனால் இராசி மண்டலம் பாபிலோனியர்களால் கண்டுபிடிக்கப்பட வில்லை என்றும், அது சிந்துவெளி மக்களால் கண்டு பிடிக்கப்பட்டது என்றும் தெரிகிறது.

16. அத்தினாபுரியை இராசதானியாகக் கொண்ட குரு நாடும் திருதராட்டிரன், ஆரியரான காந்தார தேசத்தரசன் மகளாகிய காந்தாரியை மணம் செய்யுமுன் தமிழ்நாடாகவே இருந்தது. பிறகு அக்காந்தாரியின் குல மொழியே அரண்மனை மொழியாகி நாளடைவில் வளர்ச்சி பெற்றமையின் அது ஆரிய நாடாயிற்று என்று மாகறல் கார்த்திகேயன் (மொழிநூல்) மற்றும் மறைமலையடிகள் (மாணிக்கவாசகர் காலம் 2ஆம் பாகம்) தங்கள் நூல்களில் குறிப்பிட்டிருக்கின்றனர்.

17. பிராமி எழுத்து முறையில் வடவமைப்பு, தென்னமைப்பு என்று இருமுறைகள் உண்டு. வட அமைப்பு வடநாட்டு மொழிகளுக்கும், தென்னமைப்பு தமிழுக்கும் ஏற்றாற்போலும் அமைந்திருக்கின்றன.

பழைய பிராமி எழுத்தில் வடமொழிக்கு இன்றியமையாத பல ஒலிகள் இல்லை. அனுஸ்வாரம், விஸர்க்கம் என்பவை இல்லை. ஷ, ஸ எழுத்துக்கள் இல்லை. ஹகர ஒலியுடன் கூடிய க-ச-த-ப-ட வர்க்கங்கள் இல்லை. மேலும் வடமொழிக்கு வேண்டாத எகர, ஒகரக் குறில்கள் உள்ளன. ஆகையால் அவை தொல்காப்பியர் காலத்துப் பழந்தமிழுக்குரிய ஒலிகளை மட்டும் உணர்த்தி வந்தன என்றும், பழந்தமிழ் எழுத்தை ஒட்டி அமைக்கப்பட்டவை என்றும் கொள்ளலாம்.

(இந்தப் பழைய தமிழ்ப் பிராமி எழுத்து கி.பி. 3-4ஆம் நூற்றாண்டிலிருந்து வடிவம் மாறத் தொடங்கியது. காரணம் அக்காலத்திலிருந்துதான் பனை ஓலையில் எழுத்தாணி கொண்டு எழுதும் பழக்கம் ஏற்பட்டது. ஓலை கிழியாமல் இருக்க எழுத்துக்களை வளைத்து எழுதியதால் அவ்வெழுத்துக்கள் வட்டெழுத்துக்கள் என்றழைக்கப்பட்டன. இவ் வட்டெழுத்துக்கள் கி.பி. 8-9 நூற்றாண்டுகள் வரை புழக்கத்தில் இருந்தன. அது பழகக் கடினமாயிருந்ததாலும் கி.பி. 6-7ஆம் நூற்றாண்டிலிருந்து பல்லவர்கள் சமற்கிருத மொழிக்காகக் கிரந்த எழுத்துக்களை உபயோகித்ததாலும் வட்டெழுத்து வழக்கொழிந்து தற்காலத் தமிழெழுத்து புழக்கத்திற்கு வந்தது என்பர் அறிஞர்).

# துணை நூல்கள்

1. தமிழக வரலாறு- மக்களும் பண்பாடும், டாக்டர் கே.கே. பிள்ளை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2004.
2. தமிழ் வரலாறு, தேவநேயப் பாவாணர், தமிழ் மண் பதிப்பகம், சென்னை, 2000.
3. தமிழர் வரலாறு, தேவநேயப் பாவாணர், தமிழ் மண் பதிப்பகம், சென்னை, 2000.
4. முதற்றாய் மொழி, தேவநேயப் பாவாணர், தமிழ் மண் பதிப்பகம், சென்னை, 2000.
5. பிற்காலச் சோழர் சரித்திரம், T.V. சதாசிவ பண்டாரத்தார், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 1959.
6. மொழி நூல், மாகறல் கார்த்திகேயனார், சாரதா மாணிக்கம் பதிப்பகம், சென்னை, 2001.
7. தமிழ் எழுத்து வரிவடிவ வரலாறு.
8. ஜப்பானிய மொழியும்-தமிழும் சண்முகதாசு, மனோண்மணி.
9. பண்டைய இலங்கையில் தமிழும் தமிழரும் பரமு புட்பரட்ணம், இலங்கை.

**English**

1. The People and civilisation of Africa, H. Baumann, D. Westermann.
2. Ethnology of French Union-Andre, Leroi Giurrhan, Jean Poirier.
3. The Grammatical structure of Dravidian Languages, Jules Bloc.
4. Dravidian elements in Pheul-Liliane Homburger, Journal de la societe des Africanistes. No. 195, Paris, 1950.
5. The Telugu and Mande dialects, Journal de la societe des Africanistes no.195, Paris, 1950.
6. The Canara Bantou, a few elements common to the Egyptian and Dravidian languages and sibilants in Indo-African, Liliane Homburger.
7. Sumerian, a Dravidian language, Berkeley, 1965.
8. The Dravidian origin of Sumerian writing, Proceedings of International Conference of Tamil Studies, Kualalampur, 1966.
9. Nubian and Negro-African, Edwin H. Tuttle.

10. Kinship between the wolof and Dravidan languages, Cheik Tidiane N'Diaye.
11. Dravidian and Negro-African (Ethnic and Linguistic affinities) v. Upadhyaya Susheela, O.Ubadhyaya.
12. A Comparative grammar of the Dravidian languages, Robert Caldwell.
13. Polarity and Temporality of High-resolution Y chromosome distributions in India, American Journal of Human genetics, February 2006, 78 (2): 202-21.
14. Genetics and the Arya debate, Puratattva, Bulletin of Indian archaeological society, New Delhi, no.36, 2005-06, pp. 146-154.
15. The invasion that never was, Internet article, 2nd ed., Mysore.
16. Dravidian Linguistics; An introduction, Kamil V. Zvelebil, Pondicherry Institute of Linguistic and Culture, 1990, xxvi, 156p, (PILC publications), Pondicherry.
17. The genesis and growth of Dravidian, Trivandrum: Dravidian Linguistics Association, 1984, publication no.39.
18. Towards Proto-Elamo-Dravidian, Language 50: 89-101, Mc Alpin, David, 1974.
19. Elamite and Dravidian: Further Evidence of relationship, Current Anthropology, 16:105-115, McAlpin David, 1975.
20. Proto-Elamo-Dravidian: the evidence and its implications, Philadelphia, American Philosophical Society, 1981.
21. The Dravido-Altaic relationship, Journal of Tamil Studies, 1,1:35-39, Menges, Karl H 1969.
22. The Cradle that is India internet article by Subash Kak.
23. Linguistic evidence for an Indian origin of Indo-European, Premandra Priyadarshi, Dec. 2010.
24. Early Tamil Cultural influence in South East Asia by S.J. Sēgaram. Selected Writings 1988.
25. Hindu wisdom India and Egypt, Internet article.
26. Neolithic in Sri Lanka Internet article Scenic Srilanka.
27. Sinhalese history and Srilanka history, pre history.
28. Genetics rewrites Pacific prehistory, Internet article.
29. Old Tamil words in Marathi by Visvanath Khaire.

**French**

1. Affinites ethnolinguistiques entre dravidien et les Negro-africans, Bulletin de l'IFAN, 1 : 127-157, Ubadhyaya, P. Ubadhyaya Sp.
2. Histoire des Egyptes ouest-africaines, Alain Anselin, Paris-Kharthala, 1981.
3. Histoire de l'Inde, Alain Danielou.
4. Histoire de l'Inde, Jacques Dupuis, Editions Kailash, 1996.
5. La question peule, Alain Anselin, parris-Kharthala, 1982.
6. Sanscrit et Dravidien, Bulletin de la societe de linguistique de Paris no. 76, 1924, pp.1-20.

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113

## அண்மை வெளியீடுகள்

| | ரூ.பை. |
|---|---|
| இந்தியச் சூழலில் மொழிஇழப்பு ஒரு சமுதாய மொழியியல் பார்வை | 60.00 |
| நீறணி பவளக் குன்றம் | 35.00 |
| உலகப் பகுத்தறிவு நீரோட்டத்தில் பெரியார் | 35.00 |
| கலீலியோ முதல் கலாம் வரை | 35.00 |
| குலோத்துங்கன் கவிதைகள் ஒரு கோபுர தீபம் | 60.00 |
| தமிழறிஞர் அடிகளாசிரியரின் சிறுவர் இலக்கியப் பாடல்கள் | 30.00 |
| நாமக்கல் கவிஞரின் தமிழ்ப்பணி | 30.00 |
| ஈழத்தில் கண்ணகி கலாச்சாரம் | 30.00 |
| சிறுபஞ்சமூலம்- ஒரு சமூகவியல் பார்வை | 30.00 |
| சங்கத் தமிழ் பகுதி 1 | 100.00 |
| சங்கத் தமிழ் பகுதி 2 | 100.00 |
| சங்கத் தமிழ் பகுதி 3 | 115.00 |
| சங்கத் தமிழ் பகுதி 4 | 130.00 |
| சங்கத் தமிழ் பகுதி 5 | 110.00 |
| ம.பொ.சி.யின் வாழ்க்கை வரலாற்று இலக்கியங்கள் | 60.00 |
| தொல்காப்பியம், சங்க இலக்கியம் பதிப்பும் பதிப்பாளரும் | 160.00 |
| இந்தி நாடகப்பனுவல் (ஆடிமாதத்தில் ஒரு நாள்) | 50.00 |
| திராவிட இயக்கத்தில் அன்னை மணியம்மையின் பங்கு | 40.00 |
| பண்பாட்டுப் பார்வையில் திருமந்திரம் | 70.00 |
| காரைக்கால் அம்மையார் பாடல்கள் ஓர் ஆய்வு | 40.00 |
| Freudism in the Novels of James Joyce and T.Jankiraman: A comparative study | 125.00 |
| இலக்கணத்தொகை யாப்பு பாட்டியல் | 290.00 |
| தென்கிழக்கு ஆசியா நாடுகளில் தமிழ்ப்பண்பாடு | 310.00 |
| பதிற்றுப்பத்து மூலமும் ஆராய்ச்சிப்புத்துரையும் | 170.00 |
| தமிழ் மொழிபெயர்ப்பு முன்னோடிகள் | 185.00 |
| மனிதப் புனிதர் கக்கன் | 110.00 |
| மொழிபெயர்ப்பு:ஒரு கவின்கலை | 75.00 |
| மூவர்தமிழ் மூன்று பார்வைகள் | 50.00 |
| காமன்வெல்த் நாடுகளின் கவிதைகள் | 100.00 |
| அறிஞர்கள் பார்வையில் பேரறிஞர் அண்ணா | 145.00 |
| அறிஞர் அண்ணா-மொபசான் சிறுகதைகள்-ஒப்பாய்வு | 160.00 |
| இராசேந்திர சோழன் வெளியிட்ட எசாலம் செப்பேடுகள் | 55.00 |
| கடலடியில் தமிழர் நாகரிகம் | 55.00 |
| கடற்பொறியியற் கலைச்சொற்கள் (குறுங்கலைக்களஞ்சியம்) | 150.00 |
| சங்க இலக்கியத்தில் சமூக ஆய்வுகள் | 55.00 |
| சங்க அகப்பாடல்கள் தோழி கூற்று | 170.00 |
| தமிழ் நாடக மொழியும் வரலாறும் | 110.00 |
| வா.செ.கு. என்ற ஆளுமையாளர் | 50.00 |
| உ.வே.சா.வின் குறுந்தொகை உரைத்திறன் | 45.00 |
| மருதத்தில் மக்கள் வாழ்வியல் | 40.00 |
| பழந்தமிழும் கிளைமொழிகளும் | 65.00 |

---

**718 உலக மொழிகளில் தமிழ்ச் சொற்களும் இலக்கணக் கூறுகளும் 85.00**